


# ஊ ஊஹ்ற... ஊஊஹ்ற

ஒரு டீஸ்பூன் அளவு உட்வார்ட்ஸ் 'கிரைப் வாட்டர்', உங்கள் குழந்தை அலறுவதை நிறுத்திவிட்டு ஆனந்தக் கனவு காண ஆரம்பித்து விடுகிறது. குழந்தையின் சிறு கோளாறுகள்—வயிற்றில் வாயுக் கோளாறு, பல்வலி போன்றவைகளிலிருந்து சுகம்பெற உட்வர்ட்ஸினால் மட்டும்தான் முடியும். ஒரு நூற்றாண்டுக்கு மேலாக, தாய்மார்கள் உட்வர்ட்ஸ் உபயோகித்திருக்கிறார்கள். நல்ல ஆரோக்கியமான குழந்தைகளை வளர்த்திருக்கிறார்கள்.

## உட்வர்ட்ஸ் 'கிரைப் வாட்டர்'

**100 வருஷங்களுக்கு மேலாக உலகெங்கிலும் உபயோகிக்கப்படுகிறது.**



அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகள்: ஹெர்பர்ட்ஸன்ஸ் லிட். பம்பாய், கல்கத்தா & லக்னோ • டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ. மதராஸ் • எம். ஜி. ஷஹானி & கோ. (டில்லி) பிரைவேட் லிட்., டில்லி.

*Alvars AT 341-TM.*

# கல்கி



படவிளக்கம் 72-ம் பக்கம் பார்க்க...

## பொருளடக்கம்

சோபகிருது. ஆவணி 16உ    செப்டம்பர் 1உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




# தீயினால் சுட்ட வடு மாறாது

புகைபிடிப்போருக்கு அழகு, பற்ற வைத்த சிகரெட்டை மேஜை போன்ற சாமான்கள் மீதோ, அலங்காரப் பொருள்களை ஒட்டியோ வைக்காமலிருத்தலே. சாம்பலைப் போக்குவதற்கு ஆஷ்ட்ரே இருக்க, வீணே மேஜை மீது தீய்ந்த வடுக்களையும், பளபளப்பான தளங்கள் மீது பழுப்பு நிறச் சுவடுகளையும் விளைவிப்பானேன்?

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

## பனாமா

Panama

20

CIGARETTES




விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.,
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 610 TAM

Grants' Advtg.



மலர் 23

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 5

# சிறுபான்மையினரின் ரட்சகர்

'காஷ்மீரப் பிரச்னையில் சர்க்காரின் கொள்கைக்கு மாறாக எதைச் சொன்னாலுமே அது தேசத்துரோகமாகக் கருதப்படுகிறது' என்று சுதந்திர வாரக் 'கல்கி' இதழில் குறிப்பிட்டிருந்தோம். இது எவ்வளவு உண்மை என்பது லோகசபையில் ஸ்ரீமான் கடில்கர் என்ற மகானுபாவர் ராஜாஜியின் மீது சுமத்தியுள்ள அபவாதத்திலிருந்து பளிச்சென்த் தெரிகிறது.

ஐ. நா. மேற்பார்வையிலும் இந்தியா பாகிஸ்தான் இரண்டின் சகாயத்திலும் காஷ்மீரத்தில் நல்லாட்சியை நிறுவலாம் என்று ராஜாஜி கூறியுள்ள யோசனையால் கொதிப்படைந்து விட்டார் ஸ்ரீமான் கடில்கர். "ராஜாஜி என்றுமே தேசத்தைத் துண்டாடும் மனோபாவமுள்ளவர்; பிரிவினை வாதியாகிய இவர் சீனாவுடன் கூட நாட்டைப் பங்கு போட்டுக் கொள்வார்" என்று வாய் கூசாமல் நிந்தித்திருக்கிறார் இந்தப் புண்ணிய புருஷர். சீனாவுடன் இன்னமும் சமாதானப் பேச்சு பேச எண்ணுபவர் தங்கள் தலைவர் தான் என்பதை மறந்து இப்படித் தூற்றியிருக்கிறார் கடில்கர்.

பாகிஸ்தான் பிரிவு மிகவும் அவசியமாகி விட்டது; அப்படிப் பிரிக்காவிடில் தேசம் ரத்தக் களறியாகும் என்று ராஜாஜி தீர்க்கதரிசனத்துடன் எல்லாத் தலைவர்களுக்கும் முன்பு கூறியதை மனத்தில் கொண்டுதான் இப்படிப் பேசியிருக்கிறார் ஸ்ரீமான் கடில்கர். ராஜாஜியின் புத்திமதிப்படி பாகிஸ்தான் பிரிவினைக்குக் காங்கிரஸ் இணங்காததால் நாட்டில் எத்தகைய பயங்கரமான ஹிந்து முஸ்லிம் மோதல் ஏற்பட்டது என்பதை மக்கள் இன்னும் மறக்கவில்லை. பாகிஸ்தான் பிரிவினை ஏற்படத்தான் செய்தது. ஆனால் ராஜாஜி கூறியபடி சரியான சமயத்தில் உசிதமான முறையில் பிரிவினை நிகழாததால் தேசம் ஆயிரமாயிரம் மக்களைப் பலி கொடுத்தது. ஆளும் கட்சியின் பெஞ்சியில் உட்கார்ந்திருக்கிறோம் என்ற மமதை ஒன்றின் காரணமாக எதை வேண்டுமானாலும் மறைத்தும், மறுத்தும் பேசலாம் என்ற நியதி ஏற்பட்டிருப்பது நாட்டின் மகத்தான துர்ப்பாக்கியமாகும்.

எதிரி தூஷிப்பதையும் பூஷிப்பதாகக் கருதுவர் பெரியோர் என்பார்கள். இதற்கேற்ப கடில்கரின் குற்றச்சாட்டிலும் ஒரு சத்தியம் உள்ளது என்கிறார் ராஜாஜி. 'என்றுமே சிறுபான்மையினருக்கு இழைக்கப்படும் தீமையை எதிர்க்கும் மனப்பான்மை என்னுடையது: இதற்கே பிரிவினை வாதம் என்று கடில்கர் பெயர் சூட்டியுள்ளார்' என்கிறார் அவர்.

எண்ணிக்கை பலத்தையோ, இதர சக்திகளையோ உபயோகித்துச் சிறுபான்மையினரை நசுக்குவதை ராஜாஜி எப்போதுமே எதிர்த்து வருகிறார் என்பதுதான் உண்மை. நாடு முழுவதன் நலனையும் கருதும் நல்ல பெரும் தலைவர் ராஜாஜி எனினும், முக்கியமாக அவர் சிறுபான்மையினரின் ரக்ஷகராகவே விளங்குகிறார். சிறுபான்மையினர் என்ற ஒரே காரணத்தால் நிலச் சொந்தக்காரர்கள், வியாபாரிகள், தொழில் துறையினர், ஹிந்தி பேசாதவர்கள் ஆகியோருக்குக் கொடுமை விளைவிக்கும் சட்டங்களை ஆட்சியினர் கொண்டு வந்த போதெல்லாம் ராஜாஜி போராட்டத்தில் தீவிரமாக இறங்கியிருக்கிறார்.

சிறுபான்மையினரைப் பலவந்தப்படுத்தி 'ஒற்றுமை' என்ற பொய் வேஷத்தை சிருஷ்டிக்கும் எந்தக் காரியத்துக்கும் ராஜாஜி ஒப்புதல் அளிக்க மாட்டார். இதுவே பாரத நாகரிகமுமாகும். நமது மிதாக்ஷர நீதி முறையை அளித்த ஆன்றோர், குடும்ப

மொன்றில் எந்த ஓர் அங்கத்தினரையும் வலுக் கட்டாயப்படுத்தி வைத்துக் கொள்வதை ஆட்சேபித்திருக்கிறார்கள். ஓர் இடத்தில் அகப்பட்டுக் கொண்டால் அங்கிருந்து வெளியேற வழியே கிடையாது என்ற நிலையில் கிடைக்கும் 'ஒற்றுமை' உண்மையானதல்ல; அது அடிமைத்தனம்தான். அவசியம் நேரிடும்போது வெளியேறச் சுதந்திரம் பெற்றவர்கள் ஒன்றாக இணைந்திருப்பதுதான் உண்மையான ஒற்றுமை.

'காஷ்மீர தேசம் நம்முடைய நஞ்செய்யுமல்ல புஞ்செய்யுமல்ல; பாகிஸ்தானுக்குப் பாத்தியப்பட்ட வயற்காடுமல்ல. காஷ்மீர் என்பது ஒரு மக்கள் கூட்டம். இந்தியாவோ பாகிஸ்தானோ தன் இஷ்டப்படி அவர்கள் விஷயமாக முடிவெடுக்கலாகாது' என்பதே ராஜாஜியின் கருத்து. காஷ்மீர மக்கள் சமீப காலம் வரை சுதந்திர மன்னர் ஒருவரின் ஆட்சியில் தனி ராஜ்யத்தினராக வாழ்ந்தவர்கள். அவர்கள் இந்தியாவுக்கும் சரி, பாகிஸ்தானுக்கும் சரி, அடிமைப்பட்டவர்கள் அல்ல. எனவே அவர்களின் கருத்தை ஒட்டித்தான் காஷ்மீரப் பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும். அவர்களின் உண்மையான கருத்தை அறிய எத்தனையோ குந்தகங்கள் நேரலாம் என்று பாரத சர்க்கார் அஞ்சுகிறது. இது நியாயமான அச்சம்தான். ஆனால் இது காரணமாக காஷ்மீர் மக்களின் கருத்தை அறிய எந்த முயற்சியும் எடுக்காமல் அவர்களை இருத்திக்கொள்ளப் பார்ப்பது பலவந்த முறை. இதை ஆட்சேபிக்கும் ராஜாஜியின் மனோபாவத்தைப் பிரிவினை வாதம் என்றால், அன்பர் கடில்கருடைய மனோபாவமும் அவரொத்த ஆட்சியாளரின் மனோபாவமும் பலாத்காரமாகும்.

## நம்பிக்கையில்லாத் தீர்மானம்

நம்பிக்கையில்லாத் தீர்மானத்துக்குப் பிரதமர் பதில் கூறிய பிறகும் இன்று நாட்டில் நாலு பேர் கூடுமிடங்களில் எல்லாம் ஆசாரிய கிருபளானி, மஸானி, லோகியா இவர்கள் பேசிய பேச்சுக்களையும், கருத்துக்களையும் பற்றித்தான் பேசி வருகிறார்கள். வழக்கம் போல் பிரதமரின் பதில் வெறும் மேடைப் பேச்சாக முடிந்ததே அன்றி, எதிர்க் கட்சித் தலைவர்கள் எழுப்பிய கேள்விகளுக்குச் சமாதானம் சொன்னதாக இல்லை. முக்கியமாக மஸானியவர்களின் வாதங்களுக்குப் பதிலே கிடையாது. தினப் பத்திரிகைகள் எதிர்க் கட்சித் தலைவர்களுக்கு இடம் தந்ததை விட அதிகமாகவே பிரதமருக்கு ஒதுக்கித் தங்கள் பக்தியைக் காட்டிக் கொண்டன. ஆனால் அதுவே, பிரதமரின் சிந்தனை எவ்வளவு குழப்பமடைந்த நிலையில் இருக்கிறது என்பதைக் காட்டியது.

ராணுவச் செலவைக் குறைக்க வேண்டும் என்று முன்பு ஆசாரிய



# ஊர்வம்பு




பெரியார் அநாதைபோல் உணர்கிறார்










சீனுவின் துக்கம்

கிருபளானி பேசியதை எடுத்துக் காட்டி அவர் முன்னுக்குப் பின் முரணாகப் பேசுகிறார் என்று ஸ்ரீ கிருஷ்ண மேனன் தாக்க முயன்ற போது கிருபளானி, ''ஐயா, இதற்கும் நீங்கள்தான் காரணம். நீங்கள் 'ஹிந்தி சீனி பாய் பாய்' என்று அடித்த கூத்தில் சீனு நம்முடன் சிநேகமாகத்தான் இருக்கிறதோ என்று நினைத்து விட்டோம்!'' என்று மண்டையில் அடித்தாற்போல் பதில் கூறினார்.

''கிருஷ்ணமேனன் ஒரு பாவமும் அறியாதவர், பிரதமரின் கொள்கையைத் தான் அவர் கடைப்பிடித்தார் என்றால், பிரதமர் ஏன் தாம் ராஜிநாமா செய்யாமல் கிருஷ்ண மேனனின் ராஜிநாமாவை ஏற்றுக்கொண்டார்?'' என்று கிருபளானி சபையைப் பார்த்துக் கேட்ட போது, அதற்குமுன் கூச்சல் போட்டுக் கொண்டிருந்த காங்கிரஸ் கூட்டம் வாயடைத்து அமர்ந்துவிட்டதாகப் பத்திரிகை நிருபர்கள் எழுதியிருக்கிறார்கள்.

டாக்டர் லோகியா, ''பிரதமர் தாம் இழைக்கும் குற்றங்களுக்குக் கொஞ்சமும் வருத்தப்படாததுதான் அவரது பெருங் குற்றம்!'' என்று கூறினார். இதற்கும் காங்கிரஸ் கட்சியில் யாருமே பதில் சொல்லவில்லை.

காங்கிரஸ் கட்சி வலுவாய்ந்த மெஜாரிட்டியா யிருக்கும் மன்றத்தில் எதிர்க் கட்சிகளின் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறும் என யாரும் எதிர்பார்க்க வில்லை. என்றாலும், ஸ்ரீ மஸானி அவர்கள் இந்த மெஜாரிட்டி - மைனாரிட்டியிலுள்ள ஒரு விஷயத்தை விளக்கினார். ஆளும் கட்சியினர் நாட்டில் மொத்தம் பதிவான வாக்குகளில் 45 சதவிகிதத்தைப் பெற்றிருப்பதாகவும் எதிர்க் கட்சியினர் 39 சதவிகிதத்தைப் பெற்றிருப்பதாகவும் கூறினார். அதாவது விகிதாசார பிரதிநிதித்துவ முறை (Proportional representation) அநுசரிக்கப்பட்டால், ஆளும்கட்சியில் உள்ள 361 பேருக்கு எதிராக எதிர்க் கட்சியில் 316 பேர்கள் இருப்பதாகக் கருத வேண்டும் என்றார். சர்க்காரின் தவறுகளை மக்களுக்கு எடுத்துக் காட்டுவதுதான் தீர்மானத்தின் நோக்கம். தீர்மானம் நிறைவேறாவிடினும் அந்த நோக்கம் நிறைவேறி விட்டது. மக்களுக்குப் பெரும் விழிப்பை ஏற்படுத்தி விட்டது.













ஸ்காட்லாந்தில் ந
பெறும் அகில உலக இ
கலை விழாவுக்குச் செல்
ஸ்ரீமதி எம். எஸ். க
லட்சுமி அவர்களுக்
ஸ்ரீ சதாசிவம் அவர்க
கும் 17-8-63 அன்று இ
தர்மபிரகாசில் கல்கி -
ராஜ்யா காரியாலயத்தி
ஓர் இனிய விருந்துபசா
நடத்தி வழியனுப்பி வை
தனர். ஆயிரம் பேரு
மேல் கலந்து கொண்
இவ்வைபவத்தில்,




ராஜாஜிக்கு வரவேற்பு. 2. திரு பாலக்க
மணி தமது வாழ்த்துக்களைச் சதாசி
தம்பதியினருக்குத் தெரிவிக்கிறார். 3. தரும
ஆதீனம் மகா சந்நிதானம் சார்பில் ஸ்ரீ சே
சுந்தரத் தம்பிரான் அவர்கள் பொன்னா
கலை வழங்கினார். 4. ஸ்ரீமதி மே












தெஹரன்ஸ்மன் வருகிறார். 5 திரு டி. எல். வேங்கடராம அய்யரின் உரை. 6. நீதிபதி அனந்தநாராயணன் அவர்களை கல்கி ஜெனரல் மானேஜர் திரு வைத்தியநாதன் வரவேற்கிறார். 7. எடின்பரோ செல்லும் கலைஞர்களுடன் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்களும் ராஜாஜியும். 8. சென்னையிலுள்ள மே. ஜெர்மானிய ஸ்தானிகராலய அதிகாரி ஸ்ரீ ஷிலீகரும் கல்கி ஆசிரியரும். 9. சென்னை போர்ட் டிரஸ்ட் தலைவர் ஸ்ரீ என். சுப்பிரமணியம் ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்குத் தமது வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறார். 10. சதாசிவம் தம்பதியுடன் ராஜாஜி. 11. ஸ்ரீமதி டி.கே. பட்டம்மாளின் மகிழ்ச்சி. 12. ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் பேசுகிறார். 13. ராஜாஜியின் ஆசி. 14. கலாக்ஷேத்திரத்தின் நிர்வாகஸ்தர் ஸ்ரீ சங்கர மேனனும் ஸ்ரீ பூதூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளும். 15. ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம் பேசுகிறார். 16. ராஜாஜியின் சொற்பொழிவு. 17. நீதிபதி கே. எஸ். வேங்கடராமன் சதாசிவம் தம்பதியினரை வாழ்த்துகிறார்.






















# போகிற போக்கில்..!



**சிட்டுக்குருவி**

**1963**-ல் நடந்த இரு அரசியல் அதிசயங்களைக் கூறு என்றால் நேருஜி நிகழ்த்தியிருக்கும் இரு அதிசயங்களைத்தான் அரசியல் மாணவர்கள் கூறுவார்கள்.

அதில் ஹிந்தியை, ஹிந்தி தெரியாத மக்கள் விரும்புகிற வரையில் திணிக்க மாட்டேன் என்று வாக்குறுதியை விளம்பரமாகக் கூறிவிட்டுப் பிறகு வாபஸ் வாங்கிய நிகழ்ச்சியை முதல் அதிசயமாகக் கூறுவார்கள். இரண்டாவது அதிசயம் அமெரிக்க ரேடியோவுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை மாற்ற முயலுவது.

அமெரிக்க ரேடியோ ஒப்பந்தம் பற்றி நேருஜி கொடுத்திருக்கும் விளக்கம் யாரைத் திருப்திப்படுத்துமெனத் தெரியவில்லை. ஒப்பந்தம் கையெழுத்தாகும் முன்னர் இவரிடம் தகவல் கொடுத்தார்களாம். பிறகுதான் கையெழுத்தாகியிருக்கிறது. கையெழுத்துப் போட்டுவிட்ட பின்னர்தான் அதில் உள்ள குறைகள் வெளிப்பட்டனவாம். எனவே 'புனராலோசனை' செய்கிறேமென்று நேருஜி கூறுகிறார். புனராலோசனை என்றால் என்ன அர்த்தம் தெரியுமா? முடிந்துபோன விவகாரத்தை எடுத்து வைத்துக் கொண்டு திரும்பவும் பேசுவது என்பது! இந்த விவகாரம் அமெரிக்காவில் பெருத்த ஆத்திரத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இந்த ஆத்திரம் எளிதில் அடங்குமெனக் கூறுவதற்கில்லை. இந்தியாவுக்கு அபரிமிதமாக உதவவேண்டுமெனக் கூறும் அமெரிக்கரையெல்லாம் இது தர்ம சங்கடத்தில் வைக்கும். இதனால் அமெரிக்காவுக்கு நஷ்டமில்லை. நமக்குத்தான்.

ஃ ஃ ஃ

கிழக்கு ஆசிய நாடுகளிலும் ஆப்பிரிக்காவிலும் இந்தியாதான் சீனா மீது படையெடுப்பதாகப் பொய்ப் பிரசாரம் நடைபெறுகிறதாம். இதை அங்குள்ள இந்திய ஸ்தானிகராலயங்கள் வெற்றிகரமாக மறுக்க முடியவில்லை. இதனால்தான் வெளிநாட்டிலாகாவைச் சேர்ந்த ஸ்ரீமதி லட்சுமி மேனனும், ஆர்.கே. நேருவும் ஒவ்வொரு தேசமாகச் சுற்றி வந்தார்கள். இப்படி ஆட்கள் போய் நடக்கிற காரியமா இது என்பதைக் கவனிக்க வேண்டும். மேலும் சீனா இப்படி ஆட்களை அனுப்பிப் பிரசாரம் செய்யவில்லை. தனது பிரசாரத்தை ரேடியோ மூலமும் துண்டுப் பிரசுரங்கள் மூலமும் ஓயாமல் செய்கிறது. இதை முறியடிக்க வேண்டும் என்றால் இந்தியாவுக்கு மிகச் சக்தி வாய்ந்த ரேடியோக் கருவிகளும் மின்சார சாதனங்களும் இருந்தாக வேண்டும். இந்தக் குறையைத்தான் அமெரிக்க ரேடியோ ஒப்பந்தம் ஈடு செய்கிறது. இதை ஆட்சேபிக்கிறவர்கள் இந்தக் குறை நிரந்தரமாக இருக்க வேண்டும் என நினைக்கும் கம்யூனிஸ்டுகள். இவர்களுக்காக நேருஜி கையெழுத்தான ஒப்பந்தத்தை மீறுவது ஆபத்து. அப்படி மீறினால் நாளை கம்யூனிஸ்டுகளைக் கட்டிப் பிடிக்க முடியாது. ருசி கண்ட பூனை உறிக்கு உறி தாவும் என்பது போல் அவர்களது கோரிக்கைகளை அடுக்கிக் கொண்டே போவார்கள்.

ஃ ஃ ஃ

ஆந்திரக் கம்யூனிஸ்டான திரு சுந்தரய்யா திரு சஞ்சீவி ரெட்டி மீது அனல் கக்கப் பேசியிருக்கிறார். இதைப் பார்க்கும்போது அன்னமிட்ட வீட்டையே இடிப்பவர்கள் கம்யூனிஸ்டுகள் என்பது உறுதிப்படுகிறது. ஏனெனில் சுந்தரய்யாவையும் அவரது சகாக்களையும் விடுதலை செய்தது திரு சஞ்சீவி ரெட்டி. அவர்களது சீன பக்தி மாறாதிருக்கும்போதே எதற்காக விடுதலை செய்தார் என்று பொது மக்கள் கேட்கிறார்கள். இக்கேள்விக்கு இதுவரை எந்த மாகாண அரசும் பதில் சொல்லவில்லை. பதில் சொல்லுவார்கள் என்றும் எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் காரணம் ரகசியமானது. அதாவது இவர்களைக் கொண்டு சுதந்திரக் கட்சி போன்ற எதிர்க் கட்சிகளை மடக்குவதுதான் அந்த மாகாண மந்திரி சபைகளின் அந்தரங்கம். ஆகவே மந்திரிகளெல்லாம் இன்று வோட்டப் புறப்பட்டிருக்கும் பூதத்தைக் கண்டு திக்பிரமை கொண்டிருக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

பதினேழாவது திருத்தம் யாரைப் பாதிக்கும் என்பதற்கு திரு லோபோ பிரபுவும், திரு வி. பி. மேனனும் ஒரு கணக்குத் தருகிறார்கள். அதாவது இந்தியாவின் மொத்த ஜனத்தொகையில் 100க்கு 82 பேர் விவசாயத்தை நம்பி வாழ்கிறவர்கள். இவர்களில் 100க்கு 25 பேருக்கு ஓர் ஏக்கரும் ஒன்றரை ஏக்கரும்தான் உள்ளன. இன்னும் 25 பேருக்கு 5 ஏக்கர் வரை இருக்கிறது. பாக்கியுள்ள 50 பேரில் 5 பேருக்கு 5-க்கு மேற்பட்ட ஏக்கர் இருக்கிறது. மீதியுள்ள 45 பேருக்கு நிலமே இல்லை. இந்தத் திருத்தம் முதலில் சொன்ன இரு சாராரை அதாவது 50 சத விகிதத்தினரைப் பாதிக்கும் என்றார் திரு மேனன். அவரையொட்டிப் பேசிய திரு லோபோ பிரபு நிலமே இல்லாத 45 பேரையும் இனி இந்த ஜன்மத்தில் நிலம் பெற முடியாதபடி இத்திருத்தம் பாதிக்கும் என்பதை அழுத்தம் திருத்தமாகச் சேலம் மகாநாட்டில் கூறினார். இந்த விவரங்களைக் கேட்ட பிரதிநிதிகள் காங்கிரஸின் ஏழைகள் பக்தியை நன்றாகப் புரிந்து கொண்டார்கள். அதோடு இந்தத் திருத்தத்தில் வீசும் கம்யூனிஸ நெடியையும் நன்கு உணர்ந்தார்கள்.




## 21

திருமாலின் நாமங்களைப் பக்தியோடு ஓதினால் போதும். எல்லா நலன்களும் தாமே வந்தடையும் என்கிறார் ஆழ்வார்.

தேசும் திறலும்
திருவும் உருவமும்

[தேசு - ஒளி, பிரகாசம்; அதாவது கீர்த்தி. திறல் - ஆற்றல். திரு - ஐசுவரியம். உரு - அழகு.]

மக்களிடையே திருமாலின் நாமத்தை ஓதும் அடியார்களுக்குத் தேஜஸ், ஆற்றல், செல்வம், அழகு ஆகியவற்றோடு.

மாசில் குடிப்பிறப்பும்
மற்றவையும் —

[மாசில் - களங்கம் இல்லாத. குடிப்பிறப்பும் - நற்குலப் பிறப்பும். மற்றவையும் - மற்ற எல்லா நலன்களும்.]

— பேசில்
வலம்புரிந்த வான்சங்கம்
கொண்டான்பேர் ஓத
நலம்புரிந்து சென்றடையும்
நன்கு!

[வான்சங்கம் - தெய்விகச் சங்கம். வலம்புரிந்த வான்சங்கம் - வலம்புரிச் சங்கை. கொண்டான் - கையிலே ஏந்தியவனை திருமாலுடைய. பேர்ஓத - திருநாமங்களை ஜபித்த மாத்திரத்தில். நன்கு - பூரணமாக. நலம்புரிந்து சென்றடையும் - மேற்சொன்ன சிறப்புக்கள் அனைத்தும் தாமாகவே தேடி வந்தடையும். பேசில் - ஆராய்ந்து சொல்லப் போனால்.]

ஆராய்ந்து சொல்லப் போனால் திருமாலின் நாமங்களை ஜபித்த மாத்திரத்தில் இத்தனை நலன்களும் தாமாகவே நம்மை வந்து அடையும் என்று பொருள்.

தேசும் திறலும்
திருவும் உருவமும்
மாசில் குடிப்பிறப்பும்
மற்றவையும் — பேசில்
வலம்புரிந்த வான்சங்கம்
கொண்டான்பேர் ஓத
நலம்புரிந்து சென்றடையும்
நன்கு!

'பேசில்' என்று தனியாகச் சொல்வதற்குக் காரணம்:— மக்கள் ஆசைப்பட்டு அலையும் இசையும், வினைத்திட்பமும், செல்வமும், அழகும், இவையெல்லாம் சர்வேசுவரனுடைய வரங்கள்! அவனுடைய அருளைப் பெற்றால் இவை அனைத்தும், நம்முடைய வேறு முயற்சியின்றி நம்மைத் தேடி வந்து கூடும். இது உண்மை. இதை மக்கள் அறியாமல் வீணாகத் துயரப்படுகிறார்கள் என்று ஆழ்வார் எடுத்துக் கூறுகிறார். உண்மையை அறிய விரும்பினீர்களானால் இதுவே உண்மை என்று உபதேசிக்கிறார். சொல்லப் போனால் 'பேசில்' என்றதன் பொருள் இது! தனிச்சீரில் நிற்கும் 'பேசில்' என்ற சொல்லில் இந்த வேகம் அடங்கி யிருக்கிறது!





பிச்சமணியின் சட்டை நனைந்திருப்பதைக் கண்டு
திடுக்கிட்டுத் துள்ளினார் ராமதுரை. பழைய மாடல்
ஆஸ்டின் காரைத் தெருவில் தேங்கி நிற்கும் நீரின்மேல்
ஓட்டிச் சென்றால் தெரு ஓரத்தில் நிற்பவர்கள் மட்டு
மல்ல, உள்ளே அமர்ந்திருப்பவர்களும் நனையவேண்டி
யதுதான் என்பதை உணர்ந்திருந்தார் அவர். பேர
னுக்கு உடம்புக்கு ஆகாதே என்ற கவலையுடன்,
''டேய், உன் சட்டை ஈரமாக இருக்கிறதே, என்
னடா? உன் காரைத் தண்ணீர் மேல் விட்டடிச்சியா?'
என்று விசாரித்தார்.

''இல்லே. தாத்தா....!'' என்று பிச்சமண
ஏதோ உற்சாகமாகச் சொல்லஆரம்பித்தான்

''டேய், முதல்லே நீ போய் டிரஸ் மா
றிக் கொண்டு வா! அப்புறம் நீ சமாதான

# குண்டு மல்லிகை



சொல்லலாம்! ஈரத்தோடு இருந்தால் உன் உடம்புக்கு ஜலதோஷம் பிடித்துக் கொள்ளும்!'' என்று பதறிய மேஜர் ராமதுரை, ''உன் சட்டையை உடனே கழற்றி எறி, போடா, நான் சொன்னது உன் காதில் விழவில்லே. போ, சீக்கிரம்!'' என்று அதட்டியவராய்த் தம் பேரனைப் பிடித்து அவன் மாடியறையை நோக்கித் தள்ளினார்.

''இதோ, இரண்டே நிமிஷத்தில் வந்துவிடுகிறேன், தாத்தா!'' என்று கூவிய பிச்சுமணி மாடிப் படிகளில் குடுகுடுவென்று ஏறி ஓடினான். அவனுடைய அறைக்குள் புகுந்ததும் அவனை அறியாமலே மறுபடியும் உற்சாகமாக அவனுடைய வாய் மிருதுவாகச் சீட்டியடிக்க ஆரம்பித்தது. அந்த இன்னிசையின் பின்னணியிலேயே அவன் பைஜாமாவும், புதுச் சலவைச் சட்டையும் அணிந்துகொண்டு மல்லிகைப் பூவையும் மறந்துவிடாமல் எடுத்துத் தன் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு நிலைக் கண்ணாடியின் முன்பு நின்று அழகு பார்த்துவிட்டு ஐந்து நிமிஷங்களில் ராஜாக் காளை போல் திரும்பி வந்து, தன் தாத்தாவோடு சேர்ந்து வட்டமேஜை முன் சாப்பிட அமர்ந்தான்.

''இப்போது சொல். உன் சட்டையின் ஒரு புறம் எதனால் ஈரமாயிற்று? உன் கார் தண்ணீரை வாரியடித்ததா? சமுத்திரத்து அலையில் பட்டிக்காட்டான் போல் நின்றாயா? கார்ப்பரேஷன் குழாயிலே தண்ணீருக்காகப் பயில்வான் போல் குஸ்தி போட்டாயா?'' என்று மேஜர் ராமதுரை சரமாரியாகக் கேள்விக் கணைகளைத் தொடுத்தார்.

''அதெல்லாம் இல்லே தாத்தா!'' என்று சிறிது முகம் சிணுங்கிய பிச்சுமணி, ''தாத்தா!... தெருவில் மழை பெய்தது!'' என்று மெல்ல ஆரம்பித்தான்.

''என்னடா, மழை பெய்யாததாலே மின்சார வெட்டு என்று பேப்பர்க்காரன்

அரு. ராமநாதன்

போட்டிருக்கிறான். நீ என்னவோ மழை பெய்தது என்கிறாய்? பொய் சொல்ல வேறு கற்றுக் கொண்டாயா?''

''இல்லே, தாத்தா! நிஜமாகத்தான் மழை பெய்தது. அதுவும் கிராமணித் தெருவில் மட்டும்தான் மழைபெய்தது!''

''அது எப்படியடா ஒரே தெருவில் உன் சட்டையின் ஒரு புறம் மட்டும் மழை பெய்தது?''

''அது அதிசய மழை, தாத்தா! பித்தளைக் குடத்திலிருந்து பெய்தது!'' என்றான் பிச்சுமணி உமாவைப் பற்றிய நினைவின் உற்சாகத்தோடு.

குடம் என்ற வார்த்தையைக் கேட்டதுமே மேஜர் ராமதுரைக்குப் பிடிக்கவில்லே. பெண் வர்க்கத்தையே வெறுக்கும் அவர் பெண்கள் உபயோகிக்கும் குடம், குத்து விளக்கு, குங்குமச் சிமிழ் முதலான பாத்திரம் பண்டங்களைக் கூட அடியோடு வெறுப்பார்!

''என்னடா, புதுசாகக் குடக் கதை?'' என்று கிழவர் பரபரப்புடன் கேட்டார்.

பிச்சுமணி நாய்ச் சண்டையையும் அதன் முடிவையும் மட்டும் தாத்தாவிடம் விவரித்தான்.

''டேய், பையா! நான் அப்போது முதல் கவனித்துக் கொண்டிருக்கிறேன். உன்னிடமிருந்து ஒரு புது வாசனை வருகிறதே, என்னடா அது?'' என்று மேஜர் ராமதுரை வியப்புடன் கேட்டார்.

''மல்லிகைப் பூ வாசனை தாத்தா!'' என்றான் பிச்சுமணி உமாவைப் பற்றிய உற்சாகக் கிறுகிறுப்போடு.

''ஓஹோ! அத்தர் சென்ட் கூடப் பூசிக்கொள்ளக் கற்றுக் கொண்டிருக்கிறாயா?. டேய், சின்னப் பையன், பெரிய மைனர் மாதிரித் திரியப் பார்க்கிறாயோ?'' என்று மேஜர் கத்தினார்.

பிச்சுமணி புன்முறுவல் பூத்துக் கொண்டே, ''இது சென்ட் இல்லே, தாத்தா! அசல் குண்டுமல்லிகை!'' என்றான்.

கிழவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. பூக்களைப் பெண்கள்தான் வாங்குவார்கள்! தம் பேரனுக்கு மல்லிகைப் பூவின் மீது புதிதாகப் பிரியம் எப்படி ஏற்பட்டது என்பது அவருக்குப் புரியவில்லே. அதனால் அவர் குழம்பியபடி பிச்சுமணியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். அந்த முகத்தில் அலாதியான ஒரு குதூகலமும் என்றைக்கும் இல்லாத வழக்கமாக ஒரு புதுக் களையும் குடி கொண்டிருந்தன.

தாத்தாவும் பேரனும் ஒரு வழியாகத் தங்கள் ஆகாரங்களை — அதாவது இளமையும் முதுமையும் ஜீரணிக்கத் தக்க ஆகாரங்களை — சாப்பிட்டுவிட்டு எழுந்தார்கள்.

''தாத்தா! என் ரூமுக்குப் போகிறேன்!'' என்று பிச்சுமணி குதித்துக் கொண்டே கிளம்பினான். உமாவைப் பற்றி நினைத்துப் பார்த்து ஒரு மாயா லோகத்தில் சஞ்சரிக்க வேண்டுமென்று அவன் இளம் உள்ளம் தவித்தது.

''நில்லுடா இரண்டு ஆட்டம் போடலாம்!'' என்று மேஜர் ராமதுரை அவனைச் சீட்டு விளையாடக் கூப்பிட்டார்.

''நாளைக்குப் போடலாம் தாத்தா!''

''என்னடா, பிகுப் பண்ணுகிறாய்? பெரிய மனுஷனாகி விட்டாயோ? வாடா!'' என்று மேஜர் அதட்டித் தம் பேரனை அழைத்துக் கொண்டு போய்த் தந்த மூக்காலியின் முன்னால் அமர்ந்து பிடி சீட்டு விளையாடலானார்.

பிச்சுமணியின் உள்ளம் உமாவைப் பற்றிய நினைவில் பூரணமாக லயித்து விட்டதால் அவனுடைய கவனம் சீட்டாட்டத்தின் மேல் பதியாமல் அலே பாய்ந்தது. அதனால் ஆட்டத்தில் அவன் தோற்றுவிட்டான். அவன் ஜெயித்த வீரப் பதக்கம் ஒன்று மறுபடியும் மேஜர் கைக்கு மாறியது.

''மடையன்! மடையன்!'' என்று கத்திய மேஜர், ''சீட்டைக் கவனித்து ஆடாமல் உன் மூளையை எங்கேயடா அடகு வைத்திருக்கிறாய்?'' என்று உறுமினார்.

சீட்டாட்டத்தில் பிச்சுமணி தோற்கும் போதெல்லாம் அவன் முகம் ரோஷ உணர்ச்சியால் வீங்கிப் போவது வழக்கம். அவன் ஆத்திரத்தோடும் அழுகையோடும் நீங்கள் 'பிராடு ஆட்டம் ஆடினீர்கள் தாத்தா' என்றுகூட வீண் சண்டை பிடிப்பான். ஆனால் இன்றோ அவன் முகத்தில் குடிகொண்டிருந்த குதூகலம் சிறிதும் மாறவில்லே. உமாவைப் பற்றி யாரிடமாவது பேச வேண்டும் என்ற தவிப்பு அவனுடைய இருதயத்தில் ஆழ்ந்த கருநிலை மீட்டி உதடுகளில் புன்சிரிப்புகளாகப் பொங்கிக்கொண்டே யிருந்தது.

''தாத்தா! அந்த டீச்சரம்மா வந்திராவிட்டால் நான் கொலேகாரனாக மாறியிருப்பேன்!'' என்றான் பிச்சுமணி.

மேஜர் திடுக்கிட்டவராய், ''என்னடா சொல்கிறாய்?'' என்று வெடித்தார்.

''அந்த டீச்சரம்மா வந்து குடத்துத் தண்ணீரை நாய்களின் மீது கொட்டியிராவிட்டால் நாய்ச் சண்டை நின்றிருக்காது. அந்த நாய்கள் விலகும் வரை நான் ஏதாவது ஒன்றை என் பெல்டால் அடித்தே கொன்றிருப்பேன்!''

''மனிதரைப் பற்றியே கவலேப்படாத இந்தக் காலத்தில் நாயைப் பற்றி நீ ஏனடா கவலேப்படுகிறாய்?''

''இல்லே, தாத்தா! அந்த டீச்சரம்மாவுக்குத்தான் எவ்வளவு புத்திசாலித்

தனம் பார்த்தீர்களா?'' என்றான் பிச்சுமணி வெகு ரசனையோடு.

''அதென்னடா பிரமாத புத்தி? குடம் தூக்குகிறவளுக்கு உள்ள குயுக்தி தான் அது!'' என்றார் தாத்தா வெகு அலட்சியமாக.

''இருந்தாலும் அந்த மூச்சரம்மாவின் போக்கே அலாதி தாத்தா!''

''என்னடா, கிழவியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறாய்?''

''கிழவி இல்லே தாத்தா!''

''பின்னே குமரியா?''

''ஆமாம், தாத்தா! அவள் பெயரே மிஸ் உமா!''

மேஜருக்கு ஏதோ ஓர் இடி விழுந்தது போல் அதிர்ச்சி உண்டாயிற்று. ஆனாலும் அவர் தம்மைச் சமாளித்துக் கொண்டு தம் பேரனை ஓர விழிகளால் பார்த்துக் கொண்டே, ''பெயரில் என்னடா இருக்கிறது?'' என்றார் கரகரத்த குரலில்.

''பெயரில் மட்டும் அழகில்லே தாத்தா! மிஸ் உமா ரொம்ப அழகாக இருப்பாங்க. ரொம்ப அன்பாகப் பேசுவாங்க! நாய்களிடம் அன்பு காட்ட வேண்டும் என்று சொல்லுவாங்க!''

''டேய், அது நாய்ப் புத்தியடா!'' என்று பொறுமை மீறிக் கத்திய மேஜர், ஒரு கணம் ஏதோ யோசித்து விட்டு, ''அவளுக்கு என்ன வயதிருக்கும்?'' என்று மெல்லக் கேட்டார்.

''தெரியவில்லே தாத்தா! நாளைக்குப் போய் நான் கேட்டுக் கொண்டு வருகிறேன்'' என்றான் பிச்சுமணி உற்சாகமாக.

''டேய்! டேய்! வேண்டாமடா!'' என்று பதறிய மேஜர், ''அவளுக்கு என்ன வயதிருந்தால் நமக்கென்னடா?'' என்றார் ஆணித்தரமாக.

ஒரு கணம் விசித்திரமான அமைதி நிலவியது.

பிச்சுமணி தன் சட்டைப் பையிலிருந்து குண்டு மல்லிகைப் பூவை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டு உமாவைப் பற்றிய நினைவில் உணர்ச்சிப் பரவசமாகி அந்தப் பூவையே மெய்ம் மறந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

''டேய்! உனக்கு இந்த மல்லிகைப்பூ எப்படிக் கிடைச்சுது? அந்த மூச்சரம்மா கொடுத்தாளா?''

''ஆமாம், தாத்தா!'' என்றான் பிச்சுமணி வெகு சுவாரஸ்யமாக.

தாத்தாவுக்குப் பொறுக்க முடியவில்லே.

''அந்தப் பூவைப் பிய்த்தெறிடா!'' என்று அவர் கத்தினர்.

''மாட்டேன் தாத்தா!''

''என்னடா, நான் சொல்லுகிறேன், மாட்டாயா?'' என்று கொதித்தெழுந்த கிழவர், ''டேய், எவளோ ஒருத்தி தலையில் வைத்திருந்த பூவை உன் கையில் வைத்துக் கொண்டிருக்கிறாயே மடையா! அதைக் கொடுடா; அதை என்ன செய்கிறேன் பார்! தூள் தூளாகப் பிய்த்தெறிகிறேன்! என் காலில் போட்டு மிதிக்கிறேன்'' என்று அளவு கடந்த ஆக்ரோஷத்தோடு குதித்தார்.

''தாத்தா! இந்தப் பூவை நீங்கள் அப்படியெல்லாம் செய்ய முடியாது! இது பிள்ளையாருக்குச் சாத்திய பூ! மிஸ் உமா அவர்கள் வீட்டில் உள்ள ஒரு பிள்ளையாரிடமிருந்துதான் இதை எடுத்துக் கொடுத்தாங்க. இதைப் பிய்த்தெறியறதா நினைப்பதுவே மகா தப்பு, மகா பாபம்!'' என்றான் பிச்சுமணி.

பிள்ளையாருக்குச் சாத்திய பூ என்றதும் பெரியவருக்கு என்ன செய்வதென்றே புரியவில்லே. இருந்தாலும் அவர் தம்முடைய கௌரவத்தையும், ஆத்திரத்தையும் விட்டுக் கொடுக்காமல் ''போடா, அசட்டுப் பையா!'' என்று முணு முணுத்தார்.

''நான் அசடுமில்லே! பையனுமில்லே!'' என்று பிச்சுமணி வீறிட்டுக் கத்திவிட்டு மாடியிலுள்ள தன் தனியறைக்கு வேகமாக ஓடி விட்டான்.

## அத்தியாயம் எட்டு

# வசந்தியின் விஜயம்

**சை**க்கிள் பட்டறையில் வசந்தியின் சைக்கிள் பழுது பார்க்கப்பட்டு அதற்கு முன் சக்கரம் மாட்டியிருந்தது. அதை ஓட்டிக் கொண்டு வசந்தி கிளம்பினாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. கல்லூரிக்கு விடுமுறை தினம். மேலும் காலே நேரம். வீட்டுக்குத் திரும்பிப் போனால் வசந்திக்குப் பொழுது போகாது. அப்பாவின் தொணதொணப்பையும் தாங்க முடியாது! யோசித்தாள் அவள். அசட்டுப் பிச்சுவின் ஞாபகம் வந்தது. உடனே பட்டாளத்தார் வீடு எங்கு இருக்கிறது என்று வசந்தி விசாரித்துக் கொண்டு, அதன் முன் வேலிக் காம்பவுண்டு வாசலின் முன்னால் வந்து சர்ரென்று சைக்கிளை நிறுத்திக் கீழே தாவிக் குதித்தாள்.

காம்பவுண்டுத் தோட்டத்தினுள்ளே மேஜர் ராமதுரை, காற்றாட உடம்பின்

மீது சட்டையில்லாமல் தோளில் ஒரு துண்டைப் போட்டுக் கொண்டு இடுப்பு வேஷ்டியை மடக்கிக் கட்டிக் கொண்டு வந்தவர் ஓர் ஆட்டுக்குட்டி அத்துமீறிப் பிரவேசித்துப் புல்பூண்டுகளை மேய்வதைக் கண்டதும் அளவிலா ஆக்ரோஷம் கொண்டவராய்த் தம் கைத்தடியை ஓங்கி ஓங்கி அதை ஓட ஓட விரட்டிக் கொண்டிருந்தார்.

அவருடைய எல்லைக்குள் நுழைந்து பாய்ச்சல் காட்டும் அந்த ஆட்டுக்குட்டியின் மீது மேஜருக்கு வெகு நாளைய ஆத்திரம்! அவருடைய தோட்டம் என்ற உடைமைத் தத்துவத்தை மதிக்காமல் அந்த ஆட்டுக் குட்டி பொதுவுடைமை கொண்டாடி அவருடைய தோட்டத்துக்குள் அடிக்கடி புகுந்து புரட்சி செய்து வந்ததால் அதை மேஜர் அன்று அடித்து நொறுக்கி விடுவதென்று தீர்மானித்து விட்டார்!

ஆனால் ஆட்டுக்குட்டி கிழவரின் கைக்குச் சிக்குமா? அதுவும் மகா தந்திரமுள்ள பெண் குட்டி! அது நாலாறு பக்கமும் துள்ளித் துள்ளி ஓடிப் பெரியவருக்குப் பெருமூச்சு இரைக்க வைத்து விட்டுக் கடைசியாக ஒரு தாவுத் தாவி வசந்தியை மோதித் தள்ளாத குறையாய்த் தப்பிச் சென்று விட்டது.

அதனால் ஒரு கணம் திடுக்கிட்டு நின்ற வசந்தி கோபாவேசத்துடன் தன் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்து மேஜரை நோக்கி, ''என்னப்பா, வாட்ச்மேன் ? பார்த்து விரட்டப்பா!'' என்று ஓர் அதட்டல் போட்டாள்.

மேஜர் பிரமித்துக் கைத்தடியை ஓங்கியபடி ஒரு கணம் நின்று விட்டு, ''விரட்டுகிறேன், விரட்டுகிறேன் !'' என்று குமுறியபடி தம் முறுக்கு மீசையின் முனைகளைத் திருகி விட்டுக்கொண்டு அவளை ஏற இறங்கப் பார்த்தார்.

வசந்தியின் நவநாகரிக ஆடையலங்காரங்கள் அவளை ஓர் ஆண் பிள்ளை போல் எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. புது மொட்டுப் போன்ற பெண்மையின் பொலிவு மட்டும் கண்ணைக் குத்தாமல் இருந்தால் அவளை ஒரு குடுமிப் பையன் என்றே மேஜர் நினைத்துக் கொண்டிருப்பார்.

''இது பட்டாளத்தார் வீடுதானே?'' என்று கேட்டாள் வசந்தி.

''ஆமாம். ஆனால் இங்கே பெண் வாடையே நுழையக் கூடாது!'' என்று மேஜர் கத்தினார்.

''ஏன்? இது சாமியார் மடமா ; இல்லே ரவுடிகளின் கூடாரமா?'' என்று வசந்தி கிண்டலாகச் சிரித்தாள்.

''நீ எதுக்கு இங்கே நுழைந்தாய் ? அதை முதல்லே சொல்லு!'' என்று மேஜர் விறிட்டு அலறினார்.

''நான் பிச்சுவைப் பார்க்க வேண்டும்!'' என்றாள் வசந்தி.

''பிச்சுவையும் கிச்சுவையும் நீ எதுக்காகப் பார்க்கிறது?''

''அதை எதுக்காக உன்னிடம் சொல்றது? பிச்சுவிடம்தான் சொல்லுவேன்!'' என்றாள் அவள் பிடிவாதமாக.

அவளை வியப்புடன் வெறித்து நோக்கிய மேஜர் ஒரு கணம் யோசித்து விட்டு ''நீ குண்டுமல்லிகை கொடுத்து விட்டுப் போக வந்திருக்கிறாயா?'' என்று ஒரு பொறுமலுடன் கேட்டார்.

''என்னை என்ன பூக்காரி என்று நினைத்தாயா? நான்சென்ஸ்!''

''பின்னே நீ யார்?''

''நான் யாராக இருந்தால் உனக்கென்ன? வக்கீல் மாதிரி ஒரேயடியாக 'கிராஸ்' கேள்வி கேட்கிறாயே?''

''நீதான் மிஸ் உமாவா?'' என்று மேஜர் அவளை ஏற இறங்கப் பார்த்தபடியே, ''ஒரு டீச்சரம்மாவுக்கு இருக்க வேண்டிய யோக்கியதை எதுவும் உன்னிடம் இல்லையே?'' என்றார்.

''ஷட் அப்! நான் டீச்சரம்மா இல்லே! அது என் அக்கா!'' என்று வசந்தி சொல்லி விட்டு உள் வீட்டை நோக்கி விடுவிடு என்று நடந்தாள்.

''ஏய், எங்கே போறே?'' என்று மேஜர் தம் கைத் தடியை ஓங்கியபடி, ''ஏய்! ஏய்!'' என்று கத்திக்கொண்டே அவள் பின்னால் ஓடி வந்தார்.

வசந்தி வெடுக்கென்று திரும்பி, ''என்ன, ஏய் ஊய் என்கிறே? அப்புறம் நான் என்ன செய்வேன் தெரியுமா?'' என்று மிரட்டினாள்.

''என்ன செய்வாய்?'' என்று மேஜர் முழங்கியபடி தம் முறுக்கு மீசைகளை மேலும் திருகி நிமிர்த்தினார்.

''பிச்சுவிடம் சொல்லி உன்னை 'டிஸ்மிஸ்' செய்வேன்! இல்லே மேஜரைக் கூப்பிட்டு உன் மீசையை எடுத்து விடச் சொல்வேன்! ஜாக்கிரதை!'' என்று வசந்தி எச்சரிக்கை விடுத்து விட்டு வேகமாக மாளிகைக்குள் புகுந்து விட்டாள்.

மேஜர் ராமதுரைக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை! அவருடைய வாழ்நாளில் போர்க்களத்தில் கூட இது போன்ற எதிர்பாராத அதிர்ச்சியை அவர் கண்டதில்லை. இருந்தாலும் தம் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு தம் பேரனின் எதிர்காலத்தை முன்னிட்டு அவனுக்கும் வசந்திக்குமிடையே நடைபெறப் போகும் உரையாடலை ஒட்டுக் கேட்டு அதன் பிறகு நடவடிக்கை எடுப்பதே உசிதமென்று தீர்மானித்தார்.

**வீ**ட்டுக்குள் ராக்கெட் போல் பாய்ந்து நுழைந்த வசந்தி, ராஜ தர்பார் போன்ற கூடத்தில் குத்திட்டு நின்று சுற்றுமுற்றும் வியப்புடன் பார்த்துக் கொண்டே, ''பிச்சு!.... பிச்சு!'' என்று கூப்பிட்டாள்.

அந்தச் சமயம் பிச்சுமணி அழகாகத் தலை வாரி முகத்துக்குப் பவுடர் போட்டுக்கொண்டிருந்தானுகையால் தன் கால் பந்தாட்ட நண்பர்களில் யாரோ ஒருவன் துணிந்து வீட்டுக்கு வந்து கீச்சுக் குரலில் தன்னைக் கூப்பிடுகிறான் என்று நினைத்தவனாய், ''யார் அது?'' என்று கூவிக் கொண்டே தன் அறையிலிருந்து வெளியில் வந்து எட்டிப் பார்த்தான்.

கீழே கூடத்தில் வசந்தி நிற்பதைக் கண்டதும் திடுக்கிட்டவனாய், ''ஆ! நீயா? இங்கே ஏன் வந்தாய்?'' என்று கத்தினான்.

''நானாக வரவில்லை! என் அக்கா சொன்னதினால்தான் வந்தேன்!''என்று பதிலுக்குக் கத்திய வசந்தி சட்டென்று ஸ்பிரிங் பொம்மை போல் குதித்துக் கொண்டு மாடிப் படிகளில் தாவித்தாவி ஏறிப் பிச்சுமணியின் எதிரில் வந்து ஜம்மென்று ஜவான் போல் நின்றாள்.

''உன் அக்கா யார்?'' என்று பிச்சுமணி கேட்டான்.

''உமாதான் என் அக்கா!''

''டீச்சரம்மா மிஸ். உமாவா?''

''ஆமாம்! அந்த மிஸ் உமாவின் தங்கைதான் நான்!''

மிஸ். உமா என்றதும் பிச்சுமணியின் ஆத்திரமெல்லாம் மறைந்து விட்டது. ஆனால் தாத்தாவைப் பற்றிய பயம் கிளம்பியது.

''நீ எப்படி இந்த வீட்டுக்குள் வந்தாய் ?'' என்று அவன் மிகுந்த கலவரத்துடன் கேட்டான்.

''நேர் வழியாகத்தான் வந்தேன் ! உன் வாட்ச்மேன் நந்தி போல் வழி மறித்துக் கொண்டிருந்தான். நான் ஒரு பாட்டுப் பாடி உள்ளே வந்து விட்டேன்.''

''இருதயசாமியானதாலே உன்னை இலேசில் விட்டிருக்கிறான்....''

''அந்த வாட்ச்மேன் லேசிலா விட்டான்? ஏய், ஏய் என்று அதட்டி என்னையும் ஆட்டுக் குட்டி மாதிரி விரட்டப் பார்த்தான். அப்புறம் என்னைப் பூக்காரி என்று நினைத்தான்! இடியட்!''

''நல்ல வேளை! உன்னை என் தாத்தா பார்க்க வில்லை!'' என்று பெருமூச்சு விட்ட பிச்சுமணி, தன் தாத்தா எந்தக் கணம் தன்னை வந்து பார்த்து விடுவாரோ என்று பயந்தவனாய்ப் பரபரப்புடன் வசந்தியை அழைத்துக் கொண்டு தன் தனியறையை நோக்கி வேகமாக நடக்கலானான்.

அவனுடைய தாத்தா மேஜர் ராமதுரை ஓசைப் படாமல் மாடிப் படிகளில் மூச்சுப் பிடித்துத் 'தம்' கட்டிக் கொண்டு அவன் தனியறையை நோக்கி மெல்ல ஏறி அவர்களுடைய பேச்சை ஒட்டுக் கேட்டபடி வரலானார்.

பிச்சுமணியின் அறையை நோக்கிப் போகும் வழியில் அவன் குரல் கரகரக்க, ''வசந்தி! உன் அக்கா மிஸ். உமா என்ன சொல்லி அனுப்பினார்கள் ?''— என்று வெகு ஆவலோடு கேட்டான்.

வசந்திக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது!

''உன்னை மறுபடியும் பார்த்தால் நான் மன்னிப்புக் கேட்க வேணுமென்று சொன்னாள். அப்பா அம்மா சொன்னால் கூடக் கேட்க மாட்டேன். அக்கா சொன்னதாலே கேட்கிறேன்!'' என்றாள் வசந்தி.

''என்ன கேட்கிறாய்?''

''உன்னை அசட்டுப் பிச்சு என்று நான் சொன்னேன் பார்! அது தப்பு! நீ மகா கெட்டிக்காரன்!... அப்புறம், என் பின்னல் சடையைப் பிடித்து இழுக்கக்கூட உனக்குத் தைரியம் கிடையாது என்று சொன்னேன் பார்! அதுவும் தப்பு! நீ எத்தனை பெண்களின் சடைகளை வேண்டுமானாலும் தைரியமாகப் பிடித்து இழுத்துக் கத்தரித்தும் விடுவாய்! அப்புறம், நீ ஒரு ஆண்பிள்ளையாக இருந்தும் இந்த விஷயத்தை இன்னொரு பெண்ணிடம் போய்ச் சொல்லியிருக்கிறாய், பார்! நீ மகா வீரன் !'' என்று வசந்தி மனம் பொறுமியவளாய்ப் படபட வென்று வார்த்தைகளைச் சரமாரியாகப் பொழிந்தாள்.

''வசந்தி! அன்றைக்கு ஏதோ ஓர் உணர்ச்சி வேகத்தில் அக்காவிடம் சொல்லி விட்டேன்....''

''ஆண்களுக்கு உணர்ச்சி கூடாது, பிச்சு! புத்தி வேணும்!''

அந்தச் சமயம் மாடிப்படிகளில் ஏதோ ஓசை கேட்கவே பிச்சுமணி, பயந்து நடுங்கியவனாய்ச் சட்டென்று வசந்தியைப் பிடித்துத் தன் அறைக்குள் தள்ளிக் கதவைச் சாத்த முயன்றான்.

வசந்தி திடுக்கிட்டுத் திமிறி அறைக் கதவைச் சாத்த விடாதபடி அதை இழுத்துப் பிடித்து டமாரென்று தள்ளித் திறந்து கொண்டு வெளியே பாய்ந்து நின்று, ''டேய், பிச்சு! உன் தைரியத்தைக் காட்ட என்னிடமே இந்த வேலையெல்லாம் வைச்சுக்கொள்ளாதே'' என்று கூச்சலிட்டு, ''ஒஹோ ! என்னை யாரென்று நினைத்தாய்? உன் வாலை ஒட்ட வெட்டி விடுவேன்! தெரிஞ்சுக்கோ!'' என்று வீராங்கனை போல் முழக்கமிட்டாள். (தொடரும்)



# வீட்டைக் கட்டிப் பார்

ரா.வீ.

சுண்ணாம்புக் கற்களைப் பொடிக்கும் இயந்திரம்

"வீட்டைக் கட்டிப் பார்!" என்றார் வந்தவர்.

"நீங்கள் இப்படி ஆசீர்வாதம் பண்ண, நான் அப்படி ஒன்றும் தங்களுக்குத் தீங்கு இழைத்து விட்டதாகத் தெரியவில்லையே!"

"நான் என்ன, சாபம் கொடுப்பதாகவா நினைக்கிறாய்? இல்லையப்பா! நீ உன் மகளுக்குக் கல்யாணத்தைப் பண்ணிப் பார்த்துவிட்டாய். வீட்டையும் கட்டிப் பார்த்து விட்டால் நீ பெற்ற வாழ்வு பயனுள்ளதாகி விடும்!" என்றார் அவர்.

நான் பதில் பேசவில்லை. யோசிக்கலானேன்: அப்பப்பா! பெண்ணின் கல்யாணத்தைப் பண்ணுவதற்குள் ஆள் பிராணன் அடியோடு போய்விட்டது. இந்த மனிதன் என்னடாவென்றால் வீட்டையும் கட்டிப் பார்க்கச் சொல்கிறாரே!

ஆமாம், இந்த இரண்டு பழமொழிகளையும் ஒன்றாக்கிக் கூறிய மகானுபாவன் எந்த நோக்கம் கொண்டு எந்தப் பொருளை மனத்தில் கொண்டு கூறியிருப்பான்? இந்த இரண்டு காரியங்களையும் செய்யும் பொழுது மனிதன் மகிழ்ச்சி அடைவான் என்றா? அல்லது அல்லல்பட்டுத் துன்பப் படுவான் என்றா? இல்லை, இலக்கண முறைப்படி முன்னிலையை முன்னிட்டுக் கூறியிருப்பானா, அல்லது படர்க்கையைப் படரவிட்டுப் பேசியிருப்பானா? அதாவது ஒருவரைப் பார்த்து, 'நீ கல்யாணம் பண்ணிப் பார், வீட்டைக் கட்டிப் பார்!' என்று சொல்லியிருப்பானா? அல்லது மூன்றாமவனைக் குறிப்பிட்டு, 'அவர் கல்யாணம் பண்ணிக் கொள்வார்: கல்யாணம் என்று ஒன்று பண்ணிக் கொண்டால் குடும்பம் பெருகும். குடும்பம் என்று ஒன்று பெருகினால் வீடு ஒன்று தேவைப்படும். அப்பொழுது அவராகவே வீட்டைக் கட்டிக் கொள்வார்!' என்பதைக் கொச்சை மொழியில் அப்படிக் கூறியிருப்பானா?

யோசனை பெருகப் பெருக இந்தப் பழமொழியின் பொருளை இதோடு விட்டுவிட எனக்கு மனம் வரவில்லை. இந்தப் பழமொழிக்குரியவன் கேவலம் லௌகிகப் பொருள் கொண்டு கூறி யிருக்க மாட்டான். அதாவது, இதைக் கூறும்பொழுது இன்னும் பெரும் பொருளே அவன் மனத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

மனிதப் பிறவி எடுத்தவன் பிரம்மச்சரிய ஆசிரமத்தை ஏற்றுக் கல்வி கேள்விகளில் சிறந்தவனாவான். பின்னர் கல்யாணம் செய்து கொண்டு கிருஹஸ்தாசிரமத்தை மேற்கொள்ளுவான். அறம் வழுவாது இல்லறம் நடத்தி, அறம், பொருள், இன்பம் என்னும் முப்படி ஏறி, மோட்ச சாம்ராஜ்யம் என்னும் வீட்டைக் கட்டிக்கொள்வான்.' இப்பொருள்தான் அப்பழமொழியில் தொக்கி நிற்கும் என்று எண்ணினேன்.

ஆயினும் நண்பர் சொன்னபடி கல்யாணம் பண்ணிப் பார்த்த எனக்கு இவ்வுலகில் ஒரு வீட்டையும் கட்டிப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை உண்டாகியது.

அந்த ஆசை செயலாக முகிழ்ந்தபோதுதான் அவ்வுலகுக்கான வீட்டைக் கட்டிக் கொள்வது கூட எளிது; இவ்வுலகத்தில் வாழ ஒரு வீட்டைக் கட்டுவது அரிதினும் அரிது என்னும் எண்ணம் உண்டாயிற்று.

'அப்படி என்ன ஐயா கஷ்டம்? பணம் இருந்து விட்டால் இந்த உலகத்தில் ஆகாத காரியம் உண்டா?' என்று கேட்கலாம். என்னைக் கேட்டால், பணக் கஷ்டத்தைக்கூட ஒருவாறு சமாளித்து விடலாம். இந்தச் சிமெண்டுக் கஷ்டத்தைத் தீர்க்க அந்தப் பரமாத்மாவே வந்தாலும் முடியாது என்பேன். தெய்வம் வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடாவிட்டால் பயனில்லை என்பதுபோல, அரசாங்கத்தைச் சேர்ந்த தொழில் வாணி

பத் துறையினர் மனம் வைத்தால்தான், கண்ட்ரோலுக்குட்பட்ட இந்தச் சிமிண்டுக்குப் பர்மிட் கிடைக்கும். சென்னையில் வீடு கட்டும் ஆர்வம் கொண்டு இந்த அலுவலகத்தை முற்றுகையிட்டுக் கால்களில் விளக்கெண்ணெய் போட்டுக் கொண்டு நடந்து, ஒற்றைக் காலில் தவம் கிடக்கும் நபர்களை நேரில் காணும் வாய்ப்புப் பெற்றவர்கள் எனது இந்தக் கூற்று முற்றிலும் உண்மை என்பதை மறுக்க மாட்டார்கள். அதோடு இன்று சிமிண்டுக்கு வந்திருக்கும் கிராக்கியைக் கண்டவர்கள் அன்றொரு நாள் இந்தச் சிமிண்டு சீந்துவார் அற்றுக் கிடந்தது என்று சொன்னால் நம்பவும் மாட்டார்கள்.

சிமிண்டு தயாரிப்புக்கு மூலப் பொருள் சுண்ணாம்புக் கல். அடுத்தாற்போல் தேவையானது சீனக் களி என்னும் ஒரு வகை மண்.

இயற்கையன்னையின் மடியிலே சில இடங்களில் சுண்ணாம்புக் கற்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. அவற்றைப் பெயர்த்து எடுத்து வந்து, மாபெரும் இயந்திரம் ஒன்றுக்கு அருகில் கொட்டுகிறார்கள். அதில் பெரும் பெரும் சங்கிலிகள் தொங்குகின்றன. அவை இயங்கும்பொழுது, காப்பி மிஷினில் சிறுகச் சிறுகக் காப்பிக் கொட்டைகள் அரைக்கும் பாகத்துக்குப் போகுமே, அது போலச் சுண்ணாம்புக் கற்கள் போகின்றன.

ராட்சசச் சங்கிலிகளுடனும் குண்டுகளுடனும் இயங்கும் அந்த யந்திரத்துள் போகும் பாறைகள் உடைபட்டுச் சற்றேறக் குறைய முட்டை வடிவத்தில் வெளியேற்றப்படுகின்றன. பிறகு அவை குழாய் இயந்திரத்தின் வழியே போகும்பொழுது இரும்பு உருளைகளினாலும் பந்துகளினாலும் மோதி உடைபட்டுச் சின்னச் சின்ன மணலின் உருவத்தைப் பெறுகின்றன. சீனக் களியும் பொடியாக்கப்பட்டு இத்துடன் கலக்கப்படுகிறது. இக்கலவை உலர் முறை, ஈர முறை என்று இரண்டு வகைகளில் செய்யப்படுகிறது. நீர்ப் பஞ்சமுள்ள இடங்களுக்கு ஏற்றது உலர் முறை. நீர்ப் பஞ்சம் இல்லாத இடங்களுக்கு....? இரு முறைகளில் எதை வேண்டுமானாலும் கையாளலாம்.

இக்கலவை நீண்ட குழாய்கள் வழியே சூடேற்றுவதற்காக அனல் உலைக்கு இட்டுச் செல்லப்படுகின்றது. இங்கே 1400 டிகிரி வரை இக் கலவைக்குச் சூடேற்றுகிறார்கள், பல ரசாயன முறைகளைக் கையாண்டு. உலையில் தகிக்கும் இந்தக் கலவையைக் காண விரும்புபவர்கள் கறுப்புக் கண்ணாடி மூலம் காண முயலலாம். வெறும் தீக்குழம்பாக, பயங்கரத் தீ மண்டலமாகக் காட்சி அளிக்கும் இந்தத் தீயில் குளித்துவிட்டு வந்த கலவையைக் 'கிளிங்கர்' என்று கூறுவர்.

இது மீண்டும் பொடியுறும். இந்த நிலையில் இரண்டு மூன்று சத விகிதம் 'ஜிப்ஸம்' என்று கூறப்படும் கற்பூரச் சிலாசத்தைச் சேர்ப்பார்கள். முட்டை நிலை, மணல் நிலை ஆகியவற்றைக் கடந்து, மாவு நிலையை அடையும் இதற்குத்தான் சிமிண்டு என்று பெயர்.

முக்கியமாக இந்தச் சிமிண்டு இரு வகைப்படும். தண்ணீருக்கடியில் கெட்டிப்பட்டு உறுதியாவது ஒன்று. உறுதியாகாதது மற்



**அம்பாசந்திர சிமெண்டு தொழிற்சாலையும் அதை நிறுவிய ஸ்ரீ சாரங்கபாணி முதலியாரும்**

றொன்று. இவற்றை முறையே ஹைட்ராலிக், நான்-ஹைட்ராலிக் என்பர். நமக்கு அதிக அறிமுகமான சிமிண்டு தண்ணீருக்கடியில் கெட்டிப்படும் ஹைட்ராலிக் சிமிண்டுதான்.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே ஆங்கிலேயர்கள் சிமெண்ட் தயாரித்து உபயோகிக்கும் முறையைக் கற்றார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டிலே ஜோஸப் ஆஸ்ப்டின் என்பவர் சிமெண்டு தயாரிக்கும் முறைக்குப் புது மெருகேற்றினார். எரிமலைச் சாம்பலும் எரித்த சுண்ணாம்புக் கல்லும் சேர்ந்து போர்ட்லாந்துத் தீவில் உள்ள பாறைகளின் நிறத்தைப் பெறவே, சிமிண்டுக்குப் போர்ட்லாந்து சிமிண்டு என்றும் பெயர் வழங்கலாயிற்று.

இந்தச் சிமிண்டில் இரும்புச் சாம்பலைக் கூடக் கலப்பதுண்டு. ஒரு டன் இரும்புக் கனியிலிருந்து நல்ல இரும்பை மட்டும் பிரித்துத் தனித்து எடுக்கும்போது ஏறக் குறைய பாதி இரும்புக் கனி உலைக் களத்திலேயே சாம்பலாகி விடுகிறது. பழுத்திருக்கும் இரும்பில் சிறிது நீரைத் தெளித்து இயந்திரத்தினால் அமுக்கம் கொடுத்தால் நல்ல இரும்பிலிருந்து பிரிந்து, இந்தச் சாம்பல் உதிர்ந்து விடுகிறது. இச்சாம்பலையும் அரைத்துச் சிமிண்டோடு கலக்கிறார்கள். இதனை 'பிளாஸ்ட் ஃபர்னெஸ் போர்ட்லாந்து சிமிண்டு' என்கின்றனர். அணை, பாலம் முதலியவை கட்ட உறுதி வாய்ந்த இந்தச் சிமிண்டையே உபயோகிக்கிறார்கள். ஜம்ஷெத்பூரில் உள்ள இரும்பாலை உமிழும் இரும்புச் சாம்பல் அனைத்தையும் அஸோஸியேடட் சிமிண்டுக் கம்பெனியார், அவர்களோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு பெற்றுக் கொள்கிறார்கள்.

சிமிண்டை மாவாக்கும்பொழுதே அதில் நிறம் ஏற்றும் செயலையும் புரிகிறார்கள். கச்சா சிமிண்டில் இரும்புக் கழிவுகளைச் சேர்த்தால் அதன் நிறம் சாம்பலாக இருக்கும். ரோமன் சிமிண்டின் நிறம் பழுப்பு. இரும்புக் கழிவு கலக்காத சிமிண்டின் நிறம் வெளுப்பு. சிமிண்டுகளில் பல நிறம் காணப்படுவதற்குக் காரணம் அவைகளின் கலவை முறையேயாகும்.

1908ம் ஆண்டு பாய்ட் என்பவர் அலுமினியம் சிமிண்டைத் தயாரித்தார். கப்பல்கள், துறைமுகங்கள் ஆகியவற்றில் இந்தச் சிமிண்டே பெரும்பாலும் உபயோகிக்கப்படுகிறது. மற்ற சிமிண்டுகளைக் கடலின் உப்புக் காற்று விரைவில் அரித்துவிடக் கூடும். சாதாரண சிமிண்டு உறுதி பெற ஒரு மாதம் பிடிக்கிறதென்றால் இது உறுதி பெற ஒரு நாள்கூடப் பிடிப்பதில்லை. சுண்ணாம்புக் கல்லையும், அலுமினிய அமிலத்தையும் உருக்கிக் கலந்து, நல்ல சூடேற்றி, அலுமினியம் சிமிண்டைத் தயாரிக்கிறார்கள். இதில் இரும்புக் கழிவுகளைக் கலந்தால் அவ்வளவு அதிகமாகச் சூடேற்றுவதில்லை.

இந்தியாவில் சிமிண்டுத் தொழிலைத் தொடங்கிய முதல் பெருமை நமது சென்னை மாகாணத்தையே சாரும். 1904ம் ஆண்டில் சிறு குடிசைத் தொழிலாகத் தொடங்கிய இந்தத் தொழில் பல பாலாரிஷ்டங்களைக் கடந்து பெருந் தொழிலாகப் பரிணமிக்கப் பத்தாண்டுகள் பிடித்தன.

இன்றைய சிமிண்டுப் பஞ்சத்தைக் குறைக்க வென்றே போல, மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த 'அம்மாசந்திரா' என்னும் இடத்தில் சமீப காலத்தில் ஒரு சிமிண்டுத் தொழிற்சாலை நிறுவப்பட்டு இயங்கிவருகிறது. சிமிண்டு தயாரிப்பதற்கு மூலப் பொருளான சுண்ணாம்புக் கல் அருகில் உள்ள வஜ்ர மலைத் தொடரில் ஏராளமாகக் கிடைக்கிறதாம். எண்பதடி ஆழத்துக்குப் பரந்து கிடக்கும் சுண்ணாம்புக் கல் எடுக்க எடுக்கக் குறையாமல் இன்னும் நூறு ஆண்டுகளுக்கு இங்கே கிடைக்கும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். தனியார் துறையில் ஸ்ரீ பி. கே. சாரங்கபாணி முதலியாரின் மேற்பார்வையில் தொடங்கப்பட்டிருக்கும் 'மைசூர் சிமிண்ட்ஸ்' என்னும் இந்த ஸ்தாபனத்துக்கு அமெரிக்காவைச் சேர்ந்த கைஸர் எஞ்சினியரிங் ஸ்தாபனத்தார் தொழில் நுட்ப உதவியோடு பண உதவியும் செய்து இதன் முன்னேற்றத்தில் அக்கறை காட்டி வருகிறார்கள். ஏறக் குறைய இரண்டு கோடி ரூபாய்கள் செலவிடப்பட்டிருக்கும் இந்த ஆலைக்கு மைசூர் ராஜ்ய சர்க்காரும் பணம் போட்டுப் பங்கு கொண்டுள்ளது. அமெரிக்க அரசாங்கத்திலிருந்தும் அமெரிக்கர்களது கூலே நிதியிலிருந்தும் பெருந் தொகை கடனுதவியாகக் கிடைத்துள்ளது.

இவ்வாலை நிறுவப்பட்டிருக்கும் தும்கூர் மாவட்டம் வறண்ட பிரதேசமானதால் சூழ்நிலையை அனுசரித்து இங்கு உலர் முறையில் சிமிண்டு தயாரிக்கப்படுகிறது. இந்தியாவில் இம்முறையில் சிமிண்டு தயாரிக்கப்படும் நிறுவனங்கள் இரண்டே இரண்டு. அவற்றில் ஒன்று இந்த 'மைசூர் சிமிண்ட்ஸ்'. மற்றொன்று நாகார்ஜுன மலையை அடுத்த 'மான்சேர்லா' என்னும் இடத்தில் உள்ள ஆலை. உலர் முறைத் தயாரிப்பினால் செலவு கூடக் கொஞ்சம் குறைவாகவே ஆகிறது. டன் ஒன்றுக்கு உற்பத்திச் செலவு ரூ. 2.6 குறைகிறதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

மேற்கு ஜெர்மனியிலிருந்து தருவிக்கப்பட்டுள்ள நவீன வகைச் சாதனங்கள் கொண்ட இயந்திரங்களைக் கைஸர் ஸ்தாபனத்தைச் சேர்ந்த புகழ் பெற்ற என்ஜினியர் ஒருவர் ஒரே மாதத்தில் இயங்க வைத்திருக்கிறார்.

சுண்ணாம்புக் கற்களைப் பொடிப்பதிலிருந்து அனல் சூளைக்குச் சென்று அவை சிமிண்டாக உருவாகிப் பெருந் தொட்டிகளிலிருந்து கோணி கோணியாகத் தைக்கப்பட்டுக் கிடங்குக்குப் போகும் வரை எல்லா அலுவல்களையும் இயந்திரங்களே செய்கின்றன. தொழில் வல்லுநர்களும் தொழிலாளிகளும் அவற்றின் பணிக்குக் கை கொடுத்து உதவுகின்றனர்.

'தெற்குத் தேய்கிறதோ?' என்று சந்தேகப்படுபவர்களுக்கு ''இல்லை, இல்லை! தெற்கு காங்கிரீட்டைப் போல் உறுதிபெற்றுத் திகழ்கிறது. பாரத நாட்டவர் அனைவரும் தன்னெதிரே கை நீட்டி வாழும் அளவுக்குத் தலை நிமிர்ந்து வாழ்கிறது என்பதைப் பறைசாற்றுகிறது தெற்கே சிமிண்டுத் தொழில்'' என்று துணிந்து கூறலாம்.









பிரம்மபுத்திராவுடன் இரண்டறக் கலந்து இன்புறப் போகிறோம் என்பதை முன்கூட்டியே அறிந்து மகிழ்ந்தது போல் அடர்ந்த அந்தக் கானகங்களினூடே நான்கு நதி நங்கைகள் குதூகலமாய்ப் பாய்ந்து செல்கின்றனர். காலைக் கதிரவனின் ஒளி அந்த ஆறுகளை உருக்கிய தங்கமாக மாற்றுகிறது. மரங்களில் பட்சி ஜாலங்கள் உதய கீதம் பாடுகின்றன. மா இலைகளால் வடிகட்டப்பட்டு இதமாகவும் இலேசாகவும் படுகின்ற சூரிய வெப்பத்தினை நன்கு அனுபவித்தபடி எழுந்திருக்க மனமின்றிச் சுகமாய்க் கண் உறங்குகின்றன குரங்குகள். இரை தேடக் கிளம்பும் புலி, பூனை போலப் பதுங்கி மெல்ல முன்னேறுகிறது. ஆற்றங்கரையில் யானைகள் கூட்டமாய் நின்று நீரைத் துதிக்கையில் உறிஞ்சித் தலைமேல் விட்டுக் கொண்டு நீராடுகின்றன. ஆங்காங்கே உள்ள கிராமப்புறங்களில் பாரத நாட்டின் பழங்குடி மக்கள் சுறுசுறுப்பாய்த் தங்களது அன்றாட அலுவல்களைக் கவனிக்க ஆரம்பித்து விட்டார்கள். உழைப்புக்கு அஞ்சாமல் உழவுத் தொழிலில் ஈடுபடுகிறார்கள். பெண்கள் கைத்தறி முன் அமர்ந்து அற்புதமான கலை வேலைப்பாடுகள் கொண்ட அழகிய ஆடைகளை நெய்கிறார்கள்.





இந்த அமைதியை யெல்லாம் குலைத்துக்கொண்டு சென்ற ஆண்டு அக்டோபர் மாதம் இருபதாம் தேதி பேரிடியோசை கேட்டது. இடியோசைதானா அது? இல்லை, பீரங்கிகளின் சத்தமா? அதோ தெரிவது யானைகளின் கூட்டமா அல்லது நிலமதிர முன்னேறும் டாங்குப் படையா? மரத்திலிருந்த குரங்குகள் பீதியடைந்து கிறீச்சிட்டுக் கொண்டு கிளைக்குக் கிளை தாவிப் பாய்ந்தோடின. எதிரிகளான சீனர்களும் ஒருவரோடு ஒருவர் விநோதமான தங்கள் பாஷையில் பேசிக் கொண்டே நடந்









தார்கள். அவர்கள் பேசாதபோது அவர்கள் கையில் இருந்த 'மிஷின் கன்'கள் பேசின.

எல்லைப்புறத்தில் காவல் இருந்த நம் ஜவான்கள் இந்தத் திடீர்த் தாக்குதலையோ பெரும் படையெடுப்பையோ சற்றும் எதிர்பாராதவர்களாய்த் திணறினார்கள். போலீஸ் உத்தியோகம் பார்த்து வந்த அவர்களிடம் இந்த ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்த ஆள் பலமோ ஆயுத பலமோ இல்லை. அப்படியிருந்தும் தங்களால் ஆன மட்டும் சமாளித்துப் பார்த்தார்கள்.

தங்களுடைய காவல் நிலையங்களை இடித்துத் தகர்த்துக் கொண்டு சகலத்தையும் மிதித்து அரைத்துக்கொண்டு அனலைக் கக்கியபடி மேலே மேலே வந்து கொண்டிருக்கும் இரும்புக் கோட்டைகளான டாங்குகளெதிரே அவர்களால் என்ன செய்ய முடியும்?

இனி தாக்குப் பிடிக்க முடியாதென்கிற நிலையிலிருந்த மன வருத்தத்துடன் பாரத நாட்டு வீரர்கள் பின்வாங்கினார்கள். நடந்தார்கள், நடந்துகொண்டே யிருந்தார்கள்!

அடர்ந்த கானகத்தில் திக்குத் திசை புரியாமல் தவித்தவர்களுள் ஜோகிந்தரும் ஒருவன். இரண்டு நாட்களாய் உணவைக் கண்ணால்கூடப் பார்க்கவில்லை அவன். மனச்சோர்வும் உடற் சோர்வும் வாட்டி எடுக்க இனி ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாது என்கிற நிலையில் ஒரு மரத்தடியில் விழுந்தான். கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. அப்படியே உறங்கி விட்டான்.

மீண்டும் அவன் இமை திறந்து பார்த்தபோது எதிரே பயங்கரத் தோற்றம் கொண்ட ஆதிவாசி ஒருவன் கண்களை உருட்டி விழித்தபடியே நிற்பதைக் கண்டான். கானகத்தில் வாழும் இந்தப் பூர்வகுடி மக்களில் பலர் எம கிங்கரர்களின் வேலையைத் தாங்களாகவே மேற்கொண்டு மனித வேட்டை ஆடுபவர்கள்என்றும் தங்களால் தீர்த்துக் கட்டப்பட்டவர்களின் தலைகளைச் சேகரித்து வைப்பதில் ஆர்வம் காட்டுபவர்கள் என்றும் ஜோகிந்தர் எங்கோ எப்போதோ கேள்விப் பட்டிருந்தான்.



''கொன்று விடு!'' என்று முணுமுணுத்தான் அவன். ''உங்களையும் உங்கள் நாட்டையும் காக்க வேண்டிய கடமையில் தவறி விட்ட எனக்கு அது நல்ல தண்டனைதான். பசியாலும் தாகத்தாலும் அணு அணுவாய்ச் சாவதைவிட ஒரேயடியாகச் செத்து மடிவதே மேல்!''

அவன் பேசியது ஒன்றும் அந்த ஆதிவாசிக்குப் புரிந்ததாகத் தெரியவில்லை. கத்தியைக் கீழே போட்டு விட்டு அவன் தன் மடியிலிருந்து ஓர் இலைக் கருவை எடுத்து ஜவானிடம் தந்தான். அதனுள் கொஞ்சம் அரிசிச் சோறும் இறைச்சியும் இருந்தன. ருசி மிக்க பண்டங்கள் என்று கூறிவிட முடியாது என்றாலும் அந்த ஜவானுக்கு அன்று உயிரளித்த தேவாமிருதம் அது. அடுத்து



தோளிலுள்ள ஒரு குவளையிலிருந்து நாட்டு மதுவையும் கொஞ்சம் அருந்தித் தெம்பு பெற்றான் ஜோகிந்தர். நன்றி கூறிவிட்டு விடை பெற்றுப் போக யத்தனித்த அவனை, தடுத்து நிறுத்திய அந்த 'அபோர்' மனிதன் தன் பாஷையில் பரபரப்புடன் ஏதோ கூறினான். ஜவானுக்கு அது என்னவென்று புரிய வில்லை. பதிலுக்குக் காத்திருக்கவில்லை அபோர் ஜாதியினன். ஜவானுடைய ராணுவ உடைகளைத் தான் அணிந்து கொண்டதுடன் அவனை வற்புறுத்தி அபோர் ஜாதியினனைப்போல் வேஷம் தரிக்கச் செய்தான். கிழக்குத் திக்கில் சீன எதிரிகள் ஊடுருவி இருப்பதைக் குறிப்பால் உணர்த்தி ஜவான் பின்பற்றிச் செல்ல வேண்டிய வழியைத் தரையில் கோடிட்டுக் காட்டி அனுப்பி வைத்தான் அந்த அபோர்.

அந்த ஆதிவாசியின் சமயோசிதத்தாலும், தயாள சிந்தையாலும் அன்றைய தினம் உயிர் பிழைத்த ஜவான்கள் பலர். இதே போலத்தான் நேபா பகுதியில் பூர்வ குடிமக்கள் ஒவ்வொருவரும் கருணை காட்டினார்கள் நமது வீரர்களிடம்.

அரை மயக்க நிலையில் ஜோகிந்தர் புத்தி தடுமாறிப் போய் மனம் தளர்ந்தது போல், நேபா (NEFA) அல்லது வடகிழக்கு எல்லைப்புற ஏஜென்ஸியில் மனித வேட்டையில் பிரியம் கொண்ட காட்டு மிராண்டிகள் இல்லாதுபோகவில்லை. ஆனால் அது அந்தக் காலம். பத்தொன்பதாம் நூற்றாண்டில் மிக மிக அதிகமாய்ப் பரவியிருந்த இந்தப் பழக்கம் சிறிது சிறிதாகக் குறைந்து இன்று அடியோடு நின்றே விட்டது. இன்று கொலை புரிவது தவறு என்ற சட்ட திட்டங்களுக்கு உள்ளடங்கி நடக்கும் இந்தப் பூர்வகுடிகள் மனிதத் தலையைக் கொய்து வந்தால்தான் திரு









மணம் என்கிற தங்களது சம்பிரதாயங்களையும் விட்டு விட மனமில்லாதவர்களாய் ஒரு புதிய வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். மரத்தினாலான ஒரு தலையைக் காட்டில் ஏதேனுமொரு இடத்தில் மறைவாக வைத்து விட்டு மாப்பிள்ளையாகப் போகிறவனை அதனை வேட்டையாடி வரச் சொல்கிறார்கள்!

முப்பத்தி மூன்றாயிரம் சதுர மைல் பரப்பளவுள்ள வடகிழக்கு எல்லைப்புற மாகாணத்தில் மொத்தம் ஐந்து பிரிவுகள் உள்ளன. காமெங், ஸுபான்ஸிரி, ஸியாங், லோஹித், திராப் ஆகிய இந்த ஐந்து பிரிவுகளில் சீனத் தாக்குதலுக்கு உள்ளானவை வடக்குப் பகுதியில் முறையே மேற்கு கிழக்காக அமைந்துள்ள முதல் நான்கு பிரிவுகள் தான். இந்நான்கு பகுதிகளும் அங்கு ஓடும் நான்கு நதிகளின் பெயர்களையே கொண்டிருக்கின்றன. பிரம்மபுத்திராவின் உபநதிகள் இவை.

நேபா அஸ்ஸாமின் ஒரு பகுதியே என்றாலும் அரசியல் சட்டப்படி மத்திய அரசாங்கத்தின் ஆளுகைக்கு மட்டுமே உட்படுகிறது இது. அஸ்ஸாம் கவர்னர் ஜனாதிபதியின் பிரதிநிதியாக இருந்து நேபா பகுதியைத் தமது நேரடியான மேற்பார்வையின் கீழ் நிர்வகிக்கிறார். நேபாவின் ஐந்து பகுதிகளுக்கும் ஐந்து அதிகாரிகளும் அவர்களுக்குத் தலைமை அதிகாரியாக ஒருவரும் உள்ளனர்.



நேபாவில் மலையடிவாரங்களில் பிரம்மபுத்திரா நதியருகே வெப்பமான சூழ்நிலையும் உள்ளது; வடக்கே இருபதாயிரம் அடி உயரமுள்ள வெண்பனி மூடிய மலைகளும் உள்ளன. அநேகமாக எல்லாப் பகுதிகளுமே அடர்ந்த கானகங்கள் சூழ்ந்தவைதாம். நாடு சுதந்திரம் பெற்ற பின்னர்தான் ஒற்றையடிப் பாதைகள் சில, ஜீப் செல்லக் கூடிய சாலைகளாக மாறி வருகின்றன.

இங்கு வாழும் பூர்வ குடிகளிலும் பலப்பல பிரிவினர் உண்டு. ஒவ்வொருவருக்கும் தனித்தனி மொழிகளும், பழக்க வழக்கங்களும், உடை அலங்காரங்களும் இருக்கின்றன. பொதுவாக இவர்கள் அந்நியரின் தலையீட்டினை விரும்பாதவர்கள். தங்கள் போக்கில் அமைதியாகக் காலத்தை ஓட்ட எண்ணுபவர்கள். எப்போதாவது மலைப் பிராந்தியங்களை விட்டுச் சமவெளிப் பிரதேசங்களுக்குச் சந்தைகளில் ஏதேனும் வாங்க வருவார்கள். வந்த வேலை முடிந்ததும் உடனடியாகத் திரும்பிப் போய் விடுவார்கள்.

விவசாயத்தில் ஈடுபடும் இவர்களிடத்தில் சில விநோதங்களைக் காணலாம். ஒரு துண்டு நிலத்தை இரண்டு வருஷங்கள் பயிரிட்டால் அடுத்த நாலைந்து வருஷங்களுக்கு அதனருகிலேயே போக மாட்டார்கள். அத்தனை நாட்களாகப் பயிரிடாமல் தரிசாய் விட்டு வைத்திருந்த வேறு நிலத்தையே நாடி அதனை மீண்டும் பண்படுத்துவார்கள். தேவைக்கு அதிகமாகக் காடுகளில் உள்ள மரங்களை வெட்டிச் சாய்த்துப் புதிய நிலங்களை விவசாயத்துக்குக் கொணருவதைப் பாவமாகக் கருதுகிறார்கள் இவர்கள். அடிப்படைத் தேவைகளுக்கு அப்பால் இவர்கள் எதற்காகவும் பேராசைப் படுவதில்லை. இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தியுடன் வாழும் இதயம் படைத்தவர்கள் இவர்கள்.

ஆதி நாட்களில் இந்தப் பகுதிகளைச் சர்வே செய்ய வந்த ஆங்கிலேய அதிகாரிகள் பலர் இவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு அவதிப்பட்டிருக்கிறார்கள். அப்போதெல்லாம் கையிலிருக்கும் தூரதிருஷ்டிக் கண்ணாடியைக் காண்பித்தோ அல்லது துப்பாக்கியை வானை நோக்கி வெடித்தோ அந்தப் பூர்வ குடிகளை அதிசயத்தில் ஆழ்த்தித் தப்பி யிருக்கிறார்கள்! புதிய தோட்டாக்களைத் துப்பாக்கியில் பொருத்துவதற்காகப் 'பாரல்'லை மடக்கினால் 'ஐயய்யோ அதை ஒடித்துப் பாழ்படுத்தி விட்டானே' என்று அழுது புலம்புவார்களாம் இந்தப் பாமர மக்கள்!

இந்த அணுசக்தி சகாப்தத்தில் தாங்கள் மட்டும் மிகவும் பின்தங்கியவர்களாகி விடக் கூடாது என்கிற விழிப்பு தற்போது இவர்களிடையே ஏற்பட்டிருக்கிறது. இன்று கிராமத்துக்கு ஒரு சைக்கிளும், ஒரு ரேடியோவும் டார்ச் லைட்டுகளும் கூடச் சாதாரணமாகக் காண முடிகிறது. என்றாலும் தொன்மையான பழக்க வழக்கங்களையும் இவர்கள் விட்டு விட வில்லை.

விசேஷ தினங்களில் நடனங்களும் கேளிக்கைகளும் நடைபெறும். இந்த நடனங்கள் சில சந்தர்ப்பங்களில் பல இரவுகள் தொடர்ந்து நடக்கும். அப்போதெல்லாம் கிராமத் தலைவன் நடனக் குழுவுக்கு மையத்திலிருந்து கொண்டு முரசைத் தட்டியபடியே முன்னோர்களின் வீரதீரப் பிரதாபங்களையெல்லாம் கூறி வருவான்.

இப்படி வீரத்திலும் வினயத்திலும் சிறந்து விளங்கியவர்களை வஞ்சனையால் வெல்லப் பார்த்தார்கள் சீனர்கள். 1950ல் திபெத்தைக் கைப்பற்றியது முதற்கொண்டே சீனக் கால சர்ப்பத்தின் விஷ நாக்கு நேபாவை நோக்கி நீளத் தொடங்கி விட்டது. முதலில் திபெத்துக்கும் நேபா மக்களுக்கும் இடையே நடைபெற்று வந்த வியாபாரத்துக்குத் தடை விதித்தார்கள். இதன் பிறகு அவர்களிடம் பண்புடன் நடந்துகொள்வதுபோல் பாசாங்கு செய்தும், வெகுமதிகளை அளித்தும், கேளிக்கைகளை நடத்தியும் அந்த எளிய மக்களைக் கவரப் பார்த்தார்கள். இதிலெல்லாம் நேபா கிராமிய மக்கள் மயங்கிவிட வில்லை. ஏனெனில், அதே நேரத்தில் சோகக் கதைகளைக் கூறிக் கொண்டு வரும் திபெத்திய அகதிகளை அவர்கள் பார்த்துக் கொண்டிருந்தனர்.

''மோம்பா தேசத்தவராக நீங்கள் மதிக்கப்படுவீர்கள்; தனித் தன்மையுடன் நீங்கள் திகழலாம்'' என்பது போன்ற பசப்பு வார்த்தைகளால் கூட மோம்பா ஜாதியினரைக் கவர முடியாது போகவே சீனர்கள் பயமுறுத்தல் படலத்தையும் பின்னர் படையெடுப்பையும் தொடங்கினார்கள்.

பாரத நாட்டுக்கு ஒரு சோதனைக் காலமாக விளங்கிய சீனர்களின் நேபா படையெடுப்பின்போது நேபா பூர்வ குடிமக்கள் ஆயுதம் தாங்கிச் சீனர்களுடன் போராடவில்லை என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் காட்டிய தீரமும் புரிந்த அளப்பரிய சேவைகளும் எந்த ஜவானுடையதைவிடச் சற்றும் குறைந்ததல்ல. முன்னணிப் படையினருக்கு உணவும் போர்த் தளவாடங்களும் எடுத்துப் போக வேண்டுமா? இதோ தயார்! உளவறிந்து வரவேண்டுமா? இதோ கிளம்பி விட்டோம்! காயம் அடைந்தவர்களுக்கு உதவவேண்டுமா? சரி, பொறுப்பை எங்களிடம் விடுங்கள்! இப்படி ஆயிரக்கணக்கானோர் ஆண்கள் பெண்கள் குழந்தைகள் உள்படச் சற்றேனும் மனம் தளராமல் நமது ஜவான்களுக்கு உதவினார்கள்.

இன்றும் அறுநூற்றி ஐம்பது மைல் நீளமுள்ள நேபா எல்லைப்புறப் பகுதியில்தான் சீனர்களின் படைக்குவிப்பு மிக அதிகமாய் உள்ளது. இதனால்தான் அன்னிய ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடுவதில் தீவிரமாக ஈடுபடத் தங்களுக்கு ராணுவப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும் என்றும் கேட்கிறார்கள் நேபாவில் வாழும் பூர்வ குடிமக்கள். அவர்களது நியாயமான கோரிக்கைக்குச் செவி சாய்க்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

நேபாவில் நடந்த, இனி நடைபெறக் கூடிய போராட்டங்கள் ஜவான்களின் யுத்தம் மட்டுமல்ல. சுதந்திர வாழ்க்கையில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்ட பாமர மக்களின் போராட்டம் அது. சீன ஆக்கிரமிப்பின்போது நேபா மக்கள் காட்டிய நெஞ்சத் துணிவுக்காகவும் புத்தி சாதுரியத்துக்காகவும் நாடு முழுவதுமே அவர்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறது.

# ால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை கற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், நுரைக்கும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் ருசித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

மாக கால்கேட் உபயோகித்தால், அது:

துர் நாற்றத்தை அகற்றுகிறது

சொத்தையைத் தடுக்கிறது

பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

த்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெற உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

TAM.

# பட்டதாரிணிக்குக் கடிதம்



**எனதன்புள்ள வித்யா பி. ஏ.க்கு.**

நீ போன வாரம் 'எக்ஸ்பிரஸ் டெலிவெரி'யில் அனுப்பிய கடிதம் இன்று வந்து சேர்ந்து விட்டது. நான் இருக்கும் தெருக்கோடியில் சதி அனுசுயா ராணி என்று ஒரு புதிய ஸினிமா நட்சத்திரம் குடிவந்திருக்கிறார். அது அங்கே போய் விட்டு வந்தது.

நேற்று மத்தியானம் கான்வொகேஷன் நடந்திருக்குமே. கௌன் மாட்டிக் கொண்டு போய் சன்னது வாங்கிக் கொண்டு வந்திருப்பாயே! ஆகையால் உன்னைத் தைரியமாக 'பி. ஏ.' என்று அழைத்திருக்கிறேன். நீ பதில் கடிதம் எழுதும்போது அடியில் உன் கையெழுத்துக்குப் பக்கத்தில் அந்த இரண்டு எழுத்துக்களும் தாமாக வந்து உட்கார்ந்து கொண்டிருக்கும். அம்பிகாவின் அம்மா தபால்காரனை என்ன கேட்டுக் கொண்டிருக்கிறாள் தெரியுமா? பெண் பேருக்குக் கடிதம் வந்தால் 'அம்பிகா பி. எஸ்ஸி.' தபால்!' என்று உரக்கச் சொல்லச் சொல்லியிருக்கிறாள்.

நீ எதிர்த்த வீட்டு வக்கீல் மாமாவின் கௌனை வாங்கிப் போட்டுக் கொண்டு போய் இருப்பாய். அதை நான் பார்த்திருக்கிறேன். சில இடங்களில் ஒட்டுப் போட்டிருக்கும்! ஆனால் அது அவர் அப்பா போட்டுக் கொண்டிருந்ததென்றும் 'ஆகி வந்த' தென்றும் அதை அவர் விடுவதில்லை.

நீ கௌன் சட்டை மாட்டிக் கொண்டு, கழுத்தில் 'ஸ்கார்ப்' அணிந்துகொண்டு தலையில் கறுப்பு 'ஹீட்' குல்லாயைப் போட்டுக் கொண்டிருப்பதை நான் பார்க்கச் சந்தர்ப்பப்படவில்லை என்றிருக்கிறது. ஒன்றிரண்டு பெண்கள் கூச்சப்பட்டுக் கொண்டு,



ஸெனட் மண்டபத்தை விட்டு வெளியில் வரும் போதே கௌன், குல்லாய் முதலியவற்றை ஒரு மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு வந்து விடும். ஆனால் நீ அப்படிச் செய்ய மாட்டாய். உன்னை அந்த உடையில் பார்ப்பதற்காக உன் அப்பாவும் அம்மாவும் வந்து வெளியில் காத்துக் கொண்டிருப்பார்களே. உன் பாட்டி மட்டும் இப்போதிருந்தால், உன்னை அந்த 'டிரஸ்'ஸோடேயே வீட்டுக்கு வரச் சொல்லி, வண்டியிலிருந்து இறங்கியதும், ஆரத்தி சுற்றி, திருஷ்டி கழித்திருப்பாள்.

அந்தக் கறுப்புச் சட்டை இருக்கிறதே, அதை முன்னெல்லாம் அல்பாக்கா என்ற துணியில் தைக்கிறது வழக்கம். தென் அமெரிக்காவில் 'அல்பாக்கா' என்று ஒட்டகம் மாதிரி சிறிய பிராணி இருக்கிறது. அதன் ரோமம் கம்பளி ரோமம்தான். ஆனால் அது பட்டுப் போல் நைஸாக இருக்கும். அல்பாக்கா துணி அந்தப் பட்டுக் கம்பளி நூல் நெசவு.

வெள்ளைக்காரர்கள் கறுப்பு உடையைத் தாங்கள் துக்கம் கொண்டாடுவதைக் காண்பிப்பதற்காகத் தரிப்பது வழக்கம். சர்வகலாசாலைப் பட்டம் பெறும் போதும் கறுப்பு வர்ண உடை எதற்காக அணிகிறார்களோ, தெரியவில்லை. அவர்கள் ஊரில் அவர்கள் செய்ததை நாமும் இங்கே செய்கிறோமே, அதைச் சொல்லு!

நேற்று ஒரு பத்திரிகையில் ஒரு செய்தி படித்தேன். யாரோ ஒருவர் 'சுரைக்காய் விடு தூது' என்ற பழைய காலக் கவிதையைப் பற்றி மிக நன்றாகப் பிரசங்கம் செய்வாராம். அதற்காக அவருக்குப் பொன்னாடை போர்த்தினார்களாம்.

கிராப்போ, குடுமியோ, மீசையோ வைத்துக் கொண்டிருக்கிற ஆண் பிள்ளைகளுக்குப் பொன்னாடை போர்த்தினால் எப்படி இருக்கிறது? நாடகத்தில் வருகிற ராஜா மகன், ஒரு வேலைக்காரப் பெண்ணுக்காக ராஜ்யத்தைத் துறந்து விட்டுத் தேசாந்திரம் போகிற போது 'டிரெஸ்' செய்து கொள்கிறது போலத்தான் இருக்கிறது! நீங்கள் வயசுப் பெண்கள், கறுப்புக் கௌனைப் போட்டுக் கொள்கிறதைப் பற்றி நினைத்தபோது இது ஞாபகம் வந்தது. பெண்களுக்குத்தான் பொன்னாடை போர்த்த வேண்டும்.

பட்டம் பெற்றுக் கொள்கிற பெண்கள் பொன்னாடை மாதிரி ஏதாவது மேலே போர்த்திக் கொள்ள ஏற்பாடு செய்தால் என்ன? பொன் வர்ணம், அல்லது மஞ்சள் வர்ணப் பட்டில் கொஞ்சம் பெரிய 'ஸ்கார்ப்'பாகத் தோள்கள்மீது போர்த்திக் கொள்ளலாம். அந்த உடை பெண்களுக்குப் பொருத்தமாயும் அழகாயும், மங்களகரமாயும் இருக்கும். ஒரு கஜ நீளமுள்ளதாக வாங்கினால் அதைப் பிறகு ஜாக்கெட்டாகத் தைத்துப் போட்டுக் கொண்டு விடலாம்!

ஒரு கௌனை 'வாடகை'க்குக் கொடுக்க ஒன்பது ரூபாய் கேட்கிறார்கள். முதல் பரீட்சையில் தவறிப் போய்ப் பிறகு செப்டம்பர் பரீட்சையில் தேறுகிற போது ஒரு முறை கான்வொகேஷன் நடக்கிறதே. அப்போது கௌன் வாடகையை ஒரு ரூபாய் குறைத்துக் கொள்கிறார்களாம். அந்த ஒரு ரூபாய்க்காக யாராவது முதல் பரீட்சையில் தவறிப்போய் விட விரும்புவார்களா? பெண்களுக்கென்று நான் சொன்னபடி தனி கான்வொகேஷன் உடை ஏற்பட்டால், அவர்கள் யார் யாரோ ஆண் பிள்ளைகள் உபயோகித்த பழைய கௌன்களை யெல்லாம் தாங்கள் போட்டுக் கொள்ளும்படி நேராது.

# அனுசுயா

நான் உனக்கு ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி எழுதுவதற்காக உட்கார்ந்தேன். அது எதிலேயோ ஆரம்பித்து எதிலேயோ கொண்டு போய் விட்டது.

ஏன், வித்யா! நீ எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை தேறியபோது பாவாடை கட்டி மேலாக்குப் போட்டுக் கொண்டிருந்தாய் அல்லவா? அப்பொழுது உனக்குப் பதினாறு நடந்து கொண்டிருந்தது. உன்னை மேலே படிக்க வைக்கிறதைப் பற்றி அப்பா யோசனை செய்து கொண்டிருந்தார். சாமான்கள் விலைவாசி ஏறிக் கொண்டே போவதில் குடித்தனம் நடத்துவதே கஷ்டமாகிக்கொண்டு வருகிறது. உன் தம்பியையும், தங்கையையும் வேறு படிக்க வைத்தாக வேண்டும். பணத்துக்கு எங்கே போவது என்றுதான். தவிர உன் கல்யாணத்துக்காகப் பணத்துக்கு என்ன பண்ணுவது என்ற கவலை வேறு. அப்பா, உன்னை ஹிந்தியும், டைப்ரைட்டிங்கும் கற்றுக் கொள்ளச் சொன்னார்.

அம்மாவுக்கு மட்டும் நீ எப்படியும் கல்லூரியில் படித்தாக வேண்டும் என்கிறது. படிப்பிருந்தால்தானே ஓரளவு நல்ல வரன் கிடைக்கும். குடும்பத்திலே முதன் முதலாக ஒரு பெண் பி. ஏ. பாஸ் செய்தாள் என்ற பெருமை வேறு அடையலாம். பட்டினி கிடந்தாலும் சரி, குழந்தையை மேலே படிக்க வைத்தாக வேண்டும் என்று அம்மா சொல்லிக் கொண்டிருந்தாள். உன்னை எல்லாக் கல்லூரிக்கும் இடத்துக்கும் மனுப் போடச் சொன்னான். உனக்கு மூன்று கல்லூரியில் இடம் கிடைத்தது. நீ ஒன்றில் சேர்ந்து படிக்கலானாய்.

நீ நாலு வருஷ காலம் படித்தாய். இந்த நாலு வருஷ காலத்தில் உன் கல்லூரிச் சம்பளம், புத்தகங்கள், உடை, பஸ், டிபன் செலவு முதலியவற்றுக்காகக் கிட்டத்தட்ட மூவாயிரத்தைந்நூறு ரூபாய் செலவழிந்திருக்கும். நீ கெட்டிக்காரப் பெண். நீ பரீட்சையில் தேறுவாயோ, மாட்டாயோ என்று அப்பா அம்மா கவலைப்படுவதற்கு இடம்கொடுக்காமல்



உழைத்துப் படித்தும் வந்தாய். உன் அப்பா 'குழந்தைக்குப் பரீட்சையில் டிஸ்டிங்ஷன் கிடைப்பதைப் பற்றித் துளி சந்தேகம்' என்று கர்வத்துடன் சொல்லிக் கேட்டிருக்கிறேன்.

இருபது வயதான வித்யா, பி. ஏ., நீ என்ன செய்யப் போகிறாய்? மேலே படிக்கப் போகிறாயா அல்லது கலியாணம் செய்து கொள்ளப் போகிறாயா? அல்லது உத்தியோகம் செய்யப் போகிறாயா?

பொறுப்பை உணர்ந்து கஷ்டப்படும் குடும்பங்களைச் சேர்ந்த ஒவ்வொரு பட்டதாரிப் பெண்ணும் சர்வகலாசாலை மண்டபத்தின் படிகளிலிருந்து இறங்கும் போதே இந்தக் கேள்விகள் தான் அவர்கள் மனத்தில் கிளம்பிக் கொண்டிருக்கும்.

அப்பா உன்னை மேலே படிக்க வைப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை. அவருக்கு வேண்டாம் என்கிறதில்லை. பணக் கஷ்டத்தால் இணறிக் கொண்டிருக்கிறார்.

கலியாணம் செய்து கொள்வது சுலபமா? பெண்களான நீங்கள் பட்ட சன்னதைப் பெற்றுக் கொண்டு சர்வகலாசாலைக் கட்டடத்திலிருந்து வெளியே வருகிறீர்கள். அப்போது அங்கே வாலிபர்களின் பெற்றோர்கள் உங்களைத் தங்கள் நாட்டுப்பெண்களாக்கிக் கொள்வதற்காகத் தயாராய் 'க்யூ' வரிசையில் நின்று காத்துக் கொண்டிருப்பதில்லை. ஊர், குலம், கோத்திரம், பருமன், கறுப்பு சிவப்பு, ஜாதகம், எதிர் ஜாமீன் என்று எத்தனையோ இருக்கின்றனவே. நாமாக ஏற்படுத்திக் கொண்டுள்ள அந்தத் தொல்லைகளிலிருந்து தப்பி ஒரு வரன் பிடிக்கக் குறைந்தது மூன்று, நான்கு ஏழெட்டு, பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் கூட ஆகிவிடலாம். அப்படி ஒரு வரன் தகையும் வரை நீ என்ன செய்து கொண்டிருக்கப் போகிறாய், வித்யா!

உன்னோடு சேர்ந்து பல நூற்றுக்கணக்கான பெண்கள் சர்வகலாசாலைப் பட்டம் பெற்றிருக்கிறார்கள். இவர்களுள் சிலர் பணக்காரப் பெண்கள். ''என் தலையெழுத்து. கேவலம் ஏர்கண்டிஷன் செய்த முதல் வகுப்பு வண்டியில் பிராணனை விட்டுக் கொண்டு போக வேண்டியிருக்கிறது. போயிங் விமானத்தில் சட்டுப் புட்டென்று போனோமில்லை'' என்று கண்ணைக் கசக்கக் கூடிய அந்தஸ்தில் உள்ளவர்கள். அவர்கள் தங்கள் கலியாணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதேயில்லை. அவர்கள் தந்தைமார், ''ஏதாவது ஒரு கழுதையைப் பிடித்துக் கொண்டு வந்து தாலி கட்டச் சொல்கிறேன்'' என்று மிக அலட்சியமாய்ச் சொல்வார்கள். அந்தக் 'கழுதை'க்கு ஒரு பங்களாவும், ஒரு மோட்டார் காரும் கொடுத்து ஒரு பெரிய உத்தியோகமும் செய்து வைத்து விட்டால் போகிறது என்ற பணத் தெம்பு அவர்களுக்கு.

சில பெண்களின் குடும்பம் மிக மிகக் கஷ்டமான நிலைமையில் இருக்கும். பெண் படித்து உத்தியோகம் செய்ய வேண்டும் என்பதற்காகவே படிக்க வைத்திருப்பார்கள். பெண்களும் தாங்கள் வேலை செய்து பெற்றோர்களுக்கு உதவ வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கும். அவர்கள் கலியாணத்தைப் பற்றி மறந்து விட்டு இன்றே வேலை தேட ஆரம்பித்திருப்பார்கள்.

வித்யா, உன்னைப் போன்ற பெண்கள் தான் நிறைய பேர் படித்திருப்பவர்கள். அவர்கள் தந்தைகளுக்கு மாதம் முந்நூறு முதல் ஐந்நூறு அறுநூறு ரூபாய் வரை வரும்படி இருக்கும். நடுத்தர வகுப்பினர் என்று இவர்களைத் தான் சொல்வது. சம்பிரதாயத்தில் ஊறிப் போனவர்கள். பக்கத்து வீட்டுக்காரர்கள் என்ன நினைப்பார்கள், நாலு பேர் என்ன சொல்வார்கள்? இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டு கடன் வாங்கிப் பண்டிகைகள் கொண்டாடுவார்கள். 'சம்பிரதாயம்' 'வழக்கம்' என்று சொல்லிக் கொண்டு அர்த்தமில்லாத காரியங்களுக்கெல்லாம் அநாவசியமாகப் பணம் செலவழிப்பார்கள். மார்வாரிகளும், சிட் பண்டுக்காரர்களும் இவர்களை நம்பித் தான் தொழில் நடத்தி வருகிறார்கள். இவர்களுள் சிலர் தங்கள் பெண் வேலை பார்ப்பது அகௌரவம் என்றுகூட நினைக்கிறார்கள்.

என்னைக் கேட்டால் நடுத்தர வகுப்புக் குடும்பங்களைச் சேர்ந்த படித்த பெண்கள் எல்லாருமே வேலை பார்க்க வேண்டும் என்று சொல்வேன். படித்தது வீணாகப் போகாமல் இருக்கும்; குடும்பத்துக்கு உதவியாயிருக்கும். கலியாணம் செய்து கொண்டு தனியாகக் குடித்தனம் செய்யும் போது அவர்களுக்கே உதவியாயிருக்கும். ஏன், முதலில் கலியாணம் செய்து கொள்ளச் செலவுக்கே பணம் சேர்த்து வைக்கலாமே.

ஒரு படித்த பையன் தன்னைப் போலவே படித்த ஒரு பெண்ணை, தன்னைப் போலவே உத்தியோகம் செய்து சம்பாதிக்கக் கூடிய ஒரு பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்கிறதுக்கு ஆசைப்படுவான். வரதட்சிணை கொடுக்க வேண்டும் என்று வாய் கூசாமல், வெட்கமில்லாமல் கேட்கிற வழக்கம் நிற்கிறவரை ஒவ்வொரு படித்த பெண்ணும் உத்தியோகம் செய்து பணம் சேர்த்துக் கொண்ட பிறகே கல்யாணம் செய்து கொள்ளும்படி ஆகும். அப்படிப்பட்ட அவசியம் நேரா விட்டாலும் கூட வித்யா, நீயும் உன் போன்ற பட்டம் பெற்ற பெண்களும் ஏதாவது வேலை பார்க்க வேண்டும் என்றுதான் சொல்வேன். நானும் உனக்கு ஒரு நல்ல வேலையாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

உனதன்புள்ள

[அனுசுயா

[illegible]

''நளினி கெமிஸ்டரி, பிஸிக்ஸ், பூகோளம் மூன்றிலேயும் முதல் மார்க்கு வாங்கியிருக்கிறாளாமே. அவள் ஏன் கான்வொகேஷனுக்கு வரவில்லை?''

''அவள் அடையாறில் குடியிருக்கிறாள்.''

''இருந்தால் என்ன? அவளுக்குச் சொந்தக் கார்கூட இருக்கிறதே?''

''இன்றைக்குப் புதன் கிழமையல்லவா? வடக்கே சூலமாயிற்றே? அடையாற்றிலிருந்து ஸெனட் கட்டடத்துக்கு வடக்கு நோக்கித் தானே வர வேண்டும்?''

# ஆதரவுடன்
# சீராட்டி
# **ஆஸ்டர்மில்க்**
# பாலூட்டி...

உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்:
ஆஸ்டர்மில்க் அளிக்கும் ஆரோக்கியம்.
காரணம், தாய்ப்பாலுக்கு நிகரானது
ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து
தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின்
ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப்
பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, உங்கள்
குழந்தையின் திடமான கல் வளர்ச்சிக்கான
அயச்சத்தும் வைட்டமின்களும் அதில்
சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன. வெப்பப்
பிரதேசங்களிலுள்ள குழந்தைகளுக்
கென்றே தயாரிக்கப்பட்டுள்ளது.

...தாய்ப்பாலுக்கு
நிகரானது

எளிதில்
கிடைக்கிறது
இப்போது




லவசம்: ''ஆஸ்டர்மில்க் புத்தகம்'' (ஆங்கி
ப் பிரதி)... விரிவுமிக்க, குழந்தைப் பராம
ப்பு நூல்... தபால் செலவுக்காக 50 நயா
பசா தபால் வில்லைகள் இணைத்து எழுதுக:
ஆஸ்டர்மில்க்', போஸ்ட் பாக்ஸ் நம்பர்
420, மதராஸ் 2.

OS. 14-140-M. TM



கல்லூரி முதல்வர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி

# விவசாயக் கல்லூரி

விவசாயத் துறையில் நவீன வழிகளில் பயிற்சி பெற்ற ஆசாமி ஒருவர் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தார். கிராமவாசிகளிடம் தம் ஆராய்ச்சி அனுபவங்களை விளக்கிக் கொண்டு வரும்போது, 'இந்தக் கோட்டுப் பாக்கெட் கொள்ளும் அளவுக்கான சிறந்த செயற்கை உரத்தைக் கொண்டு ஓர் ஏக்கரா நிலத்தில் நல்ல விளைச்சல் காணலாம்' என்றார். அவருடன் பேசிக் கொண்டிருந்த கிராமவாசிகளில் ஒரு நபர் தீவிர இயற்கைவாதி போலும்.

'அப்படியா? அந்த உரத்தின் மூலம் கண்டு முதலாகும் தானியத்தையும் அப்படியே மற்றொரு கோட்டுப் பாக்கெட்டில் அடக்கி விடலாமாக்கும்?' என்று கேட்டு ஒரு வெற்றிப் புன்னகையை வீசினாராம்.

இந்த நகைச்சுவைத் துணுக்கை உருவாக்கியவர் பழைமையின் உபாசகராக இருக்கலாம். அதன் காரணமாகப் புதுமையை மட்டம் தட்டியிருக்கலாம். ஆனால் அவர் ஒரு தடவை கோவை விவசாயக் கல்லூரிக்குள் புகுந்து அது செயல்படும் விதத்தைப் புரிந்து கொண்டு வெளி வந்திருந்தாரானால், மேலே சொன்ன நகைச்சுவைத் துணுக்கு அவர் கற்பனையில் தோன்றியிருக்காது. பழைமையை அழிக்காமல், அதை மறக்காமல் அத்துடன் புதுமையை இணைத்து நாட்டின் வளத்தைப் பெருக்கும் நல்லதொரு பணியைத்தான் அந்தக் கல்லூரி தன் மாணவர்கள் மூலம் செய்து கொண்டிருக்கிறது.

மாணவர்கள், அதிகாலை வேளையில் முழங்கால் அளவு தண்ணீரில் நின்று ஏர் பிடித்து முரட்டு மாடுகளை ஓட்டி உழும் காட்சி ஒன்றே, புதுமையும், பழைமையும் இணைந்து போவதற்கான சான்றாகும். விவசாயக் கலையை அவர்கள் பரிசோதனைச் சாலையில், சோதனைக் குழாய் மூலம் மாத்திரம் கற்கவில்லை. பரந்து கிடக்கும் வயல் வெளிகளில், மண்வெட்டி பிடித்து வரப்பு வெட்டி, களை பிடுங்கி, நாற்று நட்டு, அவைகளுக்கு ரிக்கார்டுகள் தயாரித்துத்தான் அந்தக் கலையைக் கற்கிறார்கள். அந்தக் காட்சி பார்ப்பவர்களையெல்லாம் பரவசத்தில் ஆழ்த்திவிடுவதில் வியப்பென்ன?



மாணவர்களின் உழைப்பும் பணமும் உருவாக்கிய கட்டிடம்

நிலவளம், நீர்வளம் ஆகியவற்றுக்குப் பொறுப்பேற்றிருக்கும் பேராசிரியர் ராஜரத்தினம் அவர்கள் உற்சாகத்தில் மாணவர்களைவிட ஒரு படி மேலேயே போகிறார். ''இதோ, முந்நூறு அடி ஆழத்தில் 'போர் வெல்' (Borewell) அமைத்து நிமிஷத்துக்குப் பதினையாயிரம் காலன் தண்ணீர் கொட்ட ஏற்பாடு செய்திருக்கிறோம். ஒரு வேளை இந்தக் கிணற்றில் தண்ணீர் குறைந்தால் அதோ முந்நூற்றைம்பது அடி ஆழ 'போர் வெல்'லிலிருந்து இணைக்கப்பட்டுள்ள தண்ணீர்க் குழாய் உதவிக்கு வரும். அதில் நிமிடத்துக்கு இருபதாயிரம் காலன் தண்ணீர் கொட்டும்'' என்றெல்லாம் திரு ராஜரத்தினம்



'அனப்—இ—ஷாகி'



கல்லூரிக்குச் சொந்தமான இதுபோன்ற புதிய கட்டடங்கள் பல உள்ளன.

விவரித்த போது, வெகு நேரம் 'க்யூ' வரிசையில் நின்று தன் குழந்தைக்குப் பால் உணவு மா டப்பா வாங்கிய ஒரு தந்தையின் ஆனந்தம் அவர் குரலில் ஒலித்தது. ஏறத்தாழ எழுநூறுக்கும் மேற்பட்ட ஏக்கரா விஸ்தீரண முள்ள அந்த விவசாயக் கல்லூரியில் பரிசோதனை நிலங் களுக்குப் போதுமான தண்ணீர் வேண்டுமே என்ற கவலை அவருக்கல்லவா தெரியும்.

ஓர் இடத்தில் தண்ணீர் வறண்டு போன ஒரு பெரிய பழங்காலக் கிணற்றைப் பக்குவமாக இடித்து மூடி, அதை ஒரு பாதாளத் தோட்டமாகவே அமைத்துக் காண்பவர்களை வியப்படையச் செய்திருக்கிறார் கல்லூரி முதல்வர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

கல்லூரி முதல்வர் (மேல்) டாக்டர் எஸ். கிருஷ்ண மூர்த்தியுடன் சுமார் ஒன்றரை மணிநேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுத் திரும்பிய போது, நாமே ஒரு முழு விவசாயி ஆகிவிட்டோமோ என்ற உணர்ச்சி ஏற் பட்டதில் வியப்பில்லை. அமெரிக்க சர்வகலாசாலைகள் இரண்டில் தனித்தனியே ஆராய்ச்சி நடத்திப் பட்டங்கள் பெற்றிருக்கும் அவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் 'சரள மாகப் பேசி விஷயங்களை விளக்கும் விதத்திலிருந்தே, அவர் தம் மாணவர்களின் மரியாதையையும், அன்பை யும் ஒருங்கே பெறக் கூடியவர் என்று தீர்மானித்துவிட முடிகிறது.

விவசாயத் துறை சம்பந்தமான பல மத்திய கமிட்டி களில் அவர் பதவி வகிக்கிறார். தோட்டக் கலையில் பிரத்தியேக ஆர்வம் உள்ளவர். பழங்கள் ஆராய்ச்சி பற்றி அவர் எழுதியிருக்கும் பெரிய புத்தகம் ஒன்று, பழங்கள் போலவே கண் கவரும் வண்ணம் சமீபத்தில் வெளியாகியிருக்கிறது. அண்ணாமலை சர்வகலாசாலையில் விவசாயத் துறைப் பகுதியை ஆரம்பித்து வைத்ததில் டாக்டர் கிருஷ்ணமூர்த்திக்குப் பெரும் பங்கு உண்டு.

1907வரை சென்னை சைதாப்பேட்டைப் பகுதியில் சிறிய அளவில் இயங்கிக் கொண்டிருந்த இந்தக் கல்லூரி அந்த ஆண்டிலிருந்து கோவைக்குக் குடிபோயிற்று. ஆனால் 1920ல் சென்னை சர்வ கலாசாலையின் இணைப் பைப் பெற்று மாணவர்களுக்கு பி.எஸ்ஸி. (விவசாயம்) என்ற பட்டத்தைக் கொடுக்க ஆரம்பித்தது. இன்று, இக் கல்லூரிக் கட்ட டங்களும், ஹாஸ்டல் களும், ஆசிரியர்களின் இல்லங்களும் ஒன்று சேர்ந்து ஒரு தனி விவசாய நகரமாகவே விளங்குகின்றன.



உழைக்கத் தயங்காத மாணவர்கள்.

திராட்சைக் குலையைப் பலர் படத்தில் தான் பார்த்திருப்பார்கள். அல்லது 'இந்தப் பழம் புளிக்கும்' என்ற 'நரியும் திராட்சையும்' கதை மூலம் கேள்விப்பட்டிருப்பார்கள். நிரம்ப விஷயம்தெரிந்தவர்கள், திராட்சையானது கொடியில் விளையும் பழம் என்று ஓங்கி அடித்துப் பேசுவர். ஆனால் திராட்சைக் கொடியையே, நல்ல கவனிப்பு மூலம் திராட்சை மரமாக்கலாம் என்னும் சாதனையை இங்கேதான் காண முடிகிறது.

'அனப்-இ-ஷாஹி' என்ற பிரிவைச் சேர்ந்த திராட்சைக் கொடியை 25-4-53ல் ஊன்றி



நோயுற்ற செடிகளை ஆராயுமிடம் இந்தக் கண்ணாடி வீடு

யிருக்கிறார்கள். பத்து வருட காலத்தில் அது ஒரு பிரும்மாண்டமான மரமாகவே மாறி ஏறத்தாழ ஐந்நூறு சதுர அடி இடத்தில் படர்ந்து நிற்கிறது. நூற்று எண்பத்தி ஆறு திராட்சைக் குலைகள் ஆரோக்கியத்துடன் ஆங்காங்கு எட்டிப் பார்க்கின்றன. 'இந்த வகை திராட்சையைப் பயிர் செய்பவர்களுக்கு, குறைந்த அளவு விஸ்தீரணமுள்ள நிலப்பரப்பிலிருந்து ஏராளமான லாபம் கிடைக்க வழி இருக்கிறது' என்று இந்தப் பகுதியைக் கண்காணித்து வரும் திரு ராமன் விளக்கினார். இந்த விசேஷ திராட்சை மரத்துக்குப் பக்கத்திலேயே பெரிய அளவில், திராட்சைப் பயிர் செய்கிறார்கள்.

**ஆயிரம் உண்டிங்கு ஜாதி – எனில்**
**அன்னியர் வந்து புகலென்ன நீதி**

என்று கேட்பது போல் விதம் விதமான திராட்சைக் குலைகள், தங்கள் வர்க்கப் பிரிவுகளைக் காட்டும் அட்டைச் சீட்டுடன், உள்ளே நுழைபவர்களை முறைத்துப் பார்க்கின்றன.

மத்திய நிதிமந்திரி மொரார்ஜி தேசாயின் கட்டுப்பாட்டுக்கும் அடங்காத தங்கத்தை இந்தக் கல்லூரி ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். அந்தத் தங்கம் உருளைக் கிழங்குச் செடிகளில் ஒளிந்து கொண்டிருக்கிறதாம்! அந்தச் செடிகளின் உயிரையும் போக்கி விடுகிறதாம்! 'கோல்டன் நெமடோட்' என்று கண்ணுக்குத் தெரியாத ஒருவகை பூச்சி, உருளைக் கிழங்குச் செடிகளை ஆக்கிரமித்து அழிப்பதைத் தடுக்க விசேஷ ஆராய்ச்சி இங்கு நடத்துகிறார்கள்.

ஐந்நூறு மாணவர்களுக்கு மேலாகவே படித்துப் பயன் பெறும் இந்தக் கல்லூரி சிறந்த ஹாஸ்டல் வசதிகளையும் பெற்றிருக்கிறது. காலை ஆறு மணி சுமாருக்கே, மாணவர்கள் எல்லாரும் 'பிராக்டிகல்' வகுப்புகளுக்காக வயல்வெளிகளுக்குப் போகவேண்டியிருப்பதால், ஹாஸ்டல் வாசம் அவர்கள் எல்லாருக்குமே உகந்ததாக இருக்கிறது. அநேகமாய் எல்லோரும் சைக்கிள்களும் வைத்திருக்கிறார்கள். 'இரவு வேளைகளில் ஊரை விட்டுத் தள்ளியிருக்கும் கல்லூரி வட்டத்திலிருந்து, வெளியே போய்த் திரைப்படங்கள் பார்க்கவும் சைக்கிள்கள் வேண்டித்தானே இருக்கின்றன' என்று ஒரு மாணவர் வேடிக்கையாகக் குறிப்பிட்டார். தொடர்ந்து, 'நாங்கள் திரைப்படம் பார்க்கவேண்டுமென்று கிளம்பினால் அனுமதி கிடைப்பது கஷ்டம். பூச்சி பிடிக்கப் போவதாகத்தான் கிளம்புவோம்' என்று முடித்தார். ஆம்! அவர்கள் தங்கள் பாட சம்பந்தமாகச் செடிகளையும் பயிர்களையும் பாதிக்கும் பலவித பூச்சிகளையும் விட்டில்களையும் சேகரிக்க வேண்டும்!

கோவையில் உள்ள கறிகாய்க் கடைகளில் நல்ல ரகக் கறிகாய்களுக்குக் கிடைக்கும் மதிப்பும், அந்தஸ்தும், அழுகல், பூச்சி ரகங்களுக்கும்கூடக் கிடைக்கின்றன. காரணம் விவசாயக் கல்லூரி மாணவர்கள், தங்கள் ஆராய்ச்சிக்காக இந்தக் காய்கறிகளைத் தேடி வாங்குகிறார்கள். ஆகவே கோவை கறிகாய் வியாபாரிகள் நஷ்டம் ஏற்பட்டுவிடுமே என்று அஞ்ச வேண்டியதில்லையல்லவா?

'குறைந்த அளவு கல்லூரி சம்பளம், குறைந்த அளவு ஹாஸ்டல் அறை வாடகை, குறைந்த அளவு சாப்பாட்டுக் கட்டணம், குறைந்த கால அளவுள்ள தொழிற் பட்டப் படிப்பு' என்று இந்தக் கல்லூரி மாணவர்கள் பெருமைப்பட்டுக் கொண்டாலும் அவர்கள் படிக்க வேண்டியது என்னவோ நிறையத்தான் இருக்கின்றன. ரசாயனம், பௌதிகம், பொறி இயல், தாவர சாஸ்திரம், கால் நடை வைத்தியம் முதலிய எல்லாப் பாடங்களையுமே அவர்கள் பயில வேண்டி யிருக்கிறது.

மாணவர்கள் படிப்பிலும் சரி, பேச்சிலும் சரி, உற்சாகமுடையவர்களாகவே இருக்கிறார்கள். தமிழ் இலக்கிய மன்றம் ஒன்றை அமைத்துக் கொண்டு 'பொழில்' என்ற சஞ்சிகையையும் வெளியிடுகிறார்கள்.

சென்ற ஆண்டு அவர்கள் நடித்துக் காட்டிய 'வெற்றிப் பாதை' என்ற நாடகம், முழுக்க முழுக்க விவசாய வளர்ச்சிக்கான அடிப்படைக் கருத்துக்களைக் கொண்டதாய், ரசிகர்களின் பாராட்டுதல்களைப் பெற்றது.

இந்தக் கல்லூரியில் விவசாய வளர்ச்சியை விளக்கும் ஒரு பொருட்காட்சிச் சாலையை நிரந்தரமாகவே அமைத்திருக்கிறார்கள். அற்புதமான ஏற்பாடு. தொப்பிச் சம்பா நெல் பற்றியும், தலைவிரிச்சான் சோளத்தைப் பற்றியும், மற்றும் எத்தனையோ விதமான தானியங்களைப் பற்றியும் உடனடியாகப் புரிந்து கொள்ளும் விதத்தில் அமைக்கப்பட்டிருக்கும் இந்தப் பொருட்காட்சி பாராட்டப்பட வேண்டிய அம்சம். இப் பகுதிக்குப் பொறுப்பான திரு பால கங்காதரன் இன்முகத்துடன், பொறுமை குறையாமல் விளக்கம் கொடுக்கிறார்.

கல்லூரி வாசக சாலையில் பொறுப்பேற்று நிர்வகிக்கும் இளைஞர் திரு சிவசங்கரும் ஓர் உற்சாகம் நிறைந்த மாணவர்தாம். அறுபதினாயிரத்துக்கும் மேலான புத்தகங்கள், முந்நூற்றி எண்பத்தி ஒரு, வார, மாத மும்மாத விவசாயசஞ்சிகைகள் இவற்றை மாணவர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள் மனம் கோணாமல் விநியோகித்து நல்ல பெயர் வாங்குவது என்பது சாதாரண விஷயமா என்ன?

அதிகம் படிக்காத கிராமவாசிகளுக்கு, நிலவளத்தைப் பற்றியும், அதன் சாகுபடி சக்தியை அதிகப்படுத்தும் நவீன முறைகள் பற்றியும், பூச்சி ஒழிப்பு பற்றியும், விளக்கி, அவர்களுக்கு லாபகரமான தொழில்வளர்ச்சியைப் போதிக்க இந்தக் கல்லூரி மாணவர்கள் பகுதி பகுதிகளாகப் பிரிந்து, சுற்றுவட்டாரத்தில் இருக்கும் கிராமங்களுக்குச் சென்று, தாங்கள் கற்ற புதுமையையும் கிராமவாசிகள் கடைப்பிடிக்கும் பழமையையும் இணைத்து விவசாயத்திலும், கல்வி லட்சியத்திலும் — வெற்றி காண்பதைக் கண்டுதான் முதல்வர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும், உதவி முதல்வர் டாக்டர் பொன்னையாவும் மகிழ்ச்சியடைகிறார்கள். 'இந்தக் கல்லூரியின் குறிக்கோளே அந்த இணைப்பில்தான் இருக்கிறது' என்று டாக்டர் கிருஷ்ணமூர்த்தி தெரிவித்த போது அவர்முகம்பெருமிதத்தால் மலர்ந்தது.

# கஹ்ரா தாக்



எதேச்சையாக 'அன்று நண்பர் ஒருவர் வீட்டுக்குப் போயிருந்தேன். சாப்பாட்டு நேரம். 'இங்கேயே சாப்பிட்டு விடலாமே?' என்றார். கூடவே, ''தையல் இலையில் சாப்பிட்டுப் பழக்கமுண்டோ, இல்லையோ உங்களுக்கு?'' என்றும் கேட்டார்.

பழக்கம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் 'கிடையாது' என்று கூறி அவரைத் தர்ம சங்கடத்தில் ஆழ்த்தலாமா? 'அதென்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்? எந்த இலையாயிருந்தால் என்ன சாப்பிடுவதற்கு?' என்று சொல்லி வைத்தேன். ஆனால்....

பல அளவுள்ள இலைகளைப் பொறுக்கி 'ஈர்க்கை'க் கொண்டு எப்படித்தான் மெஷின் தையலே தோற்கும்படியாகத் தைக்கிறார்களோ, தெரியவில்லை. அந்தக் கைவண்ணத்தில் மயங்கிச் சாப்பிட உட்கார்ந்தால்...

மக்கி மடித்திருக்கும் இலையிலிருந்து 'ஈர்க்கு' ஒவ்வொன்றாகக் கழன்று வரும். உணவுப் பொருளுடன் கலந்து உண்டிக்குள் சென்றுவிடுமோ என்ற கவலையை ஏற்படுத்தும். ஈர்க்குகளைப் பொறுக்கி வைத்துச் சாப்பிட்டு எழுந்திருப்பதற்குள் போதும் போதுமென்றாகி விடும். என்னதான் அறுசுவை உணவாக இருந்தாலும், ருசித்துப் புசிக்கத் தோன்றாது. ஈர்க்குப் பொறுக்கவே தோன்றும்.

சற்றேறக் குறைய இதே அனுபவம்தான் 'கஹ்ரா தாக்' என்னும் படத்தைப் பார்க்க நேரிட்டபொழுது எனக்கு ஏற்பட்டது. ஏன்தான் இப்படியெல்லாம் படம் எடுக்கிறார்களோ என்ற எண்ணம் என் மனத்தில் 'ஆழ்ந்த வடு'வாகப் பதிந்தது.

'பந்தினி' படத்தில் பெண் கைதி என்றால் இந்தப் படத்தில் ஆண் கைதி. இரண்டு கதைகளிலும் ஜெயிலர் நல்லவர். கைதிச் சீர்திருத்தமா, குற்றவாளிச் சீர்திருத்தமா?— எது வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். இதுவே குறிக்கோள் இரு கதைகளுக்கும்.

தன் சகோதரியைத் தவறான கண் கொண்டு ஒரு மாணவன் பார்த்துவிட்டான் என்ற ஆத்திரத்தில் கதாநாயகன் அவனை அடித்துவிடுகிறான். அந்தச் சண்டை வலுத்துக் கடைசியில் கல்லூரிக் காம்பவுண்டுக்குள்ளேயே கொலையாக முடிகிறது.



அதற்காகத் தண்டனை அனுபவித்தவன் சிறையிலிருந்து விடுபட்டு வெளியே வருகிறான். கடைத் தெருவிலே அவனுக்குக் காதலி கிடைக்கிறாள். நீராவிப் படகில் பயணம் செய்யும்பொழுது கல்லூரியில் அவன் சண்டை போட்டானே, அதே காட்சியை நினைவுறுத்துவது போலப் பெண்களிடையே ஒரு சண்டை ஏற்படுகிறது. ஆத்திரத்தில் ஒருத்தி இன்னொருத்தியை நீரில் பிடித்துத் தள்ளி விடுகிறாள். கதாநாயகன் நீரில் விழுந்தவளைக் காப்பாற்றுகிறான். காப்பாற்றப்பட்டவள் யார், தெரியுமோ? அவன் காதலியின் தாயார். அந்தக் காதலி யார்?

அடிக்கடி படம் பார்த்து அனுபவப்பட்டவர்கள் சட்டென்று ஊகித்துப் புரிந்து கொண்டுவிடுவார்கள். கல்லூரியில் அவன் எந்தப் பையனைக் கொலை செய்தானோ, அந்த பையனின் சகோதரி என்று! அது மட்டுமா? இடையே ஏற்படும் இடையூறுகளையெல்லாம் தாண்டிக் கதை சுபமாக முடிந்திருக்கும் என்பதையும் சுலபமாகக் கூறி விடுவார்கள்.

இப்படத்தின் சில காட்சிகள் திறமையாகப் படமாக்கப் பட்டிருக்கின்றன. சில 'எப்பொழுதடா முடியும்' என்று பொறுமையைச் சோதிக்கின்றன.

ஹாஸ்யம் என்ற பெயரில் கேலிக் கூத்துக்குப் பஞ்சமில்லை. அவை ஹிந்திப் படங்களில் நகைச் சுவை இன்னும் தளர் நடைப் பருவத்தைத் தாண்டவில்லை என்பதைப் பறைசாற்றுகின்றன. கதாநாயகியாக வரும் மாலா சின்ஹாவின் பல போஸ்களைக் காட்டிக் கிறங்க வைக்க முயல்கிறார்கள். 'ரஸ்ஹன் பிக்சர்'ஸாரின் இந்தப் படாடோபத் தயாரிப்பு மக்கிப் போய் 'ஈர்க்கு'ப் புறப்படும் தையல் இலையில் உணவருந்தி எழுந்திருக்கும் அனுபவத்தைத்தான் பார்ப்போரிடையே உண்டாக்கும்.

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி






## பாமாலிவ் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...

உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வசீகரிக்கும் சுகந்தங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெய்யுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழுக்கு நீக்கம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அழகு சாதனமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு ஊட்டத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் தூயதாக்கி பரிமள புத்துயிரூட்டுவதனால், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**

PCH-S.G.-TAM.




1. நுங்கம்பாக்கம் உபநிஷத் ஆசிரமத்தில் உமையாள்புரம் ஸ்ரீ ஆர். சிவராம சாஸ்திரிகளின் பாகவத உபன்யாசம் சமீபத்தில் நிறைவேறியது. 2. வேதாரண்யத்தில் உப்பிலிருந்து பல்வேறு நுணை ரசாயனப் பொருள்களைத் தயாரிக்கும் புதிய தொழிற்சாலை ஒன்றை அமைக்க மேட்டூர் கெமிகல்ஸ் ஸ்தாபனத்தார் முன் வந்துள்ளனர். இந்தத் தொழிற்சாலைக்கு மந்திரி ஸ்ரீ ஆர். வெங்கடராமன் அஸ்திவாரக் கல் நாட்டினார்.









3. ரஷ்யப் பிரதமர் குருஷேவ் சமீபத்தில் இந்திய தேசியக் கண்காட்சியை மாஸ்கோவில் ஆரம்பித்து வைத்தார். 4. தமிழ் நாடகத் தந்தை பம்மல் சம்பந்த முதலியார் அவர்களின் தொண்ணூற்றோராவது பிறந்த நாளைக் கருணை விலாச சபையினர் சிறப்பாகக் கொண்டாடினர். 5. திருப்பதி மத்திய சம்ஸ்கிருத இன்ஸ்டிட்யூட்டின் பட்டமளிப்பு விழாவில் டாக்டர் வே. ராகவன் தலைமை வகிக்க, மத்திய சர்க்கார் கல்விமந்திரி டாக்டர் ஸ்ரீமாலி பட்டமளிப்புப் பிரசங்கம் செய்தார்.



# அறிவுக் கனலே, அருட் புனலே!



**நா**ளுக்கு நாள் மதுரா நாதரின் உடல் நிலை க்ஷீணித்து வந்தது. பேசும் சக்தியையும் இழந்து விட்டார் அவர். ஹிருதயரை மதுர் பாபுவின் இல்லத்துக்கு நாள்தோறும் அனுப்பி அவரது உடல்நலத்தை அறிந்து வந்தார் ராமகிருஷ்ணர்.

1871ம் ஆண்டு ஜூலை பதினாறு. அன்று ஹிருதயரையும் அனுப்பவில்லை ராமகிருஷ்ணர். சமாதியில் ஆழ்ந்து நீண்டகாலம் அதே நிலையில் இருந்தார்.

மாலை ஐந்து மணிக்கு ஹிருதயரைக் கூப்பிட்டார். ''சர்வேசுவரியின் சகிகள் ஆசார உபசாரமாக மதுரா நாதரைத் திவ்விய விமானத்தில் வைத்து அழைத்துச் சென்றார்கள்'' என்று தொண்டை தழுதழுக்கக் கூறினார்.

அன்று நள்ளிரவு செய்தி வந்தது — மாலை ஐந்து மணிக்கு மதுரா நாதர் சிவபதம் அடைந்து விட்டதாக.

''நான் அப்போது அவர் பக்கத்தில்தான் இருந்தேன்'' என்றார் ராமகிருஷ்ணர்.

**ம**துரா நாதருக்கும் ராமகிருஷ்ணருக்குமிடையே இருந்த உறவு பரம மதுரமானது. ராமகிருஷ்ணரின் பெருமையை முதலில் புரிந்து கொண்டவரும் அவரது முதல் முக்கியமான சிஷ்யரும் மதுரா நாதரே.

ஆரம்ப காலத்தில், ஆங்கிலப் படிப்பு அளித்திருந்த பகுத்தறிவு நோக்குடன்தான் மதுரா நாதர் 'பட்டாசாரியரை'ப் பார்த்தார். ஆனால் காலக்கிரமத்தில் அவரை ராமகிருஷ்ணர் எப்படிப் புடம் போட்டு எடுத்து விட்டார்!

ஆலயம் கட்டிய புதிது. ராதா கோவிந்தனின் ஆலயத்தில் ஏதோ திருவாபரணங்கள் களவு போய் விட்டன. அப்போது ''விக்கிரகத்தில் என்ன இருக்கிறது? எல்லாம் நம் பாவனைதான் இல்லையா?'' என்று கேட்டிருக்கிறார் மதுரா நாதர்.

கோயிலில் நிகழும் களவு, அல்லது மூல விக்கிரகத்தின் மேல் ஊர்ந்து செல்கிற ஒரு பூச்சி இவை 'ஆஸ்திகர்'களையெல்லாம் அசடு வழியச் செய்கிற சந்தர்ப்பங்கள்தான்! ஆனால் ராமகிருஷ்ணர் பளிச்சென்று பதில் சொன்னார்: ''செல்வங்களின் நிலைக்களனாகிய செந்திருவை மார்பில் தாங்கும் பெருமானுக்கு நம்முடைய பிச்சை நகைகளா ஒரு பொருட்டு! அதுதான் போகட்டும் என்றால் யோகிகளுக்கெல்லாம் யோகியான அவன் சாமானிய சம்சாரி போல் தன் நகை என்றும் நட்டு என்றும், சொத்து என்றும் சுதந்திரம் என்றுமா காபந்து செய்து கொள்வான்? அவனுக்கு எது இருந்தால் என்ன, எது போனால் என்ன?'' என்று கேட்டார்.



ஆம், ஊரில் நடக்கிற திருட்டை எல்லாம் ஆண்டவன் தடுத்து நிறுத்தா விட்டால் நமக்குத் தெரிவதில்லை. ஆனால் அவனுடைய கோவிலில் உள்ள பொருள்களை மட்டும் அவன் சுயநலமாகக் காப்பாற்றிக் கொள்ள



ரா. கணபதி

30

வேண்டுமென எதிர்பார்க்கிறோம்! இதே போலத்தான், எல்லாவற்றையும் சமமாகக் கருதுகிற அன்புத் தெய்வத்தின் மேல் ஒரு பூச்சி ஊர்ந்து சென்றால் சாந்நித்தியத்தைச் சந்தேகிக்கிறோம்.

எனினும் சிற்சில தலங்களில் தவசித்தர்கள் ஈசுவர சக்தியை உக்கிரமாகவே பிம்பங்களில் உறையச் செய்திருப்பதும் உண்டு. அங்கு சிறு அபசாரங்கள் செய்பவர்களும் அதற்குத் தண்டனை பெறுவதை இன்றும் காண்கிறோம்.

'விக்கிரகத்தில் என்ன இருக்கிறது?' என்று கேட்ட இதே மதுராநாதர் ராமகிருஷ்ணரின் தொடர்பு காரணமாகச் சில ஆண்டுகளுக்குப்பின் எப்படியெல்லாம் மாறிவிட்டார்? நவராத்திரியில் தமது இல்லத்தில் ஆராதித்த தேவியின் திருமூர்த்தத்தை விஜய தசமியன்று தீர்த்தத்தில் விஸர்ஜனம் செய்ய முடியாது என்று பிடிவாதம் பிடித்தார். ''என் அம்பிகையை நீரில் -டிப்பதா? என் உயிர் போனாலும் மாட்டேன். இது வெறும் விக்கிரகமா! -கம் உள்ள தேவி இதிலும் நிச்சயமாக வாழத்தானே செய்கிறாள்?'' என்றார்.

விநாயக சதுர்த்தி பூஜை ஆனபின் ஆனை முகனை ஆற்றில் விடுவது போல் விஜயதசமியன்று துர்க்கையின் பிரதிமையை நீரில்விடுவது வங்காளத்து வழக்கம். வழக்கத்தை இப்படி மதுராநாதர் முறிக்கிறாரே என்று விட்டார் கலங்கினர்.

அப்போது ராமகிருஷ்ணர் தமது திருவிரல்களால் மதுராநாதரின் இதய பாகத்தைத் தீண்டியபடி சொல்வார்: ''இப்போது தேவியை வெளியே விக்ரகத்தில் பார்க்கிறீர்கள். இந்தப் பார்வை எப்போது நிறையும் என்றால் அவளை உங்கள் உள்ளத்தில் காணும்போது தான். விக்கிரகம் உள்ளவரை அதில் தான் அவளைப் பார்க்கத் தோன்றும். அவளைப் பார்க்கப் பழக வேண்டுமென்பதற்காக முதலில் பிரதிமை பூஜை. பிறகு அவளை உள்ளத்தில் பார்க்க வேண்டுமென்பதற்காகவே பிரதிமையை விஸர்ஜனம் செய்கிற வழக்கம் இருக்கிறது. ஒரு சிறிய உண்மையை மறந்தீரே! தண்ணீர் எவளால் தண்ணீராக இருக்கிறதோ, வெள்ளமாக விம்முகிறதோ அவளைத் தண்ணீர் என்ன செய்து விடும்; வெள்ளம் என்ன செய்துவிடும்? நீரில் மூழ்கினால் அம்பிகையால் வாழ முடியாதா? அசடரே! சிலையில் இருப்பவள் உங்கள் சித்தத்தில் உறைவாள். சாஸ்திரப்படி விஸர்ஜனம் செய்யுங்கள்'' என்றார்.

மதுராநாதர் மறு பேச்சு பேசிவிட முடியுமா?

இவ்வாறு ராமகிருஷ்ணரின் எளிமையும் உயர்வும் ஒருங்கே கூடிய ஒப்பற்ற உபதேசங்களை முதன் முதலில் கேட்டவர் மதுராநாதர்தான். அவரை ஈசுவரனாகவும், தேவியாகவும் முதன் முதலில் அமுத தரிசனம் கண்டவரும் அவர்தான். அதிலிருந்து, தம்மை வாழ்விக்கவே தெய்வம் ராமகிருஷ்ணராக வந்திருக்கிறது என அவர் நம்பத் தொடங்கினார். தாம் எவ்வளவோ சோதித்தும் பெண்ணாசையும், பொன்னாசையும் சிறிதுமற்றிருந்த ராமகிருஷ்ணரைத் தெய்வமாகவே பூஜித்தார் அவர். அவரது சாதனைகளுக்கு ஓர் இடையூறுமின்றிப் பார்த்துக் கொண்டார். அவற்றுக்கு வேண்டிய திரவியத்தையெல்லாம் குறைவின்றி அளித்தார். சிவிகையும், கவிகையும் அளித்து அவரை க்ஷேத்திராடனம் இட்டுச் சென்றார்.

ஹிருதயரைப் போல மதுராநாதருக்கும் ஒருமுறை சமாதி அநுபவம் வேண்டும் என்ற ஆசை எழுந்தது. அதனை ராமகிருஷ்ணர் அநுக்கிரகித்ததும் உண்டு. ஆனால் மதுராநாதர் தாம் அதற்குப் பிறக்கவில்லை என்பதைத் தாமாகவே புரிந்துகொண்டார்.

புதுப் பாடகர் அவர்; புது வாத்தியாரிடம் பயின்றவர். பாதி பயிலும் பொழுதே அரங்கேறிவிட வேண்டும் என்ற ஆர்வம் அதிகமாகி விட்டது. ஒரு சபைக் காரியதரிசியைப் பிடித்து வெற்றியும் கண்டார்.

மேடையேறிப் பாடத் தொடங்கியவர், கண்களை மூடிக்கொண்டு ஒரு ராகத்தை ஆலாபனம் செய்யத் தொடங்கினர். ஏறக்குறைய முக்கால்



மணி நேரம் கழித்துக் கண்களைத் திறந்து பார்த்தால், எதிரே ஒரு காகிதம் மட்டும் இருந்தது. ரசிகர்கள் அனைவரும் வெளியேறியிருந்தனர்.

காகிதத் துணுக்கில், ''தங்கள் பாட்டு முடிந்ததும் ஞாபகமாக மின்சார விளக்குகளை அணைத்துவிட்டு, ஹால் கதவைப் பூட்டி எதிரே உள்ள கடையில் சாவியைக் கொடுத்து விட்டுப் போங்கள்!'' என்று எழுதியிருந்தது.

''நான் ஆத்ம சாதனையில் ஆழ்ந்து விட்டால் பண்ணை விவகாரம் எல்லாம் கெட்டுப் போகிறது. சூதும் வாதும் செய்பவர்கள் தலை ஓங்குகிறார்கள். தியானமும், சமாதியும் உங்களுக்குத்தான் தோதுப்படும். என்னைப் பொறுத்த மட்டில் உங்கள் பாத சேவையே எனக்குச் சமாதி'' என்றார் அவர்.

பெரிய சொத்தை நிர்வகிக்கவேண்டியிருந்ததால் மதுராநாதருமே பலமுறை சூதுக்கும் வாதுக்கும் அடிபணிய நேரிட்டதுண்டு. அப்போதெல்லாம் ராமகிருஷ்ணரிடம்தான் மன்னிப்புக் கோருவார். ராமகிருஷ்ணரும் அவரை ரக்ஷித்து வந்தார்.

ஆத்மிகத்தில் குழந்தையாக இருந்த மதுராநாதரை ராமகிருஷ்ணர் ரக்ஷித்தார் என்றால் லௌகிகத்தில் குழந்தையாக இருந்த ராமகிருஷ்ணரை மதுராநாதர் ரக்ஷித்ததும் உண்டு. இந்த உலகத்துக் கபடம் எதுவும் தெரியாம

நீதிபதி: இருபது தடவையாகச் சூதாடிய குற்றத்துக்காக நீ என்னிடம் தண்டனை பெறுகிறாய். இன்னுமொரு முறை நீ என் எதிரே இப்படித் தண்டனை பெற வரமாட்டாய் என்று நம்பலாம் அல்லவா?



குற்றவாளி: ஏன், எசமான்! நான் அடுத்த தடவை வருவதற்குள் நீங்கள் 'ரிடையர்' ஆகி விடுவீர்களா?

யிருந்த ராமகிருஷ்ணரை யாரும் வஞ்சியாமல் காத்தவர் மதுராநாதரே.

ராமகிருஷ்ணர் பாலகன் போலத் தம் உள்ளத்தில் தோன்றுவதையெல்லாம் மதுராநாதரிடம் சொல்லிவிடுவார்.

''அம்பாள் கூறியது ஏன் மெய்யாகவில்லை? சிஷ்யர்கள் ஏன் என்னைத் தேடி வரவில்லை?'' என்று அவர் ஒருநாள் மதுராநாதரைக் கேட்டார்.

''வருவார்கள், வருவார்கள்! அது போகட்டும், நான் ஒருவன் இருக்கிறேனே பரம சிஷ்யனாக — அந்தமட்டில் அம்பிகை வாக்கு மெய்தானே!'' என்றார் மதுராநாதர்.

மற்ற சிஷ்யர்களும் வந்து தக்ஷிணேசுவரத்தைத் தவ பூமியாக்குவதைக் காண மதுராநாதர் கொடுத்துவைக்கவில்லை. நந்தி போலவும், பிருங்கிபோலவும் ராமகிருஷ்ணருக்குச் சேவை செய்ய அவர் விரும்பினாலும் அந்தப் பாக்கியத்தை நீண்ட நாள் அநுபவிக்கவில்லை.

''ஒரு புனித வாழ்க்கை முடிந்து விட்டது. ஆனால் நியாயமாக இதில் வருத்தப்பட ஒன்றுமில்லை. அன்னையோடு மதுராநாதர் ஒன்றி முக்தி பெற்று விட்டார்; அவ்வளவுதானே?'' என்றார் ஓர் அன்பர்.

சிறிதுபோது மௌனமாக இருந்தார் ராமகிருஷ்ணர். ''மதுராநாதர் முக்தி பெறவில்லை. அவருக்கு உலகத்து ஆசைகள் கொஞ்சம் மீதமுண்டு. எங்கேனும் மன்னராகப் பிறப்பார்'' என்று கூறியவர் பேச்சை வேறு திக்கில் திருப்பி விட்டார்.

ராமகிருஷ்ணரைச் சாரதாமணி கண்டு நாலாண்டுகள் ஆகிவிட்டன. ஆனாலும் தான் அவரை அனவரதமும் கண்டு வருவதாகவேதான் அவளுக்கு உணர்ச்சி.

கமார்புகூரிலிருந்து ஜயராமவடிக்குத் திரும்பியபோது அவளுடைய தோழிகள், ''என்ன, அகத்துக்காரரைப் பார்த்தாயா? அவர் என்னவெல்லாம் சொன்னார், செய்தார்?'' என்று கிசுகிசுத்தனர்.

''அமிருதத்தைச் சொன்னார்; அதையே ஒரு கும்பத்தில் நிரப்பி என் இதயத்தில் வைத்தார்'' என்றாள் சாரதை.

வேடிக்கையும், விளையாட்டும் செய்வதற்காக அவளிடம் வந்த தோழிகள் அவளை உற்று நோக்கினர். வேடிக்கையும் விளையாட்டும் போயின. அக்னிப் பிரவேசம் செய்து வந்த ஜானகிபோல் அவள் பரம சுத்தமாகத் துலங்கினாள். 'இதென்ன மாயமோ?' என்று அவர்கள் அதிசயித்தனர்.

சின்னஞ் சிறு பிராயத்தில், பனியில் ஸ்நானம் செய்த புஷ்பங்களின் நிர்மலத்தைப் பார்த்துப் பார்த்து நானும் இப்படி இருக்க மாட்டேனா என்று சாரு ஆசைப்பட்டதுண்டு. அவள் ஆசை பூரணமாக நிறைவேறியது. தெய்விக மணமொன்றையே அவளது மனம் அறிந்திருந்தது.

மனோ வேகங்கள் பெருக்கெடுக்கும் பருவத்தில் அவள் தூங்கும் ஓடையாக வாழ்ந்தாள். சஞ்சலிக்கிற பிராயத்தில் தீர்க்கமான சிந்தனையில் தோய்ந்தாள். அவளுக்கு மக்களிடம் சுயநலம் கலவாத அன்பும், அநுதாபமும் பெருகின. அமைதி அவளை அணி செய்தது. முன்னொருநாள் தான் அணிந்திருந்த ஆபரணங்களையெல்லாம் கழற்றிய கணவர் தான் இந்தப் புது ஆபரணங்களைத் தனக்கு அணிவித்திருக்கிறார் என்று அவள் புரிந்து கொண்டாள். அவருடைய பாத பதுமங்களையே அவளது சித்தமென்ற தேனீ சுற்றிச் சுற்றி வந்தது. தக்ஷிணேசுவரம் சென்று அந்தப் பாதங்களைப் பணிய வேண்டும், கண்களில் ஒற்றிக்கொள்ள வேண்டும் என்ற ஆசை அவ்வப்போது அவளுக்கு எழும்; அடக்கிக் கொள்வாள்.

இப்படியே நாலாண்டுகள் ஓடி விட்டன. பதினெட்டு வயது நங்கையானாள் சாரதை. ராமகிருஷ்ணர்

அவளை அழைத்துக் கொள்கிற வழியாக இல்லை.

ஊரில் கசமுசவென்று பேசினார்கள். "ராமசந்திர முகோபாத்தியாயரின் மாப்பிள்ளைக்கு மறுபடியும் பைத்தியமாமே. புடவையைக் கட்டிக்கொண்டு 'பரமாத்மனே' என்று புலம்புகிறாராம்; லுங்கி உடுத்திக் கொண்டு 'அல்லா' என்று அலறுகிறாராம். பாவம், பசுங்கிளி சாருவுக்கு இப்படியும் நேர வேண்டுமா?" என்றார்கள்.

சாரதாமணியின் காதுகளிலும் இந்த வார்த்தைகள் விழுந்தன.

'பைத்தியமா, அவருக்கா? பைத்தியத்தைத் தெளிவிப்பவரல்லவா அவர்?' என்று எண்ணினாள் அவள்.

ஊர்ப் பேச்சு வலுத்தது. சாரதைக்கும் சந்தேகம் தோன்றிவிட்டது. எண்ணாதன எண்ணிப் புண்ணானாள் அவள்.

'அந்தப் பைத்தியத்திடம் இவள் போகாதிருப்பதே நல்லது' என்று பெரியவர்கள் சொன்னார்கள்.

சாரதை யோசித்தாள். 'அவருக்குப் பித்துப் பிடித்திருந்தால்தான் நான் நிச்சயமாக அவரிடம் போக வேண்டும். கணவன் சுகவீனமுற்றபோது பணிவிடை செய்வதை விட ஒரு பத்தினிக்கு வேறு என்ன கடமை இருக்கிறது? இனியும் அவருடைய அழைப்புக்குக் காத்திருப்பது முறையல்ல' என்று தீர்மானம் செய்து கொண்டாள்.

ஆனால் தந்தையிடம் அகத்துக்காரரைப் பார்க்க வேண்டும் என்று சொல்ல வெட்கப்பட்டாள் அவள். இந்தக் கதை நடந்து இப்போது சுமார் நூறாண்டுகளாகி விட்டன என்பதை வாசகர்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் பிறந்த தினம் பல்குன மாதப் பூர்ணிமையன்று கொண்டாடப்படும். கல்கத்தாவில் இவ்விழா வெகு சிறப்பாக நடைபெறும். 1872ம் ஆண்டில் சைதன்ய ஜயந்தி நிகழ்ந்தபோது கல்கத்தா வைபவங்களில் கலந்து கொள்வதற்காக ஜயராமவடிப் பெண்கள் சிலர் கிளம்பினர்.

"அவர்களோடு நானும் போகிறேனே அப்பா" என்றாள் சாரதை ராமசந்திரரிடம்.

அவள் உள்ளத்திலிருந்தது அவருக்குத் தெரிந்தது.

ஆம், கிருஷ்ண சைதன்யர் அவளுக்கு முக்கியமல்ல; ராமகிருஷ்ண சைதன்யர்தான் அவள் கருத்தில் நிறைந்திருந்தார். கல்கத்தா வரையில் சென்றால் எப்படியும் தக்ஷிணேசுவரம் சென்று பதி தேவரைத் தரிசிக்கலாம் என்பதே அவள் ஆசை.

மானேஜர் (பியூனிடம்): என் பென்சிலை எங்கேடா வைத்துத் தொலைத்தாய்?



வேலைக்காரன்: உங்கள் காதிலேயே இருக்குதுங்களே!

மானேஜர்: வலது காதிலா? இடது காதிலா? சொல்லித் தொலையேன்!

மாப்பிள்ளையின் பைத்தியத்தைப் பற்றி ராமசந்திர முகோபாத்தியாயர் ஏதுமே வெளிப்படச் சொன்னதில்லை. சித்தக் கோளாறு அடைந்த கணவருடன் தான் வசிக்க வேண்டாம் என்பதுதான் தந்தையின் எண்ணமோ என்றும் சாரதை சந்தேகிக்க இடமிருந்தது. அதெப்படியானாலும், பர்த்தாவின் இருக்கையை அவள் அடைந்து அங்கேயே தங்கிவிட்டால் அவளை யார் மீட்க முடியும்?

பாரத ஸ்திரீகளின் கற்புத் துடிப்பு சாரதாவின் ஜீவநாடியிலும் அதிர்ந்தது. தன்னைக் காத்து வளர்த்த பெற்றோரையும் துறந்து, பிச்சேறிய பதிக்குப் பணிவிடை புரிய அவள் எண்ணம் கொண்டாள்.

தந்தை மகளின் மனசைப் புரிந்து கொள்ளாமல் போவாரா? சாரதாமணியின் தலையை அன்புடன் கோதிக் கொடுத்தார் ராமசந்திரர்.

'என்னிடம் ஏன் உண்மையை ஒளிக்கிறாய்?' என்று அவர் கேட்கவில்லை. அமைதியாக "கல்கத்தாவுக்கு என்ன? நானே உன்னைத் தக்ஷிணேசுவரத்துக்கு அழைத்துச் செல்கிறேன்" என்றார்.

வெட்கத்துடன் தலைகுனிந்துகொண்டாள் சாரதை.

ராமசந்திர முகோபாத்தியாயரின் ஏழ்மை நமக்குத் தெரிந்ததுதான். ரயில் வண்டிகள் இன்று போல் இல்லாத அந்தக் காலத்தில் பல்லக்கில் பயணம் செய்யவும் வசதியற்ற தந்தை

யும் மகனும் மற்ற கிராமத்தினர்களும் கால் நடையாகவே கிளம்பினர் — மூட்டை முடிச்சுக்களைச் சுமந்து கொண்டு.

பசுமை படர்ந்த பலப் பல வயல்கள்; அலர்ந்த கமலங்கள் அடர்ந்த தடாகங்கள்; குளிர் நிழல் கவிழ்க்கும் ஆல மரங்கள், அரச மரங்கள் — இவற்றின் இன்பத்தை யெல்லாம் அநுபவித்துக் கொண்டு தேக திடம் பெற்ற அந்தக் கிராமவாசிகள் 'ஜிங்கு' 'ஜிங்கு' என்று நடந்தனர்.

முதலில் சாரதையும் உற்சாகமாகத் தான் நடந்தாள். ஆனால் ஓரிரு தினங்களிலேயே அவளுடைய மலர்ப் பாதங்கள் நோவு கண்டன. தசை நார்கள் இழுத்தன. மூட்டி எலும்புகள் வலித்தன. ஓரேயடியாகக் களைத்துப் போனாள்.

வெறும் களைப்பு மட்டுமல்ல அது. காய்ச்சலே கண்டுவிட்டது சாரதா மணிக்கு. கணவரைக் காணவேணும் என்ற ஆர்வத்தில் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவள் நடக்க முயன்றாலும் கால்கள் தொய்ந்தன. கீழே சாய்ந்து விட்டாள்.

தாப ஜுரம் கண்ட மகளுடன் சத்திரம் ஒன்றில் தங்கினார் ராம சந்திரர். உயிரே உடலில் தரிக்காது என்று அஞ்சுகிற அளவில் காய்ச்சல் ஏறியது.

'பட்பட்'டென்று அடித்துக்கொள்ளும் தலையுடன் சின்னஞ் சிறு அதிர்வுகளையும் தாங்க முடியாமல் படுத்திருந்தாள் சாரதாமணி. அப்போது 'ஜல் ஜல்' என்ற பாதச் சிலம்பொலி அவள் செவிகளில் புகுந்தது. இந்த ஒலி ஏனோ அவளது நரம்புப் புடைச்சலை அதிகமாக்கவில்லை. மாறாக ஓர் ஆறுதலாகவே இருந்தது. அந்த ஒலிக்கு உரியவள் ஒரு சிறுமி. சியாமள நிறத்துச் சிறுமி. சியாமளமானாலும் சீதளமாக, கோமளமாகக் கண்களில் தண்ணென்று நிறைந்தாள் அவள். பரிமள மணம் அவளிடமிருந்து எழுந்து ஜுர மூச்சு விடும் சாரதையின் நாசியில் தேன் மருந்தாகப் பாய்ந்தது. 'ஜல் ஜல்' ஒலி மிக மிக நெருங்கியது. நீல நிறத்துப் பாலகி சாரதையின் அருகே வந்து அமர்ந்தாள். அவளது பூங்கரத்தால் சாரதையின் தலையிலிருந்து தொடங்கி உடலைத் தடவிக் கொடுத்தாள். பட்ட மாத்திரத்தில் பட்டுப் போன மரத்தையும் துளிர்க்க வைக்கும் பட்டு ஸ்பரிசமல்லவா அது? மிருதுவான, சீதளமான அந்தக் கரம் படிந்த உடனேயே சாரதையின் ஜுரம் இறங்கத் தொடங்கியது. அவளுடைய உடலுக்குள், உள்ளத்துக்குள் பனிப் பொடியைத் தூவுவது போல் இருந்தது.

எல்லையற்ற அன்புடன் அந்தப் பெண்ணை நோக்கி, "நீ யாரம்மா? எங்கிருந்து வந்திருக்கிறாய்?" என்று கேட்டாள் சாரதை.

"நான் யாரென்று சொல்லி உனக்குப் புரிய வைக்க முடியாது. 'நான் யார், நான் யார்?' என்று சிந்தித்துக் கொண்டேயிருந்தால் என்னைத் தெரிந்து கொள்வாய்" என்று இரு பொருளில் கூறிய அந்தப் பெண், "நான் தக்ஷிணேசுவரத்திலிருந்து வந்திருக்கிறேன்" என்றாள் வீணைக் குரலில்.

"தக்ஷிணேசுவரமா? அங்கேதான் அவர் இருக்கிறார். அவரைப் பார்க்கத் தான் புறப்பட்டேன். வழியில் இப்படிக் காய்ச்சலில் விழுந்துவிட்டேன்" என்ற சாரதை "அவரை நான் பார்க்காமலே போய்விடுவேனா?" என்று தன்னையே கேட்டுக் கொள்வது போல் கேட்டாள்.

"அவரைப் பார்க்காமல் நீ போவதாவது? நீ வருவாய் என்று தெரிந்து உனக்காகவேதானே அவரை தக்ஷிணேசுவரத்தில் இருக்க வைத்திருக்கிறேன்?" என்றாள் சிறுமி.

"நான் வருவேன் என்று உனக்கு எப்படித் தெரியும்? நீ சொல்லி எப்படி அவர் கேட்டார்? நீ என்ன அவருக்குத் தங்கையா? அப்படியானால் நான் உன்னைப் பார்த்ததேயில்லையே!" என்று குழம்பினாள் சாரதை.

"ஏன்? நான் அவருக்குத் தங்கையே தான். எப்படி என்ன என்று யோசிக்காமல் நன்றாகத் தூங்கு" என்றாள் அந்தப் பெண் குறும்புக் குரலில்.

நாராயணனுக்கும் பராசக்திக்கும் உள்ள உறவு தெரிந்ததுதானே?

தூங்கியெழுந்த சாரதைக்கு ஜுரம் பூரணமாக விட்டிருந்தது. காய்ச்சல் விட்டபின் உண்டாகிற ஆயாசத் தெளிவுடன் மெல்ல மெல்லப் பயணத்தைத் தொடங்கினாள் சாரதாமணி.

நடந்த அலுப்பில் மீண்டும் இலேசாக ஜுரம் தொடங்கிற்று. எஞ்சிய தூரத்தைப் பல்லக்கில் கடந்தார்கள்.

இதோ தக்ஷிணேசுவரம்!

கொழுகொம்பை அடைந்த கொடியாகக் கொழுநனை அடைந்தாள் கொம்பனையாள்.

"வந்தாயா அம்மா? வந்தேவிட்டாயா தாயே? வா, வா.... ஆனால் ஏன் சாரதே, இப்படித் தடுமாறுகிறாய்? உடம்பு சரியில்லையா?" என்று பரிவு பொங்க வரவேற்றார் ராமகிருஷ்ணர், தாம் பாணிக்கிரகணம் செய்த பாக்கியவதியை. (தொடரும்)

# வாழ்க்கை ஒளிகளின் வனப்பான அழகு



சான்போரைஸ்ட் பாப்ளின்ஸ்:
கோல்ட் ட்ரிங்க், ப்ளூபர்ட், எவர் ப்ரைட்,
குட் ஷைன்.

ஷர்ட்டிங்ஸ்: ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமா

தோதீஸ்: ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல்,
ப்ளாடினம், காம்ராஜ்





ஸூட்டிங்ஸ்
காபர்டீன்

கௌவான கலர் புட்டாக்கள்

ப்ரின்ட்ஸ்:

ப்ரின்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்ளின்ஸ்,
ஸ்கிரீன் ப்ரின்ட் ஸாரீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—ஸ்ட்ரைப்புகளிலும்
புட்டாக்களிலும்

·SANFORIZED·




# அரவிந்த்

மில்ஸ் லிமிடெட், அஹமதாபாத்

# பொன் விலங்கு



## முப்பத்துநான்காவது அத்தியாயம்

பளீரென்று புதிய வர்ணம் மின்னும் 'குமரப்பன் ஆர்ட்ஸ்' என்ற விளம்பரப் பலகையை அருகில் சென்று நிமிர்ந்து பார்த்து விட்டு, ''இதெல்லாம் என்ன குமரப்பன்? இந்த இடத்தை வாடகைக்குப் பேசி அட்வான்ஸ் வேறு கொடுத்திருக்கிறாயாமே? ரொட்டிக் கடைக்காரர் இப்போது தான் சொன்னார்'' என்று சத்தியமூர்த்தி சிரித்துக்கொண்டே நண்பனைக் கேட்டான். சத்தியமூர்த்தி இந்தக் கேள்வியைக் கேட்கும்போது சிரித்துக் கொண்டே கேட்டது குமரப்பனுக்குப் பிடிக்கவில்லை.

''ஏன் சிரிக்கிறாய், சத்தியம்? இந்த மல்லிகைப் பந்தல் நகரிலும் சுற்றுப்புறங்களிலும் எத்தனை கம்பெனிகளும், வியாபார நிறுவனங்களும், தேயிலை, காப்பி எஸ்டேட்டுகளும், பழத் தோட்டங்களும் இருக்கின்றன? ஒரு பெரிய கல்லூரியும் இருக்கிறது. இவ்வளவிற்கும் தேவையான போர்டுகள், டிசைன்கள்,

மணிவண்ணன்

விளம்பர எழுத்துக்கள் — எழுதிக் கொடுப்பதற்கு என்னைப் போல் ஒரு நாணயமான தொழிலாளி இப்படி ஒரு கடை வைத்தால் தோற்றுப் போய் விடுவேன் என்று நினைக்கிறாய்? தொழில் தெரிந்தவன் சும்மா இருக்கக்கூடாது; சும்மா இருக்கவும் முடியாது. என்னை இன்னும் பதினைந்தே நாட்களில் இந்தக் கடையைப் பார். இங்கே மாதம் மூந்நூறு ரூபாயிலிருந்து ஐந்நூறு ரூபாய் வரை வருமானம் கிடைக்கும்படி தொழில் நடக்கவில்லையானால் என்னை ஏன் என்று கேள்'' என்று சத்தியமூர்த்



திக்கு மறுமொழி கூறிக்கொண்டே 'இவ்விடம் சகலவிதமான விளம்பரப் பலகைகளும், டிஸைன்களும் எழுதிக் கொடுக்கப்படும்' என எழுதப்பட்டிருந்த மற்றொரு சிறிய விளம்பரப் பலகையை முன்பு மாட்டப்பட்டிருந்த பெரிய விளம்பரப் பலகைக்குக் கீழே வைத்து ஆணிகளை அடிக்கத் தொடங்கினான் குமரப்பன். 'நம்பிக்கையையும், தைரியத்தையும், முதலாக வைத்து என்னால் எந்தத் தொழிலையும் வெற்றிகரமாகச் செய்ய முடியும்' என்ற கர்வத்தோடு அவன் காரியங்களைச் செய்வதாகத் தோன்றியது. குமரப்பனை அவன் போக்கில் விடுவதே நல்லதென்று சத்தியமூர்த்தி பேசாமலிருந்து விட்டான். காலாண்டுத் தேர்வும், நவராத்திரி விடுமுறையும் அருகில் நெருங்கி விட்டதனால் சத்தியமூர்த்திக்கும் கல்லூரி வேலை அதிகமாக இருந்தது. இரவில் மாணவர்கள் விடுதி அறைகளில் ஒழுங்காகத் தங்கிப் படிக்கிறார்களா என்று கண்காணிக்க வேண்டியிருந்தது. மாணவர்களை விடுமுறையில் வெளியூருக்கு அழைத்துச் சென்று சமூக சேவையில் பழக்கப் படுத்துவதற்காகவும் ஓர் ஏற்பாட்டைச் செய்ய வேண்டியிருந்தது. கல்லூரி மாணவ, மாணவிகளிடையே 'சோஷல் சர்வீஸ் லீக்' என்று ஒரு சங்கம் இருந்தது. அதில் உள்ள மாணவ மாணவிகளை அக்கம் பக்கத்துச் சிற்றூர்களுக்கு அழைத்துச் சென்று சாலைகள் போடுதல், வைத்திய உதவி செய்தல், சமூக நலம், கிராம முன்னேற்றம் போன்றவற்றைப் பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்லுதல் ஆகிய காரியங்களைச் செய்வதற்காக 'ஒர்க் காம்ப்' — பணி முகாம்—ஒன்றை ஏற்பாடு பண்ண வேண்டியிருந்தது. நவராத்திரி விடுமுறை பன்னிரண்டு நாட்களுக்குக் குறையாமல் இருந்ததென்றால், அதன் தொடக்கத்தில் ஒரு வாரம் சமூக சேவைக்காக ஓர் 'ஒர்க் காம்ப்' போக வேண்டியிருந்தது. 'ஒர்க் காம்ப்' போகும்போது கிராமத்துக் குழந்தைகளுக்குக் கரைத்துக் கொடுப்பதற்காக வந்திருந்த 'பால் பவுடர்' டின்கள் சத்தியமூர்த்தியின் உதவி வார்டன் அறையில் அடுக்கி வைக்கப் பட்டிருந்தன. கல்லூரி 'சோஷல் சர்வீஸ் லீக்' தலைவராக வேறொரு முதிய பேராசிரியர் இருந்தார். மாணவர்களின் சமூக சேவை முகாமை விடுமுறையின்போது எந்தக் கிராமத்தில் அமைக்கலாம் எத்தனை நாட்கள் அமைக்கலாம், என்று கலந்து பேசுவதற்காக அன்று மாலை அந்தப் பேராசிரியருடைய வீட்டிற்குப் போயிருந்தான் சத்தியமூர்த்தி. பேராசிரியருக்குச் சொந்த ஊர் பாலக்காட்டுப் பக்கம். அதனால்தானோ என்னவோ அந்த மனிதர் முக்கால்வாசி நேரம் சமையலைப் பற்றியும் சாப்பாட்டில் உள்ள சுகிருசிகளைப் பற்றியுமே சுவைத்துப் பேசிக் கொண்டிருப்பார். சேர்ந்தாற்போல அவர் வாயலுக்காமல் ஒன்றரை மணி நேரமோ இரண்டு மணி நேரமோ பேசுவதற்கு ஒரு விஷயத்தை ஆரம்பித்து வைக்க வேண்டுமானால், அவியலைப் பற்றியோ, வறுவலைப் பற்றியோ ஆரம்பித்து வைக்க வேண்டும். மாணவர்களில் சிலர் அந்தப் பேராசிரியருக்கு 'மலையாளத்து அவியல்' என்றே பெயர் சூட்டியிருந்தார்கள். 'ஓய்! பாலக்காடு வர்மா கபேயில் இரண்டு கரண்டி அவியல் சாப்பிடுவதற்குப் புண்ணியம் செய்திருக்க வேண்டும் ஐயா!' என்று எவரிடமாவது ஒரு நாளைக்கு ஒரு தரமேனும் பாலக்காடு 'வர்மா கபே'யைப் பற்றிச் சொல்லாவிட்டால் அவருக்கு மண்டை வெடித்துப் போகும். இந்த விநோதப் பிரகிருதியைச் சந்திப்பதற்காகச் சத்தியமூர்த்தி அவருடைய வீட்டுக்குப் போயிருந்தபோது ஒரு கிளாஸ் நிறையப் பலாப்பழப் பாயசத்தையும், நேந்திரங்காய் வறுவலையும் கொண்டு வந்து வைத்துச் சாப்பிட்டால்தான் ஆயிற்று என்று பிடிவாதம் செய்தார். அன்று ஏதோ பண்டிகை நாளாம். மாலையில் சத்தியமூர்த்தி வரப்போகிறானென்று அவனுக்காவே ஒரு கிளாஸ் பலாப்பழப் பாயசமும் கொஞ்சம் வறுவலும், அவியலும் எடுத்து வைத்திருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தார் அவர். சத்தியமூர்த்திக்குப் பாயஸம் வைப்பதும், பண்டிகைகள் கொண்டாடுவதும் அதிகமாகப் பிடிக்காத காரியங்கள். ''இந்தத் தேசத்தில் வயிற்றுக்குச் சோறில்லாத கடைசி ஏழை இருக்கிற வரை நம் வீடுகளில் பாயஸமும் பண்டிகைகளும் இல்லை. தெருவோரத்தில், மரத்தடியில் புழுதியில் படுத்துறங்கும் அநாதைகள் இருக்கும்வரை நாம் கட்டிலும் மெத்தையும் விரித்துப் படுப்பது பாவம்'' என்று கல்லூரி நாட்களில் மாணவர்களிடையேயும், மற்ற மேடைகளிலும் அடிக்கடி ஆவேசமாக வற்புறுத்திப் பேசியிருக்கிறான் அவன். வீட்டிலோ தெரிந்தவர்களுடனோ, அமர்ந்து உண்ணும்போது, பாயசம் பரிமாறப்படுகிற வேளையில் இலையை மறித்துக் கை நீட்டி மறுத்துவிடுவது அவன் வழக்கம். பண்டிகை தினங்களில் புதிது

# நற்கால ஸ்திரீகளுக்கு ஏற்ற **மெஷீன்** இதுவே தான்






# உஷா

## ஸிக்-ஸாக் ஆடோமாடிக்

**மிகச்சிறந்த பல துறைகளில் உபயோகமுள்ள தையல் மெஷீன்**

வீட்டுத் தலைவிகளுக்கு அற்புதமாக தையல் வேலைகள் செய்ய சந்தர்ப்பங்கள் இந்தப் புதிய புரட்சிகரமான உஷா ஸிக்-ஸாக் ஆடோமாடிக் மெஷீனிலும் கிடைக்கின்றன. எல்லாப் பெண்மணிகளின் கனவுகளுக்கு ஒரு விடை. அதிக ஆராய்ச்சியின பலனாக சிறந்த டிஸைனும் செயலும் கொண்டது.

இந்த மெஷீன் ஜால வித்தையைப் போல் வேலை செய்கிறது. ஒரு குமிழியை திருப்பிப் பலவிதமான தையல் வேலைகளை செய்யலாம். இரண்டு ஊசிகள், இரண்டு வர்ணங்களில் தையல். ஷெல் எட்ஜிங், பின்னல் வேலைகள், கார்டிங், முதலானவைகளும் இன்னும் பல வீட்டிற்கு உபயோகமுள்ள வேலைகளும் எளிதாகவும் சீக்கிரமாகவும் செய்யலாம். தையல் இப்பொழுது ஒரு பொழுது போக்கு.



பொத்தான் துவாரமும் பொத்தான் தையலும்



வளைந்து வளைந்துள்ள தையல்கள்



விளும்புத் தையல்



பான்ஸி பாடெர்ன்



ஒட்டுத் தையல்



லேஸ் வேலைகள்

எல்லா முக்கிய நகரங்களிலும் பட்டினங்களிலும் கிடைக்கும்.

சுலபமாக தையுங்கள் உஷாவிலும் தையுங்கள்

**உஷா**

அமெரிக்கா, பிரிட்டன் மேற்குஜெர்மனி உள்பட 50க்கு மேலான தேசங்களில் உள்ள பெண்மணிகள் உஷாவிலும் தைக்கின்றனர்.

**ஜே எஞ்சினியரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31**

JESM/G/369



துள்ளி
விளையாடும்
பொழுதோ



ஓய்வு பெறும்
பொழுதோ...
அவர்கள்
எப்பொழுதும்
வளர்ந்து
கொண்டே
இருக்கிறார்
கள்!



# கல்ஸாணு-டி

**வைட்டமின் டீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்**

கர்ப்பிணிகள், குழந்தைகளை அரவணைக்கும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது

குழந்தைப்பருவம் வேகமாக வளரும் பருவம். மற்றெல்லா காலத்தையும் விட—இப்பொழுது வலிமை பொருந்திய பற்களையும், எலும்புகளையும் வளர்க்கவும்,......வாழ்க்கைக்கு வேண்டிய வலிமையையும் சக்தியையும் பெறவும், குழந்தைகளுக்கு கல்ஸாணு-டி தேவைப்படுகிறது. எனவேதான் வளர்ச்சிபெறும் இந்த வருஷங்களில், உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் கல்ஸாணு-டி-யைக் கொடுக்கவேண்டும். தரத்தவமிக்க கல்ஸாணு-டி, ஆபமையான கால்சியமாகும். வியாதிக் கிருமிகளிலும் பாதிக்கப்படாதிருப்பதற்கும்........கால்சியம் சத்து நன்கு உடலில் சேர்வதற்கும்,......மிகுந்த வலிமை பெறுவதற்கும்—இதில் வைட்டமின்கள் சேர்க்கப்பட்டுள்ளன. உங்கள் குழந்தைகளுக்கு கல்ஸாணு-டி-யைக் கொடுத்துப்பாருங்கள். அவர்கள் புதுச் சக்தியுடனும் புதுமலர்ச்சியுடனும் தோற்றமளிப்பார்கள்.

உடுத்திக் கலகலப்பாகச் சுற்றித் திரிவதையும் அவன் விரும்பியதில்லை. 'எல்லாரும் மனக் குறைவோ, பணக் குறைவோ இன்றி ஓரளவு வசதியாக வாழ்ந்த காலத்தில் சமுதாயத்தின் பொதுத் திருவிழாக்களாக இந்தப் பண்டிகைகள் எல்லாம் ஏற்பட்டிருக்கலாம். ஆனல் இன்று உண்ணவும், உடுக்கவுமே திண்டாடுகிற பலரை நம்மைச் சுற்றிலும் வைத்துக் கொண்டு அவர்களுடைய வயிறெரிய ஒருசிலர் மட்டுமே விருந்துண்டு, புதிது உடுத்தித் திரிவது அநாகரிகம் என்பது அவன் கருத்து. இவற்றையெல்லாம் சொல்லி விவாதிப்பதற்கோ, பேசுவதற்கோ அந்தப் பாலக்காட்டுப் பேராசிரியர் பொருத்தமான மனிதர் இல்லை என்று அவன் கருதியதால், அவரிடம் அதிகம் விவாதிக்காமல், 'தனக்கு இனிப்புப் பிடிக்காது' என்று சொல்லிப் பாயசத்தை மறுத்து விட்டான். அப்படி மறுத்த பின்பும் அவர் ஏதாவது சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும் என விடேன் தொடேன் என்று வற்புறுத்தியதால் சத்தியமூர்த்தி தேநீர் மட்டும் பருகினன். இரண்டு மூன்று தினங்களுக்கு முன் ஒரு நாள் தற்செயலாக உலாவப் போய்க் கொண்டிருந்தபோது லேக் அவென்யூ சாலையில் எதிர்ப்பட்ட இந்தப் பேராசிரியரை நண்பன் குமரப்பனுக்கு அறிமுகப்படுத்தி வைத்ததையும் அப்போது குமரப்பன் இவரிடம் பேசிய பேச்சுக்களையும் இன்று நினைத்துச் சிரித்துக் கொண்டான் சத்தியமூர்த்தி. எல்லாரிடமும் சாதாரணமாகப் பேசுகிறாற் போல், ''ஓய்! பாலக்காடு வர்மா கபேயில் இரண்டு கரண்டி அவியல் சாப்பிடுவதற்கு முன் பிறவியில் புண்ணியம் செய்திருக்க வேண்டும் ஐயா!'' என்று குமரப்பனிடமும் பேச்சை ஆரம்பித்தார் இவர். அவ்வளவுதான்! குமரப்பன் இவரைச் சரியாக மடக்க ஆரம்பித்து விட்டான். ''அப்படியானல் முன் பிறவியில் புண்ணியம் செய்தவர்கள் எல்லாம் பாலக்காட்டில் பிறந்து 'வர்மா கபே'யில் அவியல் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்களென்று சொல்லுங்கள்'' என்று அவன் பேசியதில் உள்ள குத்தலை இவர் புரிந்து கொள்ள வெகு நேரமாயிற்று. இன்றும் சத்தியமூர்த்தி வந்தவுடன் குமரப்பனைப் பற்றி ஞாபகமாக விசாரித்திருந்தார் இந்தப் பேராசிரியர். சிறிது நேரம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்தபின் வந்த காரியத்தைப் பற்றி அவரிடம் சொல்லி விவாதிக்கத் தொடங்கினன் சத்தியமூர்த்தி।

''வருகிற நவராத்திரி விடுமுறையில் சமூக சேவை முகாமுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் சார்! இங்கிருந்து இருபத்தைந்தாவது மைலில் 'சந்தனச் சோலை' என்று மலைகளுக்கு நடுவே ஒரு சிறிய கிராமம் இருக்கிறது. அந்தக் கிராமத்தையும் பிரதானசாலையையும் இணைக்கும் கிளைச் சாலையில் அதிக மழையின் காரணமாக மண் சரிந்து மேடிட்டு விழுந்திருக்கிறதாம். முடிந்த தொலைவு வரை நமது மாணவர்களைக் கொண்டு அந்தச் சாலையைச் செப்பனிடுவதற்கு 'ஒர்க் காம்ப்' அமைக்கலாம் என்று கருதுகிறேன்.''

''ஓய்! 'ஒர்க் காம்ப்' – 'ஒர்க் காம்ப்' என்று எதற்காக உயிரை விடுகிறீர்கள்? பேசாமல் 'செமினர் காம்ப்' என்று பையன்களோடு நாலைந்து நாள் உல்லாசப் பயணம் போய் விட்டு வரலாம். 'ஒர்க் காம்பி'னல் நமக்கும் தொல்லை. நம்மோடு வருகிற மாணவ மாணவிகளுக்கும் தொல்லை. எவன் ஐயா,

பொன் விளைந்த

உடம்பினுல் மட்டும் முதுமையடைந்தவர்களையாவது மன்னிக்கலாம்; மனத்தினுலும் முதுமை அடைந்து தளர்ந்து விடுகிறவர்களை மன்னிக்கவே முடியாது.

வேலை மெனக்கெட்டுக் கூடையையும், மண்வெட்டியையும் பிடித்துக் கொண்டு சிரமப்படுவான்? 'செமினர் காம்ப்' என்று போட்டீரானுல் சுகாதாரத்தைப் பற்றியும் சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டியதைப் பற்றியும், கல்வி அறிவின் அவசியத்தைப் பற்றியும் கிராமத்தில் இருக்கிற பத்து பேரைக் கூப்பிட்டு உபதேசம் செய்து விட்டுக் குஷாலாகத் திரும்பி வரலாம். 'ஒர்க் காம்ப்'பில் மாணவ மாணவிகளைக் கட்டி மேய்ப்பதும் பெரிய தொல்லை. சில முரட்டு மாணவர்கள் தம் போக்கில் போவார்கள். சொன்னபடி கேட்க மாட்டார்கள்'' என்று அக்கறையில்லாமல் பேசினர் அந்தப் பேராசிரியர். 'சோஷல் சர்வீஸ்' என்ற பகுதியில் நாட்டுப்புறத்து ஊர்களுக்குச் சென்று அரசியல் இலக்கியம் சமுதாயம் பற்றிய கருத்துக்களை விளக்கிக் கூறுவதாகப் பிரிக்கப்பட்டுள்ள 'செமினர் காம்ப்' என்பது காரிய



''என்னடா இது! 'கட்டுரை' என்று எழுதுவதற்குப் பதில் 'காட்டுரை' என்று எழுதியிருக்கிறாய்.''

''காட்டைப் பற்றியது இந்தக் கட்டுரை. அதனால்தான் சார்!''

ரீதியாக எதையும் சாதிக்காத வீண் முயற்சியாக இருப்பதைப் பல கல்லூரிகளில் பார்த்திருந்த சத்தியமூர்த்தி தன்னுடைய கல்லூரியிலாவது நடப்பு ஆண்டுக்குள் மூன்று நான்கு 'ஒர்க் காம்ப்' அமைய வேண்டும் என்று ஆசைப்பட்டான். வயது முதிர்ந்த அந்தப் பேராசிரியரோ 'சோஷல் செர்வீஸ்' என்ற பெயரில் மாணவர்களை அழைத்துக் கொண்டு அழுக்குப் படாமல் உல்லாசப் பயணம் போய் விட்டு வர ஆசைப்பட்டார். உண்மையில் மாணவர்கள் 'செமினர் காம்ப்'பைவிட 'ஒர்க் காம்ப்'பில் ஆர்வம் காட்டினார்கள். உடம்பினால் மட்டும் முதுமையடைகிறவர்களையாவது மன்னிக்கலாம்; மனத்தினாலும் முதுமை அடைந்து தளர்ந்து விடுகிறவர்களை மன்னிக்கவே முடியாது. இந்தப் பேராசிரியர் மனத்தினாலும் மூத்துத் தளர்ந்து போயிருந்தார். இவரைக் கலந்தாலோசிப்பதில் பயனில்லை என்று மாணவ மாணவிகளிடம் காலாண்டு விடுமுறையில் 'ஒர்க் காம்பு'க்குப் பெயர் கொடுக்கும்படி வேண்டுகோள் விடுத்துச் சுற்றறிக்கை அனுப்பினான் சத்தியமூர்த்தி. இந்த மனிதரிடம் ஏற்பட்டாற் போன்ற இதே சலிப்பான அநுபவம் ஒன்று மறு நாள் மாலை வார்டனிடம் அவனுக்கு ஏற்பட்டது. நீண்ட நாட்களாக ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டிருக்கிற பலர் செய்கிற தொழிலிலும், வாழ்கிற வாழ்க்கையிலும் சலிப்படைந்து திருப்தியற்றிருப்பதை இந்தச் சம்பவங்கள் அவனுக்குப் படிப்படியாக விளக்கின. மறு நாள் மாலை வார்டனுக்கும் சத்தியமூர்த்திக்கும் தர்க்கம் நிகழக் காரணமாயிருந்த அந்த விஷயம் மிகவும் முக்கியமானது.

காலாண்டுத் தேர்வு நெருங்கிக் கொண்டிருந்த அந்தச் சமயத்தில் இரவு எட்டு மணிக்கு மேல் மாணவர்கள் விடுதியை விட்டு வெளியேறுவது கண்டிப்பாகத் தடுக்கப்பட்டிருந்தது.

ஒவ்வொரு மாணவனுடைய அறையிலும் வீண் அரட்டைக் குரலோ பேச்சுக் குரலோ இருக்கலாகாது. விளக்கைப் போட்டுக் கொண்டு ஜன்னல்களைத் திறந்து வைத்துப் படிக்க வேண்டும். சிலர் விளக்கைப் போட்டுக் கொண்டு தூங்கிவிடுவது உண்டாகையினால் தூங்குகிறார்களா விழித்திருந்து படிக்கிறார்களா என்பதைக் கண்காணிப்பதற்காக ஜன்னலையும் திறந்து வைத்திருக்கவேண்டும் என்று விதிக்கப் பட்டிருந்தது. ஹாஸ்டல் விதிகள் அடங்கிய விண்ணப்பத்தில் ஒவ்வொரு மாணவனும் அவனுக்குப் பொறுப்பாகப் பெற்றோரோ கார்டியனோ சேர்ந்தும், கையொப்பமிட்டிருப்பதனால் விதிகளை மீறும் மாணவனைக் கடுமையாக விசாரிக்கவும் தண்டிக்கவும் நியாயமிருந்தது. இப்படியெல்லாம் கண்டிப்பான விதிகளிருந்தும் பரீட்சைக்குச் சில நாட்களே இருக்கும் அந்தச் சமயத்தில்கூட உள்ளே இருந்து படிக்கிறாற் போலத் தோன்றுமாறு அறை விளக்குகளைப் போட்டுவிட்டுப் பின் பக்கத்துப் பாத்ரூம் குழாய் வழியாகத் தொற்றிக்கொண்டு கீழிறங்கிச் சுவரேறிக் குதித்து இரண்டாவது ஆட்டம் திரைப் படத்துக்குப் போய்க் கொண்டிருந்தார்கள் சில மாணவர்கள். இந்தச் செய்தியைச் சத்தியமூர்த்தி அறிந்து கொண்ட பின் இதை எப்பாடு பட்டாவது தடுக்க வேண்டும் என்று மனத்தில் உறுதி செய்து கொண்டான். வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டித் தங்கள் தேவைகளைக் குறைத்துக் கொண்டு 'பையன் படிக்கிறான்' என்ற நம்பிக்கையில் மாதம் தவறாமல் படிப்புக்கும் செலவுக்கும் பணம் அனுப்புகிற அப்பாவிப் பெற்றோர்களின் நம்பிக்கையைக் காப்பாற்றுகிற பொறுப்பு வார்டனுக்கும் உதவி வார்டனாகிய தனக்குமே இருப்பதாக அவன் உணர்ந்தான். எனவே அன்று மாலையில் அவன் வார்டனைச் சந்தித்து, ''சார்! நீங்களும் வாருங்கள். நன்றாக இருட்டிய பின்பு ஆளுக்கொரு டார்ச் லைட்டோடு புறப்பட்டுப் போய் ஹாஸ்டலின் பின்புறத்துச் சுவரருகே பதுங்கியிருந்து தவறு செய்கிறவர்களைக் கையும் களவுமாகப் பிடிக்கலாம். நிலைமையை இப்படியே வளர விடுவது ஹாஸ்டல் கட்டுப்பாட்டையே

"பாழாக்கி விடும்" என்று சொல்லிக் கூப்பிட்டான். வார்டன் அதற்குக் கூறிய பதில் பொறுப்பற்றதாகவும் தட்டிக் கழிப்பதாகவும் இருந்தது.

"இதையெல்லாம் கண்டும் காணாதது மாதிரி இருந்துவிட வேண்டும். ஒரு நிலைமை வரைதான் நாம் கண்காணிக்க முடியும். அதற்காக 'வாட்ச் மேன்' செய்கிற வேலையை யெல்லாம் நாம் செய்ய முடியாது. இராத் தூக்கம் முழித்து டார்ச் லைட்டும் கையுமாக காலேஜ் ஹாஸ்டல் காம்பவுண்டுச் சுவர்களைச் சுற்றி வருவதற்கு நாம் பாராக்காரர்களா அல்லது ரோந்து சுற்றுகிறவர்களா? பூச்சி பொட்டுகள் நடமாடுகிற இடம். நான் அங்கெல்லாம் இரவில் வர முடியாது" என்று நிர்த்தாட்சண்யமாகப் பதில் கூறி விட்டார் வார்டன். முந்திய தினம் கல்லூரி 'சோஷல் சர்வீஸ் லீக்' நியாயமாக இயங்க வேண்டும் என்று அவன் விவாதித்தபோது வேறொரு முதிய பேராசிரியரிடம் எந்த விதமான அலட்சியம் எதிரொலித்ததோ அதே விதமான அலட்சியத்தைத்தான் இப்போது வார்டனிடமும் சத்தியமூர்த்தி கண்டான். கடமையைப் புறக்கணிக்கிறவர்கள் எத்தனை பெரிய பாவத்தைச் செய்கிறார்கள் என்றெண்ணி மனம் நொந்தான். தீர்த்தமாடுதல், தரிசனம் செய்தல், தர்மம் இதையெல்லாம் செய்யாதவர்களைக் காட்டிலும் பெரிய பாவத்தைக் கடமை தவறுகிறவர்கள் சுமக்கிறார்கள் என்று தோன்றியது அவனுக்கு. வார்டன் தன்னோடு ஒத்துழைக்காததைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் அன்றிரவு சாப்பாடு முடிந்ததும் ஹாஸ்டல்வரை போய்ச் சுற்றிப் பார்த்து விட்டு வருவதாகக் குமரப்பனிடமும் சுந்தரேசனிடமும் சொல்லிக் கொண்டு டார்ச் லைட்டோடு தனியே புறப்பட்டுப் போனான் சத்தியமூர்த்தி. இரவு எட்டு மணிக்கு மேல் கல்லூரியின் அந்தப் பெரிய காம்பவுண்டில் தூங்குமூஞ்சி மரங்களைத் தவிரக் கட்டிடங்களும் தூங்கினாற் போல் அமைதியடைந்து விடும். மலையடிவாரத்து அமைதியும், சில்வண்டுகளின் ஓசையுமாகத் தனிமையின் ஆழ்ந்த பயங்கரம் சூழ்ந்திருக்கும் விடுதிச் சுவர் ஓரமாகப் போய் நின்று காத்திருந்தான் சத்தியமூர்த்தி. ஒன்பது மணிக்கு மேல் இருளில் சரியாக அடையாளம் தெரிந்து கொள்ள முடியாத யாரோ இரண்டு மூன்று முரட்டு மாணவர்கள் அறைகளின் பின்புறம், பாத்ரூம் குழாய்களின் வழியே இறங்கிச் சுவரேறிக் குதித்து வெளியே விரைந்தபோது சத்தியமூர்த்தி ஓசைப்படாமல் அவர்களைப் பின்தொடர்ந்தான். கல்லூரி எல்லையைக் கடந்து அவர்கள் வெளியேற இருந்த கடைசி வாசல் அருகே சென்றதும் திடீரென்று பின்புறத்திலிருந்து அவர்களே முற்றிலும் எதிர்பாராத நிலையில் டார்ச் ஒளியை அவர்கள் மீது பாய்ச்சி, "நானும் உங்களோடு துணைக்கு வரட்டுமா தம்பிகளா?" என்று கேட்டு அவர்களைத் திகைத்து நிற்க வைத்துவிட்டான் சத்தியமூர்த்தி. "நாங்கள் உங்களைக் கௌரவமான மாணவர்களாக நடத்த விரும்புகிறோம். ஆனால் நீங்களாகவே இப்படிச் சிறைக் கைதிகளைப் போல் நடந்து கொள்ள முயல்கிறீர்கள்" என்று அவன் மேலும் கூறிவிட்டு இன்னும் அருகில் சென்று அவர்கள் முகங்கள் தெளிவாகத் தெரியும்படி விளக்கை இட்டுப் பார்த்தான். அந்த மாணவர்கள் வெட்கித் தலை குனிந்தபடி, அறைக்குத் திரும்பினர். சத்தியமூர்த்தியும் அவர்களோடு அறைக்குச் சென்று அவர்களே தங்கள் நிலையை உணரும்படி மனம் விட்டுப் பேசினான். அந்த மாணவர்கள் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு திருந்தினார்கள். அன்று சத்தியமூர்த்தி தன் அறைக்குத் திரும்பும்போது இரவு பதினொன்றரை மணிக்கு மேல் ஆகிவிட்டது. அதற்கு அடுத்த நாளிலிருந்து ஹாஸ்டலில் அந்த மாதிரித் திருட்டுத்தனம் நிகழ்வது நின்றது. கடமையையும் உண்மையையும் போற்ற வேண்டுமென்று அவன் இவற்றைத் தானாகவே விரும்பிச் செய்தானே ஒழிய இவற்றுக்காக அவனை யாரும் பாராட்டக் காத்திருக்கவில்லை. (தொடரும்)



"சாதாரணக் காற்றடிச்சாலே பறந்தோடும் இந்தக் கார். இதைப் போய் அவ்வளவு விலைசொல்றியே?"
"காற்றடிச்சாலே போதுமே. பெட்ரோல் செலவில்லையே?"



# சோமநாத புரத்துச் சோதிர் லிங்கர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

சோமநாதபுரத்தில் பல தடவை மூர்த்தியோடு கோயிலையும் சேர்த்து இடித்துத் தரைமட்டமாக்கி யிருக்கின்றனர். அங்குள்ள சோதிர்லிங்கராம் சோமநாதரோ இத்தனை இடிபாடுகளுக்குள்ளாகியும் திரும்பவும் திரும்பவும் உருப்பெற்றிருக்கிறார். கடைசியில் நம் நாட்டின் இரும்பு மனிதர் என்று புகழ் பெற்ற சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்களின் முயற்சியால் இந்தியா சுதந்திரம் அடைந்த பின் திரும்பவும் அக் கோயில் கட்டப்பட்டு இன்று வானளாவ உயர்ந்திருக்கிறது.

சோமநாதபுரம் செல்ல முதலில் பம்பாயிலிருந்து அகமதாபாத் செல்ல வேண்டும். அங்கிருந்து ராஜ்கோட் சென்று ரயில் மாற்றி வீராவல் என்ற நகரம் செல்ல வேண்டும். அங்கிருந்து கிழக்கே மூன்று மைல் தூரத்தில் சோமநாதபுரம் இருக்கிறது. ஆகாய விமானத்தில் சென்றால் கேசாட் என்ற விமான நிலயத்தில் இறங்கி அங்கிருந்து முப்பத்து மூன்று மைல் காரிலே செல்ல வேண்டும். பம்பாய்க்கும் வீராவலுக்கும் வாரம் ஒரு முறை ஸ்டீமரும் போகும். வட இந்தியாவைக் காரிலேயே சுற்றுபவர்களாக இருந்தால் நேரே ராஜ்காட் சென்று அங்கிருந்து ஜுனாகாத் வழியாக வீராவல் சென்று சேரலாம். வழியில் ஜுனாகாத்திலும் தங்கி அங்கு பார்க்க வேண்டியவைகளையும் பார்த்துக் கொள்ளலாம். ஜுனாகாத் என்றால் பழையகோட்டை என்று அர்த்தம். கோவை ஜில்லாவில் உள்ள பட்டக்காரரது பழைய கோட்டையில் காளைகள் அதிகம் என்றால் ஜுனாகாத்தை அடுத்த கிர்னுமலைக் காடுகளில் சிங்கங்கள் அதிகம். அந்த மிருக இந்திரனைக் காண வேண்டுமானாலும் ஜுனாகாத்திலேயே ஒன்றிரண்டு நாட்கள் தங்க வேண்டும். காட்டுக்குள் தக்க துணையுடன் செல்ல வேண்டும். அக் காட்டில் சிங்கங்கள் ஆட்டுக் குட்டிகள்போல அலைகின்றனவாம். இதற்கெல்லாம் எல்லாருக்கும் அவகாசம் இராது. கலை ஆர்வத்தோடு கலைக் கோயிலைக் காணச் செல்பவர்கள் ஜுனாகாத் பக்கத்தில் உள்ள கிர்னார் மலை ஏறி அங்குள்ள சமணக் கோயில்களைக் காணவேண்டும். ஐந்நூறு அடி உயரமே உள்ள மலையானாலும் ஏறுவது சிரமமாக இருக்கும். அங்குள்ள கோயில்களில் நேமிநாதர் கோயில் தான் பெரியது. அது பன்னிரண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. அந்தக் கோயிலின் முன்புறமுள்ள மைதானம் 200 அடி நீளமும் 150 அடி அகலமும் உள்ளது. கோயிலைச் சுற்றிப் பல சுற்றுக் கோயில்கள். கிட்டத்தட்ட எழுபது இருக்கும். நேமிநாதர் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரர். அவர் வடிவைக் கருங்கல்லில் அமைத்திருக்கிறார்கள்; ஏராளமான நகைகள் அணிவித்து வைத்திருக்கிறார்கள். இன்னும் அங்குள்ள கோயில்கள் பதினாறு. தேஜ்பால், வாஸ்துபால் என்ற அமைச்சர்கள் கட்டிய கோயில்கள் அவை. அவை ஒன்றில் பத்தொன்பதாவது தீர்த்தங்கரர் மல்லிநாதர் இருக்கிறார். இன்னும் அம்பாமாதாஜிக்கு ஒரு கோயில். புது மணத் தம்பதிகள் இக்கோயிலில் வந்து வணங்கி ஆசி பெறுகின்றனர். பக்கத்திலுள்ள தாதர் என்ற நகரத்தில் ஜுமாமஸ்ஜிதா என்னும் முஸ்லிம் பக்கிரிக்கு ஒரு சமாதி இருக்கிறது. அங்கு வந்து பிரார்த்திப்பவர்களின் குஷ்டநோய் நீங்குகிறது என்கிறார்கள். மலையடிவாரத்திலே தாமோதர் குண்டம் என்று ஒரு குளமும் கோயிலும் இருக்கின்றன. அதற்குப் பக்கத்திலேயே கல்லிலே அசோகர் பொறித்து வைத்த கட்டளைகள் இருக்கின்றன. எல்லாம் கவனமாகப் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கின்றன. இவைகளைப் பார்த்து அங்குள்ள வசதியான பிரயாணிகள் விடுதியிலும் தங்கி விட்டு வீராவல் சென்று சேரலாம். வீராவலுக்குக் கிழக்கே மூன்று மைல் தூரத்திலேதான் சோமநாதபுரம் இருக்கிறது. பஸ், டோங்கா வசதிகள் உண்டு. அது மிகச் சிறிய நகரம்; தெருக்கள் அகலமாக இராது. அவற்றைக் கடந்து சோமநாதபுரத்துச் சோதிர் லிங்கர் கோயிலுக்கு வந்து சேர வேணும். சோமநாதபுரத்தைப் பிரபாக பட்டணம் என்றும் தேவபட்டணம் என்றும் இன்று அழைக்கிறார்கள்.

கோயில் பெரிய கோயில்தான். அதைச் சுற்றிப் பெரிய வெளி ஒன்று இருக்கிறது. அதைச் சுற்றியே காம்பவுண்டு அமைத்திருக்கின்றனர். அக்காம்பவுண்டுச் சுவர், நம் தமிழ் நாட்டுக் கோயில் மதில்களைப் போல் கனமாகவோ உயரமாகவோ இராது. இந்த வெளிப் பிராகாரத்துக்குள்ளேயே காரைக் கொண்டு போகலாம். இக்கோயில் மிகமிகப் பழமையான கோயில் என்கின்றனர். உலகம் தோன்றியபொழுதே இக்கோயிலும் தோன்றியதாம். வேத காலத்திலும் அதன் பின் மகாபாரதத்திலும் இக்கோயில் பேசப்பட்டிருக்கிறது. பாண்டவர்கள் இங்கு வந்து பிதிர்க் கடன்கள் செய்ததாகக் கர்ண பரம்பரை கூறுகிறது. அதைப் போலவே பலராமனும், கிருஷ்ணனும் இங்கு வந்து பிதுர்க் கடன்கள் செய்திருக்கின்றனர். இக்கோயிலிலுள்ள மூர்த்தியைப் பற்றிய புராண வரலாறு சுவையானது. தக்ஷப் பிரஜாபதி என்பவனுக்கு 27 பெண்கள். அத்தனை பெண்களையும் அழகில் சிறந்தவனான சந்திரனுக்கே மணம் முடித்து வைக்கிறான். ஆனால் சந்திரனோ அந்த இருபத்தேழு பெண்களில் அழகு மிகுந்த

வனான ரோகிணியிடமே அதிக அன்பைக் காட்டியிருக்கிறான். மற்ற மனைவியரை உதாசீனம் செய்திருக்கிறான். பெண்கள் சென்று இதனைத் தந்தையிடம் முறையிட்டிருக்கின்றனர். அவர் சொல்லியும் கேளாது சந்திரன் ரோகிணியிடமே மையல் கொண்டு வாழ்ந்திருக்கிறான். இதனால் கோபம் கொண்ட தக்ஷப் பிரஜாபதி, சந்திரன் தன் கலை இழந்து நலியும்படி சபித்திருக்கிறான். அதன்படியே சந்திரனும் கலை இழந்து மெலிந்து இருக்கிறான். கடைசியில் சந்திரன் சிவபெருமானை அணுகிப் பிரார்த்திக்க, அவர் கலை வளர அருள் புரிந்திருக்கிறார். இந்த நன்றி காரணமாகவே சோமன் என்னும் சந்திரன் இந்த இடத்தில் ஒரு சோதிர்லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வணங்கி யிருக்கிறான். சோமனால் பிரதிஷ்டை செய்யப்பட்டவர் ஆனதினாலே சோமநாதர் என்ற பெயராலேயே அவர் அங்கு கோயில் கொண்டிருக்கிறார்.

ஆதியில் இக்கோயில் தங்கத்தாலேயே கட்டப்பட்டிருந்திருக்கிறது. பின்னரே, வெள்ளியாலும், அதன் பின்னர் மரத்தாலும் கல்லாலும் கட்டப்பட்டது என்பது கதை. இக்கோயில் ஐந்து தடவை அழிந்து அழிந்து திரும்பத் திரும்பக் கட்டப்பட்டது என்பது வரலாறு. கிறிஸ்து சகாப்தம் ஆரம்பமாகு முன்பே இக்கோயில் இருந்திருக்கிறது. இரண்டாவது தடவையாக கி. பி. 649ல் கட்டப்பட்டிருக்கிறது. பின்னர் கி. பி. 792ல் அரேபியர்கள் இந்தியா மீது படையெடுத்து வந்து இக்கோயிலை அழித்திருக்கின்றனர். மூன்றாவது தடவையாக கி. பி. 800லும், நான்காவது தடவையாக கி. பி. 1075லும் கட்டப் பெற்றிருக்கிறது. ஐந்தாவது முறையாகத்தான் கி. பி. 1114ல் குமாரபாலா என்பவர் இக்கோயிலை விஸ்தரித்துக் கட்டியிருக்கிறார். இந்தப் பிரம்மாண்டமான கோயிலைத்தான் கஜினி மகம்மது இடித்துத் தரை மட்டமாக்கி இங்குள்ள பொன்னையும் நவரத்தினங்களையும் கொள்ளையடித்துச் சென்றிருக்கிறான். அதன் பின் பல நூற்றாண்டுகளாகத் திரும்பவும் இக்கோயில் கட்டப்படவில்லை. இந்தியா சுதந்திரம் பெற்றபின்னரே சர்தார் பட்டேல் பெருமுயற்சி எடுத்து, முழுக்க முழுக்கப் புதுக் கோயிலாகக் கட்டி முடித்திருக்கிறார். இப்போது நாம் காணுகின்ற கோயில் இந்தப் புதுக் கோயிலே. நல்லதொரு மாடக் கோயில் போல் ஒரு பெரிய பீடத்திலேயே கட்டப்பட்டிருக்கிறது. 'ஸாண்ட் ஸ்டோன்' என்னும் ஒரு வித சிவப்பு நிறக் கல்லால் கோயில் முழுவதும் கட்டப்பட்டிருக்கிறது. இடை இடையே சலவைக் கல்லையும் பொருத்தி நிறையச் சிற்ப வேலைகளையும் செய்திருக்கிறார்கள். கிழக்கே பார்த்த வாயில். இரண்டு மாடிக் கட்டடம் போல அமைத்துப் பெரிய பெரிய தூண்களை நிறுத்தி அழகு செய்திருக்கிறார்கள். தோரண வாயில்களில் சிற்ப வேலைகள் சிறப்பாய் இருக்கின்றன. படிகள் ஏறிக் கோயில் உள்ளே மகாமண்டபத்துக்குச் சென்றால் அங்கு சலவைக் கல் நந்தி ஒன்று மூலத்தானத்தை நோக்கிப் படுத்திருக்கும். அதற்கு இரு பக்கத்துச் சுவர்களிலும் அனுமாரும் மகாதேவர் பார்வதி வடிவங்களும் சலவைக்கல்லில் அமைத்து வைத்திருக்கின்றனர். இவர்களைத் தரிசித்த பின்னரே நாம் மண்டபத்தின் விதானத்துக்குள் வருகிறோம். விதானத்தைப் பதினாறு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அதன் மேலேதான் 'டோம்' இருக்கிறது. அங்கு அந்த 'டோமை'த் தாங்கி நிற்பவர்களே வித்யாதர மகளிர். எல்லாரும் நல்ல அழகு வாய்ந்தவர்கள். அதற்குப் பின்னால்தான் கருவறை. கருவறையிலே மூன்றடி உயரத்திலே சோமநாதர் லிங்கத் திரு உருவினராய் இருக்கிறார். ஆதியிலே சோமனால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட சோதிர்லிங்கம், அத்தளத்துக்குக் கீழே நூறு அடி ஆழத்திலே இருக்கிறார் என்கிறார்கள். அப்படிப் புதைந்து கிடப்பவரைக் காண வகையில்லை. இனி நாம் இன்று கருவறையிலே இருக்கும் சோமநாதரை வணங்கி விட்டு வெளியே வரலாம். சோமநாதருக்குத் துணைவியர் ஒருவரும் இல்லை. திரு அஞ்சைக் களத்து இறைவனை அம்மையில்லா அப்பன் என்பார்கள். அவரைப் போல் சோமநாதபுரத்துச் சோமநாதரும் அம்மையில்லா அப்பனாகவே வாழ்கிறார்.

இப்புதிய கோயிலைக் கட்ட இது வரை இருபத்தெட்டு லக்ஷம் ரூபாய் செலவாகியிருக்கிறதாம். 155 அடி உயரத்தில் கம்பீரமான சிகரம் ஒன்றும் அமைத்திருக்கிறார்கள். இன்னும் கோயிலை விரிவாக்க இருபது லக்ஷத்துக்கு ஒரு திட்டம் உருவாக்கி யிருக்கிறார்கள். இக்கோயில் கட்டக் கற்கள் இருபத்தாறு மைலுக்கு அப்பாலுள்ள இடத்தில் இருந்து வந்திருக்கிறது. இக்கோயில் இருப்பது கடற்கரையிலே. கடல் அலைகள் கோயிலை அரித்து விடாதபடி பெரிய கற்சுவர் ஒன்றையும் கட்டி வைத்திருக்கிறார். அந்தச் சுவருக்கும் கோயிலுக்கும் இடையே ஒரு கல் ஸ்தம்பம் இருக்கிறது. அது பழைய கோயிலின் சின்னமாக இருக்கிறது. பழைய கோயிலில் இடிந்து கிடந்த பகுதியில் உள்ள சிற்ப வடிவங்களைச் சேகரித்துப் பக்கத்திலுள்ள தெருவில் ஒரு காட்சிச்சாலை அமைத்து வைத்திருக்கிறார்கள்.

சோமநாதபுரத்துக்குப் பக்கத்திலேயே பார்க்க வேண்டிய இடங்கள் இரண்டு உண்டு. ஒன்று அகல்யாபாய் கோயில். மற்றொன்று தேகோத் சர்கம் என்ற இடம். அகல்யாபாய் என்ற ராணி கட்டிய கோயிலே அகல்யாபாய் கோயில் என்று வழங்குகிறது. அங்கு கோயில் கொண்டிருப்பவர் காசீசர். அங்கே விநாயகர் திருமால் முதலியவர்களுக்கும் சந்நிதி இருக்கிறது. தேகோத்சர்கம் என்ற இடத்தில் தான் துவாரகாபதியான கண்ணன் தம் உடலை நீத்துச் சுவர்க்கம் சென்றிருக்கிறார். அதனாலேயே சுவர்க்காரோகணம் என்கின்றனர். பக்கத்தில் ஓடும் நதியை ஹிரண்யா நதி என்கின்றனர். அந்நதிக் கரையிலேதான் ஒரு அரசமரம் இருக்கிறது. அம்மரத்தின் அடியில்தான் பகவான் கிருஷ்ணன், வேடன் ஒருவனது அம்பால் அடிபட்டு, அதன்பின் திருமேனியை இவ்வுலகில் விட்டு விட்டு வானுலகம் சென்றிருக்கிறான். அங்கு பல நாகங்களுடன் கூடிய பாம்பின் சிலை ஒன்றும் இருக்கிறது. அங்குதான் பலராமர் தம் சரீரத்தை விடுத்தார் என்பது வரலாறு.



## பிரபல திருமணம்

கோயமுத்தூர் மட்டிலுமின்றி தென்னகம் முழுவதிலும் பிரபலமுற்றுள்ள பீளமேடு பி. எஸ். ஜி. குடும்பத்தைச் சேர்ந்தவரும், பிரபல தொழிலதிபரும் பயனீர் மில்ஸ் மானேஜிங் ஏஜண்டுமான ஸ்ரீ ஜி.-ஆர். கோவிந்தராஜுலுவின் புதல்வன் செல்வன் **தேவராஜுலுவுக்கும்** அதே நகரைச் சேர்ந்தவரும். பிரக்யாதி பெற்ற தொழில் பிரமுகரும் லக்ஷ்மி மில்ஸ் மானேஜிங் ஏஜெண்டுமான திரு ஜி. கே. தேவராஜுலு நாயுடுவின் புதல்வி செல்வி **கருணுவுக்கும்** சமீபத்தில் திருமணம் மிகச் சிறப்பாக கோவையில் நடைபெற்றது. திருமண விழாவுக்கு இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்து பல பிரமுகர்கள் திரளாக வந்திருந்து சிறப்பித்தனர்.

வாழ்க, மணமக்கள்!



ஸ்ரீ வி. கெங்காதரம் அவர்கள் புதல்வன் செல்வன் **வைத்தீஸ்வரனுக்கும்** (நீர்ப்பாசன இலாக்கா, நற்மலானே) எஸ். வயிரமுத்து (சித்தப்பா) அவர்களின் புதல்வி **சாந்தமணிக்கும்** வல்வெட்டித்துறையில் திருமணம் நடந்தேறியது.

வாழ்க, மணமக்கள்!


Shakti Silks

## அட்டைப் படக் கதை

உஷா அந்தக் கடிதத்தை எழுதி முடிப்பதற்குள் மிகவும் சிரமப்பட்டு விட்டாள். கண்ணீர் ஆறாகப் பெருகி அவள் பார்வையை மறைத்தது. கை நடுங்கியது. அந்தக் கடிதத்தை அவள் எப்படியும் எழுதித்தானாக வேண்டும். நெஞ்சை அழுத்தும் மனச்சாட்சியின் பாரத்தை அவளால் தாங்க முடியவில்லை. தன் தாயாரிடம் அந்த உண்மையைத் தெரிந்து கொண்டதிலிருந்து அவள் மனம் பட்ட பாட்டைச் சொல்லி முடியாது.

தான் எழுதும் இந்தக் கடிதம் தன் வாழ்வையே அழித்து விடும் என்பது அவளுக்குத் தெரியும். ஆனால் அந்த மனச் சுமையை அவள் தன் மனத்துக்குள்ளேயே வைத்துக் கொண்டிருந்தால் அதுவும் அவளை அழித்து விடுமே! தன் காதலனிடம் தன்னைப் பற்றிய உண்மையைக் கூறாமல் மறைத்து வைப்பதை அவள் பெரிய துரோகமாகக் கருதினாள். தான் சொல்லாமல் மூடி மறைத்து வைக்கும் உண்மை ஒரு நாள் அவருக்குத் தெரிந்து விட்டால்....! அப்பப்பா! இதை நினைக்கவே அவளுக்குப் பயமாக இருந்தது.

கடிதத்தை எழுதி முடித்ததும் பல முறை படித்துப் பார்த்தாள். சொல்ல வேண்டியதைச் சரியாகச் சொல்லி விட்டதாகவே தெரிந்தது. கடிதத்தில் பல இடங்களில் கண்ணீர் சிந்தி எழுத்துக்கள் கலைந்திருந்தன. அந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்த பிறகு தான் அவள் மனச் சுமை குறைந்தது. நேர்மையிலிருந்து பிறழ்ந்து விடாமல் நம் கடமையைச் செய்து முடித்துவிட்டோம் என்ற உள்ள நிறைவு அவளுக்கு ஓரளவு ஆறுதலை அளித்தது.

பாஸ்கரனோடு தான் பழகிய இன்ப நாட்களையெல்லாம் எண்ணி எண்ணி வேதனைப் பட்டாள் உஷா. கண்ணீர் முத்துக்கள் அவளது அழகிய கன்னங்களை நனைத்துக் கீழே விழுந்து தெறித்தன.

உஷாவுக்கு இருபத்திரண்டு வயது இருக்கும். பருவ காலத்து எழில் அவளது தாழம் பூ மேனிக்குத் தனியான வனப்பை வரையாமல் வழங்கி இருந்தது. உஷக் காலத்துப் பனி நீரில் குளித்துச் சிலிர்த்து நிற்கும் ரோஜா மலரின் மென்மை அவள் மேனியெங்கும் பரவிப் படர்ந்திருந்தது. கருகரு வென்று வளர்ந்திருந்த கூந்தல் அவளது மதி முகத்தை எடுத்துக் காட்டும் கார் மேகம் போல் காட்சி யளித்தது. அழகின் எல்லையில் நின்ற அவள் அறிவிலும் சிறந்து விளங்கினாள். கல்லூரி வகுப்புக்களில் அவள்தான் எதிலும் முதன்மையாக நின்றாள். அந்தத் திறமையின் காரணமாகத் தான் சம்பளம் இல்லாமல் கல்லூரிப் படிப்பை முடிக்க அவளால் முடிந்தது. தந்தையை இழந்து, தாயின் அயராத உழைப்பைக் கொண்டு முன்னேறிய அவள்



இப்பொழுது ஒரு கம்பெனியில் தட்டெழுத்துக் குமாஸ்தாவாகப் பணியாற்றி வந்தாள்.

அங்குதான் அவள் முதன் முதலில் பாஸ்கரனைச் சந்தித்தாள். அவனிடமே தான் வேலை பார்க்க வேண்டியிருக்கும் என்று அவள் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. வேலைக்கு மனுப் போட்டு 'இன்டர்வ்யூ'வுக்கு உத்தரவு கிடைத்ததும் உஷாவுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. எதிர்பாராத விதமாக ஓர் இளைஞனைச் சந்தித்து அவன் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் திருப்திகரமாகப் பதில் அளித்து அவனிடமே வேலை பார்க்கும் வாய்ப்புக் கிடைத்ததில் உஷாவுக்கு மகிழ்ச்சியைவிட அதிர்ச்சிதான் அதிகமாக இருந்தது. ஒரு கணம், 'இந்த வேலையை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டுமா?' என்று அவள் மனம் தனக்குத் தானே ஒரு கேள்வியை எழுப்பிக்கொண்டு தயங்கியது. ஆனால் விவேகம் அதற்குத் தக்க விடையளித்து அவளைச் சமாதானப்படுத்தியது. 'வாலிபன் என்றாலே பொல்லாதவனாயிருப்பான். வயது வந்த பெண் அவனோடு பழகுவது தவறு என்ற முடிவுக்கு வந்துவிடுவது சரியல்ல. உன் வேலையைக் கவனித்துக் கொண்டு நீ ஒழுங்காயிருந்தால் உன்னை யார் என்ன செய்து விட முடியும்?' என்ற எண்ணம் அவளுக்கு மன உறுதியை அளித்தது. ஆனாலும் அவள் எச்சரிக்கையாகவே இருந்து வந்தாள்.

பாஸ்கரன் எம். ஏ. பார்ப்பதற்கு மாத்திரம் கவர்ச்சியாக இல்லை; பழகுவதற்கும் எளியவனாக இருந்தான். கம்பீரமான தோற்றம் உடையவனாகிய அவனிடம் கம்பீரமான உயர் குணங்களும் குடிகொண்டிருந்தன. ஒரு நாள்கூட அவன் உஷாவிடம் வரம்பு மீறி ஒரு வார்த்தை பேசியதே யில்லை. காலையில் காரியாலயத்துக்கு வந்ததும் ஆபீஸ் பையனைக் கூப்பிட்டு உஷாவை அழைத்து வரச் சொல்லுவான். கடிதங்களுக்கு எழுத வேண்டிய பதில்களைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் கூறுவான். உஷா சுருக்கெழுத்தில் குறிப்பெடுத்துக் கொண்டு தன் இடத்துக்கு வந்து அமர்ந்து எல்லாக் கடிதங்களையும் டைப் செய்து கையெழுத்துக்காக, மானேஜர் பாஸ்கரனின் அறைக்கு எடுத்துச் செல்வாள். பாஸ்கரன் மிகவும் கவனமாக அவைகளைப் படித்துக் கையெழுத்திட்டு அவளிடம் கொடுத்துத் தபாலில் சேர்க்கச் சொல்லுவான். அநாவசியமாக ஒரு நிமிஷம்கூட உஷாவைத் தாமதிக்க வைக்க மாட்டான்.

உஷாவுக்கு அவனுடைய பெருந்தன்மை மிகவும் பிடித்திருந்தது.

கொஞ்சம் கொஞ்சமாக அவள் தன் நிலையை இழந்து கொண்டிருந்தாள். பாஸ்கரனின் புன்னகை தவழும் முகம் அவள் நெஞ்சில் குடிகொண்டது. பாஸ்கரனின் விருப்பத்தை அநுசரித்தே தன் நடை, உடை, பாவனைகளை மாற்றிக் கொள்ள முயன்றாள் உஷா. பழகப் பழக உஷாவுக்குப் பாஸ்கரனின் உள்ளம் விளங்க ஆரம்பித்தது. அதிக ஆடம்பரத்தை அவன் விரும்புவதில்லை என்பதை அவள் நன்றாய்ப் புரிந்து கொண்டு விட்டாள். முன்பெல்லாம் தலையில் பூ பாரத்துடன் சென்றவள் இப்பொழுதெல்லாம் கொஞ்சமாகப் பூச்சூடிக் கொண்டாள். கவனத்தை ஈர்க்கும் நவநாகரிகக் கவர்ச்சிகளை அவள் கட்டோடு ஒழித்து விட்டாள்.

அவன் யார், பாஸ்கரன் யார்? அவனுக்காக அவள் ஏன் உருக வேண்டும்? அவன் விருப்பு வெறுப்புக்களை என்னத்துக்காக அவள் அநுசரித்து நடக்க வேண்டும்? அது அவளுக்கே விளங்கவில்லை.

ஒரு நாள் மாலை நாலு மணிக்குப் பிடித்துக் கொண்ட மழை ஏழு மணி அடித்தும் நிற்கவில்லை. மழையில் எப்படி வீட்டுக்குப் போவது என்று உஷாவுக்கு ஒரு புறம் கவலை; அம்மா கவலைப்படுவாளே என்ற கவலை இன்னொரு புறம். ஆனால் இவை இரண்டையும் தவிர அவள் மனத்தை அலைக்கழித்தது இன்னொரு பெரிய பயம். அதுதான் மழையின் காரணமாக, பாஸ்கரனின் காரில் அவனுடன் போக நேர்ந்து விடுமோ என்னும் பயம்.

சற்று நேரத்துக்கெல்லாம் பாஸ்கரனுடைய கார் டிரைவர் உஷாவிடம் வந்தான்.

''அம்மா, காரில் ஏறிக் குந்துங்க. மானேஜர் ஐயா சொன்னாரு....'' என்றான்.

உஷாவுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. ''....மழை நின்றதும் நான் போய்க் கொள்கிறேன். மானேஜர் ஐயாவுக்கு வீண் சிரமம் என்னத்துக்கு?....?'' என்றாள். குரலில் கடுமை தொனித்தது.

அப்பொழுது பாஸ்கரன் தன் அறையை விட்டு வெளியே வந்து, ''உஷா, நீங்கள் என் காரில் ஏறிக் கொண்டு உங்கள் வீட்டுக்குப் போய் இறங்கிக் கொள்ளுங்கள். மழை இப்போதைக்கு நிற்காது. நான் அப்புறம் வீட்டுக்குப் போகிறேன். வீட்டிலே அம்மா தனியாக இருப்பார்களல்லவா?'' என்று மிகவும் அமைதியாகச் சொன்னான்.

அதற்கு மேல் உஷா ஒன்றும் பேச வில்லை. ''ரொம்ப நன்றி'' என்று மரியாதையாகச் சொல்லி விட்டு வாசலுக்கு வந்து பாஸ்கரனுடைய காரில் அமர்ந்தாள். கார் கடும் மழையைத் துளைத்துக் கொண்டு ரஸ்தாவில் வழுக்கிக் கொண்டு சென்றது. உஷாவின் மனம் இப்பொழுது விசித்திரமான வேதனையில் தவித்தது.

அன்றைய தினத்திலிருந்து பாஸ்கரனிடம் உஷாவுக்கு மதிப்பும் மரியாதையும் அதிகமாகி விட்டன. அன்று தான் ஆத்திரத்தில் கடுமையாகப் பேசி விட்டதற்கு மனம் வருந்தினாள். அவனிடம் முன்பு இருந்த அச்சத்துக்குப் பதிலாக அன்பு பிறக்க ஆரம்பித்தது. பாஸ்கரன் ஆபீஸ் வேலையைத் தவிர வேறு ஏதாவது தன்னிடம் பேச மாட்டானா என்று கூட ஏங்க ஆரம்பித்தாள்.

ஒரு நாள் வழக்கம் போல் பாஸ்கரன் கடிதங்களுக்குப் பதில் கூறிக் கொண்டிருந்தான். உஷா மின்னல் வேகத்தில் சுருக்கெழுத்தில் எழுதிக் கொண்டிருந்தாள். பாஸ்கரன் சிறிது நேரம் அவளது தந்த நிற விரல்களின் சுறுசுறுப்பான இயக்கத்திலேயே லயித்து மௌனமாக இருந்தான். உஷாவின் முகத்தில் நாணம் படர்ந்தது. மெதுவாக, ''ஸார்...!'' என்று அழைத்து, பாஸ்கரனை இவ்வுலக நினைவுக்குக் கொண்டு வந்தாள்.

"...மன்னிக்க வேண்டும். ஏதோ நினைவில்..." என்று கூறி விட்டு, நாணத்துடன் பாஸ்கரன் மேலே தொடர்ந்தான்.

அன்றைய தினத்திலிருந்து உஷாவின்மனத்தில் இனம் தெரியாத இன்ப உணர்ச்சி பெருகிக் கொண்டே யிருந்தது. காரியாலயத்துக்குப் போவதென்றால் ஒரு தனி உற்சாகம். ஞாயிற்றுக் கிழமை ஏன் வருகிறது என்று நினைக்க ஆரம்பித்தாள்.

இப்பொழுது உஷாவும் பாஸ்கரனும் ஒருவரை யொருவர் நன்றாகப் புரிந்து கொண்டு விட்டனர். ஒருவர் இல்லை யென்றால் இன்னொருவரும் இல்லை என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. பாஸ்கரன் ஒரு நாள் ஒரு கடிதத்தின் மூலம் தன் காதலை அவளுக்கு வெளிப்படுத்தினான். ஊரில் இருக்கும் தன் பெற்றோர்களுக்கு விஷயத்தைத் தெரிவித்து அவர்கள் சம்மதம் பெற்றுப் பிறகு உஷாவின் தாயாரை வந்து பார்ப்பதாகச் சொன்னான். அதற்குள் உஷா தன் தாயாரின் சம்மதத்தைப் பெற வேண்டும். தாயாரிடம் இதை எப்படித் தெரிவிப்பது என்று உஷா தயங்கினாள். அவளுக்கு உறவென்று சொல்லிக் கொள்ள வேறு யாருமே இல்லை. இவ்வுலகத்துக்கு உஷா வரு முன்பே அவள் தந்தை விண்ணுலகம் சென்று விட்டார். ஆகவே அவளுக்குத் தாயும் தந்தையுமாக இருந்து பல விதத்திலும் பாடுபட்டு அவளை முன்னுக்குக் கொண்டு வந்தது அவள் தாயார் லக்ஷ்மி அம்மாள்தான். அம்மாவுக்குத் தெரியாத இரகசியம் எதுவுமே அவளிடம் இருந்ததில்லை. ஆனால் பாஸ்கரனைப் பற்றி எதுவுமே அம்மாவிடம் இது வரையில் தெரிவிக்க வில்லை. திடீரென்று எப்படி இந்த விஷயத்தை ஆரம்பிப்பதென்று குழம்பித் தவித்தாள் உஷா. அதோடு அவளை வெட்கம் கவிந்துகொண்டது.

இரண்டு வார லீவில் பாஸ்கரன் சென்னைக்குப் போனான். பாஸ்கரன் ஊருக்குப் போனதிலிருந்து உஷா தரையில் போடப்பட்ட மீனாய்த் தவித்தாள். காரியாலயத்துக்குப் போகவே அவளுக்குப் பிடிக்கவில்லை; வீட்டில் இருக்கவும் பிடிக்க வில்லை. அம்மாவிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டவும் வழி தெரிய வில்லை. உள்ள நிறைவினில் கள்ளம் புகுந்து விட்டது: இனி அந்த உள்ளம் எப்படி நிறைவாகும்? ஒரு வாரம் குழப்பத்திலேயே சென்று விட்டது. அம்மாவின் சம்மதத்தைப் பெற்று, பாஸ்கரனுக்குத் தெரிவிக்க வேண்டுமே என்னும் சிந்தனையும் உஷாவை வாட்டியது.

அன்று காரியாலயத்திலிருந்து வந்ததும் அம்மா போட்டுக் கொடுத்த காப்பியைக் குடித்து விட்டு உஷா மெதுவாக அம்மாவிடம் பாஸ்கரனைப் பற்றிச் சொன்னாள். அதைச் சொல்லுவதற்குள் அவள்தான் எவ்வளவு சிரமப்பட்டு விட்டாள்!

உஷா எதிர்பார்த்தது போல் லக்ஷ்மி அம்மாள் திகைத்துப் போய் விடவில்லை. அதற்கு மாறாக மிகவும் அமைதியாக இருந்தாள்.

"உன் மனம் சில நாட்களாகச் சரியாயில்லை என்பதை நான் அறிவேன், உஷா. ஏனென்றால், உன் வயதில் நானும் இதே மாதிரி

**பிரயாணி:** இந்தாப்பா! இந்த நாய்க்கும் ஒரு டிக்கட் கொடு!

**கண்டக்டர்:** தாராளமாய்த் தரேனுங்க. ஆனால் ஒன்று. இந்த பஸ்ஸில்



நிற்கும் பிரயாணிகளுக்கு இடம் கிடையாது. உங்கள் நாய் உங்களைப் போலவே ஸீட்டில் காலை வைக்காமல் தொங்கப் போட்டுக் கொண்டு உட்காருமானால்தான் ஏற்றிக் கொள்வேனுங்க.

நிலையில் இருந்திருக்கிறேன். நீ உத்தியோகத்துக்குப் போன இரண்டொரு மாதங்களில் உன்னிடம் ஏற்பட்ட மாறுதல்களைக் கூர்ந்து கவனித்து வந்தேன். எனக்கு ஒருவாறு விஷயம் புரிந்து விட்டது. எதற்கும் நீயாக என்னிடம் சொல்லுகிற வரையில் உன்னைக் கேட்க வேண்டாம் என்றிருந்தேன். உன்னைப் பொறுத்த வரையில் விவாகம் என்பது ஒரு கனவு. உன் வாழ்வில் அது என்றுமே நடக்கக் கூடாதது என்று நீ தீர்மானித்துக் கொள்ள வேண்டும்....!" என்று லக்ஷ்மி அம்மாள் உறுதியான குரலில் சொன்னதும், உஷா, "ஐயோ, அம்மா! நீ என்ன சொல்லுகிறாய்....?" என்று அலறிவிட்டாள்.

லக்ஷ்மி அம்மாள் சிறிதும் பதற்றம் கொள்ளாமல், "உஷா, பதறாதே அம்மா! இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் தான் நிதானத்துடன் இருக்க வேண்டும். உன்னிடம் பல ஆண்டுகளாகச் சொல்லாமல் மறைத்து வைத்த விஷயத்தைச் சொல்லிவிட வேண்டிய தருணம் இப்பொழுது வந்து விட்டது. நான் உன்னிடம் சொல்லப் போகும் விஷயம் மிகவும் அந்தரங்கமானது. இதைக் கவனமாகக் கேட்டுக் கொள். பிறகு நிதானமாக அமர்ந்து நீ விவாகம் செய்து கொள்ள முடியுமா என்பதைச் சிந்தித்துப் பார்...." என்று கூறிச் சற்று நிறுத்தினாள்.

"அம்மா! நீ சொல்ல வேண்டியதை விவரமாகச் சொல்லு. நான் நிதானமாகக் கேட்கிறேன்...." என்று கூறினாள் உஷா. அவள் முகம் அம்மா என்ன சொல்லப் போகிறாளோ என்ற கலவரத்தின் காரணமாகப் பெரிதும் குழம்பிக் கிடந்தது.

"உஷா, கவனமாகக் கேள். என் பேர்தான் லக்ஷ்மியே தவிர எந்த விதமான பாக்கியமும் இல்லாதவள் நான். உன் தகப்பனும் நானும் ஒருவரையொருவர் மறக்க முடியாத அளவுக்கு இணைபிரியாமல் பழகினோம். விவாகம் என்னும் பந்தம் எங்களைப் பிணைக்கும் முன் விதி என் வாழ்வில் புகுந்து சதி செய்து விட்டது. என் ஜாதகத்தில் அங்காரக தோஷம் இருந்ததால் என்னை மணப்பவன் ஆறு மாதத்துக்கு மேல் உயிரோடு இருக்க மாட்டான் என்று சோதிடர்கள் கூறி

விடவே, எங்கள் திருமணம் வெறும் கனவாகப் போய் விட்டது. இதனால் உன் தந்தை மனம் முறிந்துபோய் விட்டார். என் மனம் அடைந்த வேதனையோ சொல்லி முடியாது. மாங்கல்ய தாரணம் செய்து கொள்ள வில்லையே தவிர நானும் உன் தந்தையும் கணவன் — மனைவி மாதிரியே வாழ்ந்தோம். சோதிடத்துக்குப் பயந்து விவாக பந்தத்தை ஏற்க வில்லையே ஒழிய, மனமொத்த எங்கள் தாம்பத்திய இன்பம் சிறிதும் குன்றவில்லை.

''எனக்கு ஒரே ஆதரவாயிருந்த தந்தையிடமிருந்து பிரிந்து உன் தந்தையுடன் தனி வாழ்வைத் தொடங்கினேன். அவரும் தம் குடும்பத்தினரை எனக்காக உதறி விட்டார். இந்த உலகையே மறந்து, உறவினர்களின் கண்களிலேயே படாமல், ஆறு மாத காலம் தனி வாழ்வு வாழ்ந்தோம். என் வாழ்வின் பொற் காலமான அந்த நன்னாட்களின் பலனாக, நான் கருவுற்றேன். உஷா, வாழ்வின் பயனை அடைந்து மகிழ்வடைய வேண்டிய அந்தச் சமயத்தில் உன் தகப்பனார் திடீரென்று மரணமடைந்து விட்டார். ஊற்றார், உறவினர்களெல்லாரும் 'சோதிடம் பலித்து விட்டது' என்று கூறி ஏசினர். சோதிடத்தின் பலன்தானோ, அல்லது சமூகத்தின் கட்டுப்பாடுகளை மீறி நடந்ததற்காக ஆண்டவன் எனக்கு அளித்த தண்டனையோ எப்படியானாலும் என் தலையில் பேரிடி விழுந்து விட்டதொன்றுதான் எனக்குத் தெரியும். யாரும் மற்ற அநாதையாகி விட்ட நான், ஊரை விட்டே புறப்பட்டு விட்டேன். எங்கே போகிறேன், நான் என்ன செய்யப் போகிறேன், யாரை நம்பிப் போகிறேன் என்றெல்லாம் எனக்குத் தெரிந்திருக்க வில்லை. உன்னை வயிற்றில் சுமந்து கொண்டு, ஊற்றாரின் ஏச்சுப் பேச்சுக்களையும், ஊராரின் அவதூறுகளையும் உள்ளத்தில் சுமந்து கொண்டு உலகத்துக்கே சுமையாகி விட்ட நான் ஊரூராக ஓடினேன்; உள்ளம் தளர்ந்து வாடினேன்.

''எங்கே சென்றாலும், ஊராரின் வசை மொழிகளுக்கே ஆளானேன். இவ்வளவு கொடுமைகளையும் தாங்கிக் கொண்டாவது வாழ்வானேன் என்று நீ நினைக்கலாம். அது சரிதான். ஆனால் இவ்வளவு துன்பங்களையும் சகித்துக் கொண்டது யாருக்காக என்று நினைக்கிறாய்? என் வயிற்றில் இருந்த உனக்காகத் தான். கடைசியில் உன்னைப் பெற்றேன். அநாதையாக, ஏதோ ஓர் ஊரில், ஆஸ்பத்திரியில் நீ பிறந்தாய். உன் முகத்தைப் பார்த்து என் வாழ்க்கையில் நான் அநுபவித்த கஷ்டங்களை யெல்லாம் மறந்தேன். அந்த இன்பமும் எனக்கு நீடித்திருக்க வில்லை. ஆஸ்பத்திரியிலிருந்து நீ பிறந்த ஒரு வாரத்துக்கெல்லாம் வெளியேற்றி விட்டார்கள். உன்னைத் தோளில் சாத்திக் கொண்டு ஊரூராய் அலைந்தேன்; கடைசியில் இந்த பம்பாய் நகரத்துக்கு வந்து சேர்ந்தேன். தயாள சிந்தையுடைய நம் தமிழ் நாட்டுப் பிரமுகர்களின் உதவியால் ஒருவாறு ஜீவனோபாயத்துக்கு வழி தேடிக் கொண்டு உடல் வற்ற உழைத்தேன்; உன்னை வளர்த்துப் படிக்கவைத்து ஆளாக்கினேன்.

இத்தனை நாட்களும் உன்னிடம் இதையெல்லாம் சொல்லாமல் இருந்ததற்குக் காரணம் நீயே என்னை வெறுத்து ஒதுக்கி விடுவாயோ என்று நான் கொண்ட அச்சம்தான். அந்தக் காலத்தில் இருந்த என்னுடைய நிலைமையை நீ உணர்ந்து கொள்ளும் காலம் வரும்போது உனக்கு இதையெல்லாம் சொல்லலாம் என்று என் மனசுக்குள்ளேயே எல்லாவற்றையும் வைத்துக் கொண்டு குமைந்தேன்..... இனி நீ என்னைப் பற்றி என்ன நினைத்தாலும் சரி, அதைப் பற்றி எனக்கு அக்கறை யில்லை. உன் கரம் பற்ற விரும்புகிறவர், உன் தாய் மங்கல சூத்திரம் அணியாமல் தாம்பத்திய வாழ்வில் ஈடுபட்டு உன்னைப் பெற்றாள் என்னும் உண்மையை அறிந்து கொண்டால் உன்னை மணக்கச் சம்மதிப்பாரா? அப்படியே அவர் சம்மதிப்பதாக வைத்துக் கொண்டாலும் அவருடைய பெற்றோர்கள் சம்மதிப்பார்களா? இவைகளுக்கெல்லாம் உன்னால் அநுகூலமான பதிலை அவரிடம் பெற முடியும் என்றால் நீ அவரை மணந்து கொள்வதைப் பற்றி எனக்குச் சிறிதும் ஆட்சேபம் இல்லை. ஆனால் இந்த உண்மையை அவரிடம் வெளியிடாமல் மறைத்து வைக்க நினைப்பது மகா பாதகமாகும். ஒரு நாள் அவராக இதை அறிந்து கொள்ள நேர்ந்தால், உன் வாழ்வு அடியோடு பாழாகி விடும்.....''

இதைக் கூறி முடித்த லக்ஷ்மி அம்மாளின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய்ப்பெருகியது.

உஷா கற்சிலையாக அமர்ந்து விட்டாள்.

பதிலே பேசாமல் தன் அருமை மகள் அமர்ந்திருப்பதைக் கண்ட லக்ஷ்மி அம்மாளுக்கு உள்ளம் நெகிழ்ந்து விட்டது. உஷாவின் கரங்களை நடுங்கும் தன் கரங்களில் எடுத்து வைத்துக் கொண்ட லக்ஷ்மி அம்மாள், — ''என்னை மன்னிக்க மாட்டாயா உஷா? என் வாழ்வைப் பாழாக்கிக் கொண்டது போலவே உன் வாழ்வையும் பாழாக்கி விட்ட பாவி நான்! இனி என் முகத்தில் விழிக்கக் கூட உனக்குப் பிடிக்காது. உன்னை விட்டுப் பிரிந்து கண்காணாத தூரத்துக்குச் சென்று விடுகிறேன். நீ உன் மனத்துக்கு இசைந்தவனை மணந்து கொண்டு சுக வாழ்வு வாழ இனியும் நான் தடையா யிருக்க மாட்டேன்... ...என்னை மன்னித்தேன் என்று ஒரு வார்த்தை சொல்லுவாயா, உஷா?'' என்று குரல் தழுதழுக்கக் கேட்டாள்.

மறுகணம் ''அம்மா!'' என்று கதறி அழுதுகொண்டே உஷா தன் தாயின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

''அம்மா, இன்னொரு முறை அப்படிச் சொல்லாதே, அம்மா! யார் என்ன உதறினாலும் எனக்குக் கவலையில்லை. என்னைப் பொறுத்த வரையில் நீ தாய்மையே உருவானவள்தான். மனத்தால் வரித்த கணவரைக் கனவிலும் நனவிலும் மறவாமல் வாழ்ந்து அவர் உனக்கு விட்டுப் போன ஒரே செல்வமாகிய என்னை எத்தனையோ சிரமங்களுக்கிடையில் கண்ணும் கருத்துமாய் வளர்த்திருக்கிறாய் அல்லவா?''

''உஷா! என் கண்ணே!'' என்று மகளைக் கட்டி அணைத்துக் கொண்ட லட்சுமி அம்மாள், நாத் தழுதழுக்கக் கூறினாள்: ''நீ என்னை மன்னித்துவிடலாம் உஷா! என்

பாபத்துக்குத் தண்டனையாக உன் அப்பாவை என்னிடமிருந்து பறித்துக் கொண்டதுடன் திருப்தியடைந்து ஆண்டவன் கூட மன்னித்துவிடலாம். ஆனால் உஷா! என்னை நானே இன்றுவரை மன்னித்துக்கொள்ளவில்லை. என்றைக்கு உனக்குத் திருமணமாகிக் கண்குளிரப் பார்க்கிறேனோ அன்றுதான் என்னை நானே மன்னித்துக் கொள்வேன்! அந்த மன்னிப்பு இந்த ஜன்மத்தில் எனக்குக் கிட்டப் போவதுமில்லை!''

''அம்மா, இன்னொரு முறை அப்படிச் சொல்லாதே! உன்னை விட்டு நான் எங்கேயும் போகமாட்டேன் அம்மா. எனக்குக் கிடைத்த மாதிரி எல்லோருக்கும் அம்மா கிடைப்பாளா? அம்மா, நீ தியாக சிகரம்! என் நல்வாழ்வுக்காக நீ எத்தனை கஷ்டப்பட்டிருக்கிறாய், அம்மா! என் வாழ்க்கையில் திருமணம் என்ற பேச்சுக்கே இடமில்லை என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன் அம்மா, உன் வாழ்க்கையின் பாதையைத்தான் என் வாழ்க்கையும் தொடருகிறது...!'' என்று கூறிய உஷா சற்று நிறுத்தினாள்.

இதைக் கேட்டுத் திடுக்கிட்ட தன் தாயாரை ஆசுவாசப்படுத்தினாள் உஷா. ''இல்லையம்மா! நீ நினைப்பது போல் ஏதும் நேர்ந்து விடாது! நான் நர்ஸ் தொழிலை மேற்கொள்ளப் போகிறேன். நோயுற்றவர்களுக்குப் பணிவிடை செய்வதிலேயே என் வாழ்நாட்களைச் செலவிடப் போகிறேன். அதைக் காட்டிலும் முக்கியமாக என் கண் கண்ட தெய்வமாகிய உனக்குச் சேவை செய்வதுதான் என் தர்மம், ஆனந்தம், லட்சியம் எல்லாம். உன்னை வாழ விடாத சமூகம் என்னையும் வாழவிடாது. நீ கூறிய துயரம் தோய்ந்த உன் வரலாறு என் அகக் கண்ணைத் திறந்துவிட்டது. என் காதல் நிறைவேறாத கனவுதான். அது அப்படி அழிந்து போவதைத் தவிர வேறு வழியே கிடையாது! நம் சமூகத்தின் சம்பிரதாயப் பழக்க வழக்கங்களை மீறி என்னை ஏற்றுக் கொள்ள ஒரு நாளும் அவர் முன்வர மாட்டார்...!'' என்று கூறிய உஷாவின் உணர்ச்சி மயமான குரலை மேலே எதுவும் பேச முடியாமல் துக்கம் மேலே எழும்பி அடைத்துக் கொண்டது.

இதன் பிறகுதான் அந்தக் கடிதத்தைப் பாஸ்கரனுக்கு எழுதினாள் உஷா. கூறவேண்டியவைகளையெல்லாம் சாங்கோபாங்கமாகக் கூறிவிட்டுக் கடைசியாக ''என்னை மறந்து விடுங்கள்'' என்று எழுதியபோது அவள் நெஞ்சம் புழுவாய்த் துடித்தது.

அடுத்தாற்போல் காரியாலயத்துக்கும் ஒரு ராஜிநாமாக் கடிதம் எழுதினாள். கடிதங்களைத் தபாலில் சேர்த்து விட்டதும் ஒரு பக்கம் பெரிய சுமையை இறக்கி வைத்தாற்போல் இருந்தது. மறு பக்கம் முன்னிலும் அதிகமான துன்பச் சுமையைத் தாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இப்படித் தவித்தபடி எப்படியோ இரண்டு நாட்களை ஓட்டிவிட்டாள் உஷா. அன்று இரவு ''உஷா, என்னை முழு முட்டாள் என்று தீர்மானித்துவிட்டாயா? உன் கடிதத்தைப் படித்ததும் மனம் நெகிழ்ந்து போனேன்!'' என்று கூறிக்

கட்சிக்காரர்: நான் ஒருவருக்கு ஐந்நூறு ரூபாய் பணம் கொடுத்தேன். நோட்டுக் கேட்டு எதுவும் வாங்கிக் கொள்ளவில்லை. அவர் ஏமாற்றி விட்டால் என்ன செய்வதென்று யோசனையாயிருக்கிறது.



வக்கீல்: பரவாயில்லை. 'நான் கொடுத்த ஆயிரம் ரூபாயை உடனே திருப்பி அனுப்பு' என்று அவருக்கு ஒரு கடிதாசு எழுது.

கட்சிக்காரர்: நான் கொடுத்தது ஐந்நூறு ரூபாய்தானுங்களே!

வக்கீல்: யார் பொய்யின்னு சொன்னீங்க! நான் வாங்கினது ஐந்நூறு தான்னு எழுதுவான். உன் கட்சிக்கு அந்தக் கடிதாசு வலுவாகப் போகும்.

கொண்டே வாசலில் நுழைந்து வந்த பாஸ்கரனைப் பார்த்ததும் அவளுக்கு ஆச்சரிய மிகுதியினால் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது.

''என் பெற்றோர்களிடம் உன்னைப் பற்றிய எல்லா விவரங்களையும் கூறி, நம் திருமணத்துக்கு அவர்களுடைய மனப்பூர்வமான சம்மதத்தைப் பெற்றுவிட்டேன். உணர்ச்சிக் கொந்தளிப்பில் நீ தாறுமாறாக எதையும் செய்துவிடக் கூடாதே என்றுதான் சென்னையிலிருந்து விமானத்தில் புறப்பட்டு வந்தேன். உன் அம்மா ஒரு தெய்வம். உண்மையைச் சொல்லி உன் பிஞ்சு நெஞ்சைப் புண்படுத்தாமல் எத்தனை நாட்கள் பொறுமையோடு எல்லாச் சிரமங்களையும் பொறுத்துக்கொண்டிருந்திருக்கிறாள்!'' என்று படபடவென்று பேசிக்கொண்டே பாஸ்கரன் உஷாவின் அருகில் வந்து நின்றான்.

உஷாவுக்குத் தான் காண்பது கனவா, நனவா என்பதே விளங்கவில்லை. 'அவரை உளமாரக் காதலித்து என்ன பயன்? அவருடைய பெருந்தன்மையையும் தங்கமான மனத்தையும் புரிந்துகொள்ள இயலாத அறிவிலியாக அல்லவோ இருந்திருக்கிறேன்!' என்ற அவமான உணர்ச்சி ஒருபுறம் பிடுங்கித் தின்றது அவளை. உணர்ச்சி மிகுதியால் அவளால் ஒன்றும் பேச முடியவில்லை. பாஸ்கரனின் கால்களைத் தொட்டு வணங்கினாள், உஷா. பாஸ்கரன் அவளை வாரியெடுத்து அணைத்துக்கொண்டான். பிறகு இருவரும் சேர்ந்து லட்சுமி அம்மாளை வணங்கினர். மகளை மணக் கோலத்தில் பார்க்கப் போகிறோம் என்ற மகிழ்ச்சியாலும், தனக்கு மன்னிப்புக் கிட்டிவிட்டது என்கிற ஆனந்தத்தாலும் லட்சுமி அம்மாளின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது.




**THANGABASPAM**
**TOBACCO**

**KARAIKUDI.**

BS

# பஞ்சாப் நேஷனல் பாங்கியின் மூலம்



# பணம்



# சேமிப்பதுதான் சிறந்தமுறை

உங்கள் சேமிப்புகள் எங்களிடம் பத்திரமாக உள்ளன—உங்களுக்கு வட்டி கிடைக்கிறது; உங்கள் பணத்தை நாங்கள் நல்ல முறையில் பிரயோகிக்கிறோம். நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்காக உருவாகும் பல திட்டங்களில் உங்கள் பணம் ஈடுபடுகிறது.

**இவ்வாறு சேமிப்பதால் உங்கள் நலனை மட்டுமின்றி நாட்டின் நலனையே நீங்கள் பேணிப் பாதுகாக்கிறீர்கள்**

**பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட**

**இந்திய பாங்கிகளுள் பழம்பெரும் பெயர்— காலத்திற்கேற்றதோர் ஸ்தாபனம்**

நாடெங்கும் 425 கிளை ஆபீஸ்கள்




## 15. ரத்த அழுக்கம்

இதைப் பற்றி வேண்டிய மட்டும் சொல்லியாயிற்று. ஹிருதயத்திலிருந்து வேகமாய்ப் பீச்சப்படும் ரத்தம் ஓர் அழுக்கத்துடன் ரத்தக் குழாய்களில் செலுத்தப்படுகிறது. இந்த அழுக்கத்தை ஓரளவு சமாளித்திடுமாறு ரத்தக் குழாய் விரிந்து கொடுக்கிறது. இவ்வாறு விரிந்து கொடுப்பதும் சுருங்குவதும் எப்படி வேணுமோ அப்படி நடக்கும்படி இயக்கத்தை நிர்வகிக்கும் பொறுப்பு "வாஸோ மோட்டார்" என்னும் நரம்புகளால் ஏற்கப்படுகிறது. இந்த நரம்புகளை நன்முறையில் செயல்படும் திறமை—தேவைக்குத் தக்கவண்ணம் – நிலைக்க வகை செய்வோமாயின் ரத்த அழுக்கம் அதிகரிக்காமல் செய்யலாமே! அப்படியும் சிறிதளவு அதிகரித்திடினும் அதனுல் தலை சுற்றல் போன்ற கஷ்டங்கள் ஏற்படாமலாவது கட்டாயமாகப் பார்த்துக் கொள்ளலாம்.

"எனக்கே கொஞ்ச நாட்களாய் 'பிளட் பிரஷர்'னு டாக்டர் என்னமோ..." என்று சொல்லிக் கொண்டு வருபவரிடம் நான் சொல்வது என்ன தெரியுமா?

"டாக்டர் சொன்னது இருக்கட்டுமம்மா. அவர் கொடுத்தது என்ன மருந்து என்றும் இந்தச் சீட்டிலிருந்து எனக்குப் புரிகிறது. அது போகட்டும். உங்களுக்கு உடம்பை என்ன செய்கிறது? அதை மட்டும் சொல்லுங்கள்" என்பேன்.

"தலை பாரமாயிருக்கிறது: சில சமயம் தலை சுற்றல். தூக்கம் சரியாக வருவதில்லை: மார்பில் ஒரு படபடப்பு. திடுக்—குபீரென்று வேர்த்து விடும். அப்போது இந்த நெஞ்சம் மார்பும் படபட வென்று அடித்துக் கொள்ளும். ஒரு வேலையும் செய்ய முடிவதில்லை. பலஹீனம்னு போராது. அடியோடு ஒரு காரியம் செய்யக் கையாலாவதில்லை. ஒரு மாடிப் படி ஏறினால் இறங்கினால் அரை மணியாகிறது உடம்பு சுதாரிக்க. பெண்மணிகளுக்கு இப்படி இருக்கப்படுமோ? சொல்லுங்கள்" என்பார்.

"சரியம்மா. மலபந்தம் ஒன்றுமில்லையே?"

"அதெல்லாம்...."

இதற்குள் துணை வந்தவர் இடைமறித்து, "கான்ஸ்டிபேஷன்தான்" என்பார்.

"சரிதானம்மா! 'பிளட் பிரஷர்' எப்படியோ தொலையட்டும். உங்களுக்கு இப்ப நீங்க சொன்ன உபாதைகள் இல்லாமலிருந்தால் போதுமல்லவா? அந்த 'ப்ரஷர்' இருந்தால் தன்பாட்டுக்கு இருந்து போகட்டுமே. இந்தக் காலத்தில் எதுக்கெடுத்தாலும் 'இல்லே; இல்லே; பத்துக்குறை; கன்ட்ரோல்' இதே பல்லவியாகப் போச்சே. இந்தப் பிளஷராவது தாராளமாய் இருக்கட்டுமே! கவலைப் படாதீர்கள். அதனால் உபாதைகள் ஒன்றுமில்லாமலிருக்க வகை செய்து தருகிறேன்."

ஹாஸ்யத்தை ரசித்துச் சிரிப்பு அடங்கும் முன்... "அதே செய்ஞ்சாங்களானு போறும். உங்களுக்குக் கோடி புண்ணியம்" என்பது.

இதைப்போதான் இங்கு வாசகர்களுக்கு நினைவூட்டுகிறேன்.

1. தினசரி அப்யங்கம் – எண்ணெய்க் குளி. இதற்கு க்ஷீரபலா தைலம் – பலாச்வகந்தாதி இவை மிகவும் சிறந்தவை.

2. அணு தைலம் அல்லது 14 தரம் மடக்கிக் காய்ச்சிய க்ஷீரபலா இவற்றில் ஒன்றில் மூன்று நான்கு துளிகளை உள்ளங் கையில் ஏந்தி 'டுர்ர்ர்...ர்'' என்று மூக்கினுள் உறிஞ்சிடுதல். இதனால் மூக்கிலிருந்து சிறிது ஜலம் ஒழுகும் – தொண்டையிலிருந்து காரித் துப்பிடவும் நேரும்.

இவ்விரு சிகிச்சைகளால் வாஸோ மோட்டார் நரம்புகளும் பொதுவாக நன்னிலை பெற்று நன் முறையில் இயங்கும். அந்நன்னிலை நிலைத்து நிற்கவும் வகையுண்டாகும்.

3. இவர்களுக்கு மலபந்தமில்லாமல் பார்த்துக் கொள்ளுவது அவசியம். அவ்வாறின்றித் தினசரி சரிவர மலம் போகும் இயல்பினராயினும் – மாதம் இரண்டு மூன்று முறையாவது திராக்ஷா கஷாயத்தைக் குடித்து ஒன்றிரண்டு

## டாக்டர் ஸ்ரீஹரி அவர்களின் சுற்றுப் பயணம்

"கல்கி"யின் வைத்தியப் பகுதி ஆசிரியர் ஸ்ரீஹரி அவர்கள் செப்டம்பர் 9ந் தேதி இரவு சென்னையிலிருந்து புறப்பட்டு 10ந் தேதி காலை பெங்களூர் அடைகிறார். அங்கு மெட்ராஸ் வுட்லண்ட்ஸ், 5, சம்பங்கி டாங்க் ரோட், பெங்களூர்-1 என்ற விலாசத்தில் தங்கி யிருப்பார். அங்கிருந்து 12ம் தேதி இரவு புறப்பட்டு 13ந் தேதி சென்னை வந்து சேருகிறார். மறுபடியும் 16ந் தேதி சென்னையிலிருந்து திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் புறப்பட்டு மதுரைக்கு 17ந் தேதி சேருகிறார். மதுரையில் உடுப்பி போர்டிங் லாட்ஜ், மேல மாசி வீதி, மதுரை என்ற விலாசத்தில் தங்கி யிருப்பார். 19ந் தேதி இரவு மதுரையிலிருந்து புறப்பட்டு 20ந் தேதி சென்னை வந்தடைகிறார்.



பையன்: பலமான மழை பெய்து விறகுக் கடையில் விறகெல்லாம் நனைந்து ஈரமாகி விட்டால் கடைக்காரர் என்ன செய்வார்?

தாயார்: உங்கப்பா தலையில் கட்டி அனுப்புவார்.

முறை சோதனம் உண்டாகும்படி செய்து கொள்வது அவசியம்; நல்லதும்கூட. அவ்விதமே பாதாம் எண்ணெயில் அரை அல்லது ஒரு டீஸ்பூன் அளவைப் பாலுடன் இரவில் குடிப்பதும் நல்லது.

4. எளிதில் ஜெரிக்கக்கூடிய ஆயினும் ஊட்டமான ஆகாரங்கள் நல்லது. கோதுமை, ஒரு வருஷத்துக்குக் குறையாமல் பழகிய சம்பா அரிசி — சிறிதளவே நூடாக்கி உமி போக்கப்பட்ட பச்சைப் பயத்தம் பருப்பு — பொதுவாகச் சாத்விகம் நிறைந்த ஆகாராதிகளும் — கூடுமான வரை உப்பைக் குறைப்பதும் புளியை நீக்கிடுவதும் — நிரந்தரமாகச் சேவிக்கத் தக்கவை.

பச்சைக் காய்கறிகளும், முக்கியமாகக் கீரைகளும், மற்றும் கமலா, சாத்துக்குடி, பச்சை திராட்சைப் பழம் போன்ற நீரின் அம்சம் அதிகம் உள்ளவைகளையும் புளிப்புக்காக, நெல்லி முள்ளியையும் ஏற்பது நல்லது.

கொழுப்புச் சத்து அதிகமுள்ள ஆகாராதிகளைத் தவிர்ப்பதும் அவசியம்.

5. இரவில் படுக்கப் போகு முன்போ அல்லது பகலில் ஓய்வுள்ள போதோ பாதங்களின் அடித்தளத்துக்கு மட்டும் சிறிது ஆமணக்கெண்ணெயை அமர்த்தித் தேய்த்துக் கொண்டு படுப்பதும் நல்லது.

6. நிலப் பூசணி, நிலப் பனை, அமுக்கிரா கிழங்கு இவற்றில் ஒன்றையோ, இரண்டையோ, மூன்றையுமேயோ சூரணம் செய்து வைத்துக் கொண்டு இவற்றுடன் கொஞ்சம் சீனக் கற்கண்டின் பொடியையும் சேர்த்து அரை அல்லது ஓர் அவுன்ஸைச் சிறிது ஜலத்துடன் தினம் காலை மாலை சிறிது பாலுடன் சேவித்து வரலாம்.

7. நன்னாரியின் கி நீரில் அரை அல்லது ஓர் அவுன்ஸைச் சிறிது ஜலத்துடன் கொஞ்சம் சீனக் கற்கண்டின் பொடியும் சேர்த்துக் குடித்து வரலாம்.

8. அச்வகந்தாரிஷ்டம் என்னும் மருந்தில் இரண்டு டீஸ்பூனளவை ஓர் அவுன்ஸ் சீரகக் கஷாயம் இரண்டு தான்வந்தரக் குடிகை ஆகியவற்றுடன் தினம் இரண்டு வேளை ஆகாரத்துக்குப் பிறகும் —

9. மாதுலங்க ரஸாயனம் என்ற மருந்தில் ஒரு டீஸ்பூனளவை ஓர் அவுன்ஸ் ஜலத்துடன் தொடர்ந்து சாப்பிட்டு வருவது பயன் தரும்.

இவ்வளவுக்கும் ரத்த அமுக்கம் குறையாவிட்டால் தலைப் பொதிசால், தாரை முதலிய சிகிச்சைகள் தக்க வைத்தியரின் உதவியுடன் பெற வேண்டும்.

இனி ரத்த அமுக்கக் குறைவினால் ஏற்படும் தலை சுற்றல் மயக்கம் ஆகியவற்றுக்கு முக்கிய காரணம் ரத்தக் குறைவாக இருக்கலாம்.

அதற்குச் செய்ய வேண்டிய சிகிச்சை காரணத்தை அனுசரித்து வேறுபடலாம். ரத்த மூலம் போன்ற வியாதிகளால் உடலிலிருந்து ரத்தம் வீணாகி, அதை உடனுக்குடன் சரிக்கட்ட முடியாத நிலையில் சரீரம் இருக்கலாம்.

கிராஹிணி போன்ற வியாதிகளால் பீடிக்கப்பட்டவருக்கு ஆகாரத்திலுள்ள சத்துப் பொருள்கள் சரிவரக் கிரகிக்கப்படாத காரணத்தால் ஒரு வகை ரத்தக் குறைவு ஏற்பட்டிருக்கலாம். இதற்கெல்லாம் அந்தந்த வியாதியின் கீழ் விவரிக்கப்பட்ட சிகிச்சைகளை முதல் காரியமாகச் செய்து பிறகு குறைவுபட்ட ரத்தத்தை ஈடு செய்யும் காரியத்தில் முனைய வேண்டியது.

நீண்ட காலம் உபத்ரவித்த விஷ ஜுரம் போன்றவற்றின் காரணமாகவும்,...

சில சமயங்களில் (அதுவும் சமீப காலத்தில்) விழிப்புக் குறைவுடன் உபயோகிக்கப்பட்ட 'ஆன்டிபயாடிக்' என்னும் விஷநாசினிகளாலும் கூட ரத்தக் குறைவு ஏற்படலாம். இதற்குப் பிரதியாக (1) வைட்டமின்களைக் கொடுப்பது வழக்கமாகி விட்டது.

ஆகாரத்தில் சிறிது (2) தயிரை விடுப்படி உபயோகிப்பதால் இந்த 'ஆன்டிபயாடிக்'களினால் விளையக் கூடிய ரத்தக் குறைவு குணமாகுமென்று மட்டுமல்ல, அவ்வித ரத்தக் குறைவு ஏற்படாமலிருக்கவும் உதவுகிறதென்று சமீப காலத்திய ஆராய்ச்சிகள் மூலம் தெளிந்துள்ளனர். தயிரை உபயோகிப்பதில் சில கட்டுப்பாடுகள் நமது ஆசாரங்களில் உள்ளன. சாஸ்திரங்களிலும் தெளிவிக்கப்பட்டுள்ளன. இவற்றை மறக்கக்கூடாது.

எவ்வகை காரணத்தால் ஏற்பட்ட ரத்தக் குறைவிலும், (3) அன்ன பேதி சிந்தூரம் (4) கருசிலாங்கண்ணி லேஹியம் ஆகியவை நல்ல மருந்துகளாகும்.

(5) மனோ வியாகூலமில்லாமலும் மனத்துக்கு உற்சாகத்தை அளிக்கக் கூடியதுமான நிலையை இவர்களுக்கு வகுத்திடல் அவசியம்.

(6) இவர்களுக்கும் தினசரி எண்ணெய்க் குளி நல்லது.

சீலம் கெடுவதால், இந்திரியங்களுக்கு அடிமைகளாகி அவை இழுத்த வழியில் செல்லும் தான்தோன்றிகளுக்குப் பலவகை ஒட்டுவாரொட்டி ரோகங்களும் அவை முற்றுவதால் ரத்தம் கெட்டும், நரம்புகள் அறற்சியுற்றும் தலை சுற்றல் மயக்கங்களும், மற்றும் உபத்திரவங்களும் உண்டாகும். இவர்கள் நேரிடையாக வைத்தியரிடம் செல்லுமாறு இவர்களுக்கு எனது ஆலோசனை.

# ஒற்றுமைக்குக் காந்தி கண்ட வழி

**நா**ம் சுதந்திரம் பெற்றும் சுகமாக நிம்மதியாக வாழ முடியாததற்குக் காரணம் நம்மிடம் நிலவும் வகுப்பு வித்தியாசங்களும் அவைகளினால் மக்களிடையே ஏற்படும் பிணக்குகளும்தான் என்பதை மக்கள் உணர்வார்கள். நம் நாட்டில் சமூக ஒற்றுமையை நிலைநாட்டவே காந்தியடிகள் இடைவிடாது பாடுபட்டு அதற்காகவே தமது புனிதமான உயிரைத் தியாகம் செய்தார் என்பது உலகம் அறிந்த உண்மை.

தேசத்தில் ஹிந்து முஸ்லிம் வேற்றுமையினால் ஏற்பட்ட கலவரங்கள், அவைகளை அகற்றி மக்களிடையே ஒற்றுமை உணர்ச்சி ஏற்படுவதற்குக் காந்தியடிகள் ஆற்றிய அருமையான தொண்டுகளை நன்கு விளக்கிக் காட்டும் அவருடைய பொன்னுரை எழுத்துக்களைத் தொகுத்து அளிக்கிறது **மகாத்மா காந்தி நூல்கள் ஒன்பதாவது பகுதி.** தென் ஆப்பிரிக்காவில் இருந்த காலத்திலிருந்தே ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்குப் பாடுபட்டார் மகாத்மா என்பது இந்த நூலின் முதல் பகுதியைப் படித்தாலே தெரியும்.



ஒற்றுமையை நிலைநாட்டுவதற்கு நல்வழி என்ன என்பதை அடிகள் தெளிவாக விளக்குகிறார். ''இரு தரப்பினரும் மறுதரப்பினரைப் பற்றி நன்றாய்த் தெரிந்து கொண்டு மனப்போக்கைப் புரிந்துகொண்டு, அவரவரது குறைகளையும் நோக்கங்களையும் உள்ளது உள்ளபடி உணர்ந்து கொண்டால், ஒற்றுமைக்கு வழி பிறக்கும். இதற்குத் தரும நியாய என்கிற பரந்த மனப்பான்மை வேண்டும். நமக்குப் பிறர் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறோமோ, அதையே நாம் பிறருக்குச் செய்வோமாக.'' (பக்கம் 171)

மக்களிடையே ஒற்றுமை ஏற்படுத்துவதற்குக் கலப்பு மணம் ஒரு சாதனம் எனச் சிலர் நினைக்கின்றனர். இது தவறு எனக் காந்திஜி எடுத்துரைக்கிறார்.

''அசாதாரணமான சந்தர்ப்பங்களில் கலப்பு மணங்கள் இன்ப வாழ்வுக்குக் காரணமாக இருக்கலாம். ஆனால் அதை ஒரு பொதுக் கொள்கையாக அநுசரிக்கும்படி யோசனை கூறுவதற்குக் காரணமே இல்லை. ஐரோப்பாவில் கலப்பு மணமும், சமபந்தி போஜனமும் அமுலில் இருந்து வருகின்றன. அப்படியிருந்தும் ஐரோப்பியர்கள் அவர்களுக்குள் சண்டை போட்டுக் கொள்கிறார்கள். அவர்களைப் போல் அவ்வளவு உக்கிரமாகச் சரித்திரத்தில் எக்காலத்திலும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சண்டையிட்டுக் கொண்டதில்லை. (பக்கம் 83)

படித்துப் பாருங்கள்

உடல் பலமுள்ளவன் தைரியசாலியாயிருப்பான் என்கிற தப்பெண்ணம் பெரும்பாலாரிடம் இருக்கிறது. இந்தத் தவற்றை அடிகள் நன்கு சுட்டிக் காட்டுகிறார். ''சராசரி ஹிந்து ஒரு கோழை என்பதை இருவரும் ஒப்புக் கொண்டுள்ளோம். அவரை ஒரு தைரியசாலியாக எவ்விதம் மாற்றுவது? உடல் தசைகளை அபிவிருத்தி செய்வதன் மூலம் அவர் தைரியசாலியாவதா அல்லது ஆன்ம பலத்தின் மூலம் அவர் தைரியசாலியாவதா? 'பலவீனர்களுக்கு இந்த உலகத்தில் இடமில்லை' என்று அந்த நிருபர் கூறுகிறார். உடல் பலம் இல்லாதவர்களையே பலவீனர்கள் என்று அவர் குறிப்பிட்டுள்ளார் என எண்ணுகிறேன். அப்படியானால் அந்தச் சித்தாந்தம் சரியல்ல. ஏனெனில், மனிதனைக் காட்டிலும் அதிக உடல் பலம் உள்ள மிருகங்கள் ஏராளமாக இருக்கின்றன. அப்படியிருந்தும் மனிதன் வாழ்ந்து வருகிறான். உடல் பலம் வாய்ந்த பல இனத்தினர் மடிந்து மறைந்து விட்டார்கள். இன்று கூடச் சில இனத்தினர் மறைந்து வருகிறார்கள். எனவே மனிதன் சம்பந்தப்பட்ட வரையில் 'மனோபலம் இல்லாதவர்களுக்கு இந்த உலகத்தில் இடமில்லை' என்பதே சித்தாந்தமாக இருக்க வேண்டும்.'' (பக்கம் 210)

பொது வாழ்வில் ஈடுபடுபவர்கள் எவ்வித மனப்பாங்குடன் பணியாற்ற வேண்டும் என்பதற்கு மகாத்மாவின் வாழ்க்கையே தக்க வழி காட்டியாக அமைந்திருக்கிறது. தேசத்தின் தந்தை எவ்வளவு அடக்கத்துடன் தொண்டு புரிந்தார் என்பதைப் பின்வரும் வாக்கியங்களிலிருந்து காணலாம். ''என் செய்கையில் ஒன்றாவது பிரார்த்தனையின்றிச் செய்யப்படுவதில்லை. மனிதன் தவறும் இயல்பு உள்ளவன். தன்னையே அவன் முழுதும் நம்ப முடியாது. பிரார்த்தனைக்குப் பதில் கிடைப்பதாக அவன் கருதுவது, ஒருவேளை அவனது அகங்காரத்தின் எதிரொலியாக இருக்கலாம். பழுதிலா உதவி பெற, தீமை செய்ய இயலாத களங்கமற்ற நெஞ்சினை மனிதன் பெற்றிருக்க வேண்டும்.''

ஒற்றுமையின் அவசியத்தை நன்கு உணர வேண்டிய நெருக்கடி நிறைந்த இந்நாட்களில் நாம் எப்படிப் பணி புரிய வேண்டும் என்பதை காந்திஜியின் இந்த நூல் தெளிவாக விளக்குகிறது. இவைகளை ஆசிரியர்கள் திரு ஆர். வேங்கடராஜுலுவும், ஜெயமணி சுப்பிரமணியமும், திரு க. அருணாசலமும் இனிய எளிய நடையில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். முக்கியமான சம்பவங்களை விளக்கும் படங்களும் அடிக் குறிப்புகளும் நூலின் மதிப்பை மேலும் உயர்த்துகின்றன.

கிடைக்குமிடம்: காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், சென்னை—2. விலை: ரூ. 7. 50.

# இதைப்போன்ற புள்ளிகளை நீங்கள் சுவர்களில் கவனித்ததுண்டா?



**மிகவும் கவனமாக அவைகளைப் பாருங்கள்—அவைகள் மூட்டைப்பூச்சிகளின் அடையாளங்கள் அதாவது உறக்கமற்ற இரவுகளின் அறிகுறிகள். நீங்கள் அறிந்திருப்பதைக்காட்டிலும் மூட்டைப் பூச்சிகள் மிகமிக வேகமாகப் பெருகுகின்றன. அவைகளை அலட்சியப்படுத்தாதீர்கள். அவைகளை இப்பொழுதே 'டால்பை'க் கொண்டு அழித்தொழியுங்கள். கொஞ்சம் டால்பைத் தெளியுங்கள்.... நீங்கள் அறியுமுன்பே மூட்டைப் பூச்சிகள் செத்துப்போயிருக்கும்.**

டால்பின் ஒரே ஒரு தெளிப்பு அல்லது அதன் ஸ்பரிசம் பட்டாலே போதும். டால்ப் மூட்டைப் பூச்சிகளை உடனடியாகக் கொல்வதுடன் நீடித்த வன்மையுடையது. எல்லாவற்றையும்விட டால்ப் மிகவும் சிக்கனமானது—ஒவ்வொரு பாட்டிலிருந்தும் நூறு முழு ஸ்ப்ரே டப்பிகளையோ அல்லது பிளிட் டின்களையோ இதன் கரைசலால் நிரப்பலாம்




பேயர் இந்தியா லிமிடெட்.

# டால்ப்




ஒரு • பேயர் • PRODUCT

மூட்டைப்பூச்சிகளுக்கு சாவு மணியடிக்கிறது

விநியோகஸ்தர்கள்:-




நூறு என்ற எண் எப்பொழுதுமே புனித மானது: வேதங்களால் புகழப்பட்டது அது. மனித வாழ்க்கையின் லட்சியம் நூறு வயது வாழ்வது. அது போலவே கிரிக்கெட் ஆட்டத் தில் கலந்து கொள்ளும் பாட்டாளிகள் (அதா வது 'பாட்' செய்பவர்கள்) ஒவ்வொருவரும் டெஸ்ட் ஆட்டத்தில் ஒரு நூறு ஓட்டமாவது எடுக்கவேண்டும் என்றே கங்கணம் (காலில் பட்டைகளைக்) கட்டிக் கொள்ளுகிறார்கள்.

ஆனால் நினைப்பது போல் நடந்து விடு கிறதா? ஒரு 'பாட்' பிடிப்பவரின் மென்னி யைப் பிடித்து வெளியேற்றப் பதினொரு எதிர்க் கட்சியினர் தயாராக இருக்கிறார்களே! ஆகை யால் 'ஆறிலும் அவுட்' 'நூறிலும் அவுட்' என்றபடி பாட்டாளி எந்த நிமிஷமும் ஆட் டத்தை இழக்கலாம். நேருநல் இருந்தவன் இன்றில்லை என்னும் பெருமை பொருந்திய உலக வழக்கைப் போலவே ஓர் 'ஓவ'ரின் முதலிரண்டு பந்துகளைப் பவுண்டரியாகவும், 'ஸிக்ஸ'ராகவும் அடித்தவர் மூன்றாவது பந்தை ஆடாமலேயே அவுட் ஆகிவிடலாம்.

நூறு ஓட்டங்களை டெஸ்ட் பந்தயத்தில் எடுப்பது ஒரு மகத்தான சாதனை. ஆனால் எல்லாருக்குமே கைக்கு எட்டியது வாய்க்கு எட்டுகிறதா? நூறு குடம் பாலை அபிஷேகம் செய்யத் தொடங்கியவன் 99வது குடத்தைப் போட்டு உடைத்த கதை போலவும், நூறுக் குப் பதில் 99 பாடல்கள் பாடியதால் அமராவதியுடன் ஆருயிரையும் இழந்த அம்பிகாபதியின் கதை போலவும் 99ல் ஆட்டத்தைக் கோட்டை விட்ட ஆசாமிகள் நிச்சயம் நூறுக்கு மேல் இருக்கும். பிராட்மன் ஒருவர்தான் எந்த டெஸ்டிலும் இந்தத் துடை- நடுங்கும் தொண்ணூறு களில் ஆட்டத்தைத் தொலைத்துவிட்டு முகத் தைக் கீழே தொங்கப் போட்டுக் கொண்டு திரும்பியது கிடை யாது. சமீபத்தில், மேற்கிந்திய கோஷ்டி யைச் சேர்ந்த கன் ஹாய் வீட்டில் நடந்த நான்காவது டெஸ்டில் 92 ஓட்டங்கள் எடுத்து அவுட் ஆனது எல்லா ருக்கும் நினைவிருக்கும். ஆனால் 99 ஓட்டங்கள் எடுத்த பிறகு நூறை எட்டாமல் அவுட் ஆகிறவர் களிடம் 'பாவம்!' என்ற அனு தாபம்மேலோங்குகிறதல்லவா? இம்மாதிரி 99ல் ஆட்டமிழந்த வர்கள் சிலரைக் காணலாம்.


மில்லர்

1. ப்ரௌன் (ரன் அவுட்) 99.

1947–48ல் இந்தியா ஆஸ்தி ரேலியாவுக்குச் சென்ற போது ப்ரௌன் மன்காடினால் ரன் அவுட் ஆனார்.

2. மில்லர் (ஹிட்விக்கெட் பௌல்ட் ரைட்) 99

ஆஸ்திரேலியாவுக்கும், இங்கிலாந்துக்கும் 1951 பிப்ரவரியில் அடிலெய்டில் நடைபெற்ற நான்காவது டெஸ்டில் பிரபலமான மில்லர் இவ்விதம் அவுட் ஆனார்.

3. மக்ஸூத் அகமத் (ஸ்டம்ப்ட் தமானே பௌல்ட் குப்தே) 99

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஜனவரி 1955ல் லாகூரில் நடந்த மூன்றாவது டெஸ் டில் இப்படி நடந் தது.


காப்டன் டெக்ஸ்டர்

4. கன்ஹாய் (ரன் அவுட்) 99.

21–1–59அன்று மதராஸில் மேற் கிந்தியர்களுக்கும் இந்தியாவுக்கும் இடையே நடந்த நான்காவது டெஸ் டில் கன்ஹாய் இப்படிப் பரிதாப மாக ஆட்டம் இழந்தார்.

5. ராய் (காட் பிரேனு பௌல்ட் க்ளைன்) 99

16–12–59 அன்று தில்லியில் ஆஸ்திரேலி யாவுக்கும் இந்தியாவுக்கும் நடைபெற்ற மூத லாவது டெஸ்ட் ஆட்டத்தில் பங்கஜ ராய் இவ்விதம் தம் சதத்தைப் பறி கொடுத்தார்.

6. டெக்ஸ்டர் (பௌல்ட் மெக்கன்ஸி) 99

சென்ற 1962 டிஸம் பரில் மெல்போர்னில் இங்கிலாந்துக்கும் ஆஸ்தி ரேலியாவுக்கும் நடந்த முதலாவது டெஸ்டில் இங்கிலாந்தின் காப்டன் டெக்ஸ்டர் இவ்விதம் வெளியேற்றப்பட்டார்.

'சதமும் சதமல்ல' என்று மைதானத்தை விலகும் இவர்கள் தங்கள் துரதிர்ஷ்டத்தை நோந்து கொள்வதில் அதிசய மென்ன?

# சரித்திரம் சொல்கிறது

எ. என். பரசுராம்



[திரு எ. என். பரசுராம் ''மினர்வா டியுடோரியல்'' கல்லூரியின் தலைவர். கல்லூரியில் பிள்ளைகள் பரீட்சையில் தோல்வியடைவதற்கான காரணங்களைத் தமது நுண்ணறிவினால் கண்டுபிடித்து, அதற்குப் பரிகாரமாக தமது டியூடோரியல் கல்லூரியை ஆரம்பித்துக் கல்லூரிகளுக்குள்ள மதிப்பைத் தமது ஸ்தாபனத்துக்கும் தேடித் தந்துள்ளார். சரித்திர வரலாறுகளை வெகு திறமையாகக் கையாளும் சாமர்த்தியம் உள்ளவர். மொழிப் பிரச்னையை வரலாற்று விளக்கத்தோடு தருகிறார்.]

**சரித்திர காலம் தொட்டு....**

சரித்திர காலத்திலிருந்தே இந்தியா ஒரு மாபெரும் கண்டமாகவும் சாம்ராஜ்யமாகவும் இருந்ததே தவிர, ஒரு தனித் தேசமாகவோ ராஜ்யமாகவோ இருந்ததில்லை. ஒரு காலத்தில் ஐம்பத்தாறு தனி ராஜ்யங்கள் இருந்ததாக நாம் படித்திருக்கிறோம். எல்லா அரசர்களுக்கும் இவ்வளவு நாடுகளையும் தமது குடையின் கீழ் கொண்டு வந்து ஆள வேண்டுமென்று தான் ஆசை. இதிகாசங்களில் விவரிக்கப்பட்டுள்ள ராஜசூயம், அசுவமேதம் போன்ற யாகங்கள் பேரரசர்களின் வெற்றி உற்சாகத்துக்குத் தூபம் போட்டன.

அரசியல் துறையில் நாட்டின் ஒற்றுமை என்பது கருத்தளவில் மட்டும் இருந்து வந்தாலும், பண்பாடு, கலாசாரம் என்ற வகையில் இந்திய மக்களின் ஒற்றுமை சீராகவே நிலைத்து விட்டது. நாடு முழுவதற்கும் ஒரே மொழி இல்லாமலிருந்தும், சம்ஸ்கிருத மொழி கலாசாரத் துறையில் மக்கள் பரஸ்பரம் பழகிக் கொள்வதற்கு ஏற்ற மொழியாகச் செயல் புரிந்து வந்தது.

**சம்ஸ்கிருதமும் பாலியும்**

கல்வெட்டுகள், சாசனங்கள் முதலியவற்றை ஆராய்ந்தால் ஒரு காலத்தில் சம்ஸ்கிருதம் அரசாங்க மொழியாகவே இருந்திருக்கக்கூடும் என்று சொல்லத் தோன்றும். பிற்காலத்தில் சாதாரண மக்களால் பேசப்படுவது என்ற காரணத்தினால் பாலி மொழி சம்ஸ்கிருதத்தின் இடத்தைச் சில காலம் கைப்பற்றியிருக்க வேண்டும். ஆனால் நாளாவட்டத்தில் பாலி மொழியும் மெருகு பெற்று மக்கள் பேசும் வழக்கிலிருந்து விலகியபோது அதை விட இலக்கிய வளம் பெற்ற சம்ஸ்கிருதம் தனக்கு உரிய இடத்தை அடைந்தது. மொகலாய ஆட்சி டில்லியில் ஆரம்பமாகும் வரையில் இந்த நிலைமைதான் நாட்டில் நிலவி வந்தது. தென்னகத்தில் சம்ஸ்கிருதத்திலிருந்து பெறப்படாத திராவிட மொழிகள் வழக்கிலிருந்தாலும், பல்லவர்கள் காலத்தில் அரசாங்க நிர்வாகத்தில் சம்ஸ்கிருதம் கையாளப்பட்டு வந்திருக்கிறது.

மொகலாயர்கள் காலத்தில் பாரசீக மொழியும், உருது மொழியும் அரசாங்க மொழிகள் என்ற கௌரவத்தைப் பெற்றன. ஆங்கிலேயர்களின் ஆட்சி ஆரம்பித்த பின்னர் ஆங்கில மொழி நிர்வாகத்தில் புகுத்தப்பட்டது. இந்திய மொழிகளின் வளர்ச்சியை இது ஓரளவுக்குத் தடை செய்தது என்றாலும், இந்திய மக்களின் சிந்தனை வளர்ச்சியைப் பெரிதும் தூண்டிவிட்டது. இந்தியர்கள் மேல் நாட்டுக் கருத்துக்களைத் தமதாக்கிக் கொள்ள வாய்ப்பு அளித்தது.

இந்திய தேசிய வளர்ச்சியே ஆங்கில இலக்கியத்தினாலும், ஆங்கிலக் கருத்துச் செறிவுகளாலும் ஊக்குவிக்கப்பட்டது என்பது மறுக்க முடியாதது. படித்த இந்தியர்கள் ஒருவருக்கொருவர் தங்கள் கருத்துக்களை ஆங்கிலத்தில் பகிர்ந்து கொள்ள முடிந்தது என்பதே இம்மொழி செய்த பெரும் நன்மை. தேசிய இயக்கம் கிராமங்களுக்குப் பரவ வேண்டிய அவசியம் ஏற்பட்டபோது இந்திய மொழிகளை உபயோகப்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. இந்தச் சமயத்தில்தான் நாட்டில் தேசிய மொழியாக ஒரு மொழியை வளர்க்க வேண்டுமென்று கவனம் செலுத்தப்பட்டது.

ஆனால் இப் பிரச்னை சுலபமானதாக இல்லை; சிக்கல்கள் மிகுந்து காணப்பட்டன. நாட்டில் இருபதுக்கு மேற்பட்ட மொழிகள் நல்ல இலக்கிய வளர்ச்சி பெற்று வழக்கில் இருந்தன. ஒவ்வொன்றும் லட்சக் கணக்கான மக்களால் பேசப்படுபவை. இவற்றில் ஏதாவது ஒன்றை மட்டும் ஆட்சி மொழி அந்தஸ்துக்கு உயர்த்திவிட்டால் மற்ற மொழிகள் பேசும் மக்களுக்கு மனக் கசப்பு ஏற்பட்டே தீரும். மேலும், நாட்டு மக்கள் எல்லோரும் அல்லது பெரும்பான்மை மக்களாவது பேசிப் புரிந்துகொள்ளக் கூடிய மொழி ஒன்றுகூட இல்லை.



காந்திஜி இப் பிரச்னைக்கு மிகுந்த தைரியத்துடன் தீர்வு காண முயன்றார். சுலபமாக்கப்பட்ட ஹிந்தி மொழி, அதாவது ஹிந்தியும், உருதுவும் கலந்த பேச்சு மொழியான ஹிந்துஸ்தானியை நாட்டின் தேசிய மொழியாக்கிவிடலாம் என்று அவர் ஆலோசனை கூறினார். காந்திஜி கருத்தில் கொண்ட அம்மாதிரியான மொழியைச் சிறுபான்மை மக்கள்தான் பேசினர் என்பது உண்மையே. ஏனெனில் மக்கள் பேசிய ஹிந்தி மாவட்டத்துக்கு மாவட்டம் மாறுபட்டிருந்தது. அராபிய, சம்ஸ்கிருத மொழிகளிலிருந்து இரவலாகப் பெறப்பட்ட வார்த்தைகள் கூடப் பேசுபவரின் போக்கை அனுசரித்துப் பொருள் பெற்றது. அப்படி இருந்தும், மற்ற மொழிகளைக் காட்டிலும் ஹிந்துஸ்தானி மொழி பெருவாரியான மக்களால் புரிந்து கொள்ளப்படும் என்றே அவர் எண்ணினார். வடக்கு தெற்கு மக்களுக்கும், ஹிந்து — முகம்மதிய மக்களுக்குமிடையே ஹிந்துஸ்தானி ஓர் இணைக்கும் பாலமாக இருக்கும் என்று அவர் நினைத்தார்.



இதன் விளைவாக ஹிந்தியைத் தேசிய மொழியாக்கும் இயக்கத்தைக் காங்கிரஸ் கட்சி ஆரம்பித்தது. கூடவே, பல்வேறு மொழிவாரி பகுதிகளாகவும் காங்கிரஸ் இயங்கத் தலைப்பட்டது. சரித்திர வரலாற்றில் இடம் பெற்றுள்ள இவ்விரண்டு விபத்துக்களும் சுதந்திர சகாப்தத்தில் இந்தியாவின் போக்கை மிகவும் பாதித்தன. நமக்கு முன்னுள்ள அபாயங்களையும், எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளையும் கூட இவை மேலும் கடுமையாகவே பாதிக்கக் கூடும்.

**அந்தக் காலத்தில்....**

ஆங்கிலேயர் ஆட்சியில் ஹிந்தி பேசாத பிரதேசங்களில் ஹிந்தி மொழி வெகுவாகப் பரவவில்லை. இதைப் பரப்ப வேண்டுமென்று எடுத்துக்கொண்ட முயற்சிகளும் சிறிதளவுதான் பலன் அளித்தன. அதே சமயத்தில் மொழிவாரி காங்கிரஸ் பகுதிகள் மொழி அடிப்படையில் ராஜ்யங்களைச் சிரமைப்பதில் தீவிரமாக ஈடுபட்டன. இந்த லட்சியத்தை நிறைவேற்றினால் நாட்டின் ஒற்றுமை சிதறுண்டு போகுமே என்று காங்கிரஸ்காரர்கள் துளியும் கவலை கொள்ளவில்லை. 1947ம் ஆண்டு சுதந்திரம் கிடைத்தபோது இந்த எதிர்காலப் பயங்கர விளைவுகள் தெளிவாக உருவெடுக்கவில்லை.

**அம்பேத்கரின் அபிப்பிராயம்**

ஏனெனில் அரசியல் நிர்ணய சபை முதன் முதலாகக் கூடியபோது இந்திய ஒற்றுமை நன்கு நிலைபெற்று விட்டதாகவே தோன்றியது. ஹிந்தி பற்றிய சம்பிரதாயமான காங்கிரஸ் கருத்து அரசியல் சட்டத்தில் புகுத்தப்பட்டது. ஆனால் இந்த ஷரத்தைத் தீர்மானிக்கும்போதே ஹிந்தி நாட்டின் மொழியாக இருக்க முடியாது; இருக்கத் தகுதி வாய்ந்ததல்ல என்பதும் தெளிவாகவே தெரிந்தது. மாற்று யோசனைகள் பல சொல்லப்பட்டன. அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்களில் முக்கியமான டாக்டர் அம்பேத்கர் கூட, இந்திய மொழிகளில் ஏதாவது ஒன்று ஆட்சி மொழியாக இருக்க வேண்டுமானால் அது ஸம்ஸ்கிருதமாகத்தான் இருத்தல் வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார்.

எனினும் பகுத்தறிவும் வாதமும் உணர்ச்சி வேகத்தில் அமிழ்ந்து 1965ம் ஆண்டிலிருந்து ஹிந்தி ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்ற ஷரத்து தலைவர் ராஜேந்திர பிரசாத் அவர்களின் இறுதி வோட்டுப் பெற்றுத்தான் நிறைவேறியதாகத் தெரிகிறது. அவரது தேசப் பற்றும், தாய் நாட்டுச் சேவையும், தன்னலமற்ற தூய்மையுள்ளவைதான். ஆனாலும் இந்த மொழிப் பிரச்னையில் ஹிந்தியை ஆவேசத்துடனும் ஆதரித்தவர் அவர். அவர் ஆதரவுடன் இந்த ஷரத்து அதிக வாதமின்றியே அரசியல் சட்டத்தில் இடம் பெற்றுவிட்டது. அப்போது 1965ம் ஆண்டு வரம்பு வெகு தொலைவில் இருந்தது. ஆனால் காலம்தான் எத்தனை வேகமாக ஓடுகிறது! அந்த எல்லைக் கோடான 1965ம் ஆண்டு நம்மை எட்டிப் பிடித்துக்கொண்டு எதிரே நிற்கிறது.

**தலைவிதி நாள்**

தலைவிதி நாள் நெருங்க நெருங்க ஹிந்திக்காரர்கள், ஆங்கிலத்தை அகற்றித் தங்கள் மொழியான ஹிந்தியை அரியாசனத்தில் ஏற்றுவதற்கான முயற்சிகளைத் தீவிரமாக்குகின்றனர். இதைக் கண்டு ஹிந்தி பேசாத மக்கள் பெரிதும் கலக்கமடைகின்றனர். சந்தேகமும் பயமும் அதிகரித்துள்ளன. இதற்கிடையில் ராஜ்யச் சீரமைப்பின் காரணமாகப் பிராந்தியப் பற்றுக்களும், உத்வேகங்களும் தொடர்ந்து தீவிரமடைந்துள்ளன.

இவ்விரண்டின் கூட்டு விளைவுதான் இங்குமங்குமாக நாட்டில் தோன்றிய பிரிவினைச் சக்திகள் பெறும் ஊக்கமும் உற்சாகமும். அஸ்ஸாம், தமிழகம், பஞ்சாப் முதலிய ராஜ்யங்களில் ஹிந்தி மொழிக்கு எதிர்ப்பு மிகவும் வன்மையாகவே வளர்ந்தது. வங்காளத்திலும் ஹிந்தி மொழிக்கு அப்படி யொன்றும் விசேஷ ஆதரவு இல்லை. குஜராத்தும், மகாராஷ்டிரமும் இந்தப் பிரச்னை பற்றி உதாசீன பாவமே காட்டி வருகின்றன. ஹிந்தி மொழி வெறும் பிராந்திய மொழிதான், உத்தரப் பிரதேசம், டில்லி, பீஹார், மத்தியப் பிரதேசம் முதலிய பிரதேசங்களில் மட்டுமே பேசப்படுவது என்பது நிதர்சனமாகத் தெரிகிறது. இந்த நான்கு ராஜ்யங்களை விட்டால் ஹிந்தி பற்றி எதிர்ப்போ உதாசீனமோதான் காணப்படுகிறது.

**இணைப்பு இல்லை, பிளவே**

மகாத்மா காந்தி எதிர்பார்த்த இரண்டு நன்மைகளை ஹிந்தி மொழி அளிக்கவில்லை. வடக்கையும் தெற்கையும் ஹிந்தி இணைக்கும் என்று அவர் நம்பினார். ஹிந்தி இவ்விரு பகுதிகளுக்குமிடையே பிளவைத்தான் உண்டாக்கி இருக்கிறது. பாகிஸ்தான் தனி ராஜ்யமாகப் பிரிந்து சென்ற பின் ஹிந்து — முகம்மதியர்களுக்குள்ளே ஒற்றுமையை வளர்க்க ஹிந்தி மொழி பயன்படும் என்ற வாதமும் அர்த்தமற்றுப் போய்விட்டது. இன்றைய நிலையில் பிளவை உண்டுபண்ணும் சக்தியாகத்தான் ஹிந்தி இருக்கிறது. ஆட்சிமொழியாக ஹிந்தி ஆக்கப்படுமேயானால் இதைத் தாய்மொழியாகக் கொண்ட மக்களுக்கு மத்திய அரசாங்கத்தில் விசேஷ சலுகையும் செல்வாக்கும் அளிக்கப்படும். நாட்டிலுள்ள எல்லா இதர மக்களும் இரண்டாந்தரப் பிரஜைகளாகத் தாழ்த்தப்படுவார்கள்.

இருபதாவது நூற்றாண்டின் இரண்டாவது பாதியில் வேகமாக முன்னேற்றமடைந்து வரும் நாட்டுக்கு ஆட்சி மொழியாக ஹிந்தி செயலாற்றத் திறமையற்றது என்பது தெளிவு.

**வலிமையோடு எதிர்க்க வேண்டும்....**

ஆகவே ஹிந்தி பேசாத ராஜ்யங்களில் வாழும் மக்கள் ஹிந்திக்கு எதிராகத் தங்களுடைய எதிர்ப்பின் வலிமையைச் சர்க்காருக்கு நன்றாகவே உணர்த்த வேண்டும். வேறு எந்த மொழியையாவது மக்கள் விரும்பி ஏற்றுக்கொள்ளும் வரை ஆங்கிலமே ஆட்சி மொழியாகப் பணியாற்ற வேண்டும்; இல்லாவிட்டால் நாடு சிதறுண்டு போவதுடன் நிரந்தரமாகப் பின்தங்கிய நாட்டினராய் நாம் இருந்து விடும் அபாயம் உண்டு.

## அழகிய இளவேனில்

கம்யூனிஸ ஊடுருவலைத் தடுத்து நிறுத்தும் பணியில் தென் வியட்நாமியருக்கு உதவிவரும் அமெரிக்காவுக்குப் பெரிய தலைவேதனையாக விளங்குகிறது அங்கு நடக்கும் மத சம்பந்தமான தகராறுகள்.

பௌத்தர்களுக்கும் கத்தோலிக்கர்களுக்குமிடையில் அங்கு பல தலைமுறைகளாகவே இருந்துவரும் பகைமை இப்போது விசுவரூபம் எடுத்திருக்கிறது. ஆட்சிப்பொறுப்பில் உள்ள ஜனாதிபதி டையெம் கத்தோலிக்கர். பெரும்பான்மையினரான பௌத்தர்கள் கொடுமைப்படுத்தப் படுவதாய்ச் சொல்லியும் அவர்களுக்குச் சம உரிமைகள் கோரியும் பௌத்த பிக்ஷுக்கள் நடத்துகிற போராட்டம் விநோதமானது. ஒருவர் பின் ஒருவராக அவர்கள் பெட்ரோலில் குளித்துத் தங்களுக்குத் தாங்களே தீவைத்துக் கொண்டு மாய்கின்றனர்.



முப்பத்தெட்டு வருஷங்களுக்கு முன் பிறந்தபோது 'அழகிய இளவேனில்' என்று பெயர் சூட்டப்பெற்ற மேடம் நிஹு இன்றைய ஜனாதிபதியின் தம்பி மனைவி. இவளுக்கு அரசாங்கப் பதவி ஏதும் இல்லையென்றாலும் அதிகாரம் செலுத்துவதற்குக் குறைவே யில்லை. ஜனாதிபதி உட்பட நாட்டை ஆள்கின்ற அனைவரையும் ஆள்கின்றவள் இவள். ''நீங்கள் செய்கிற காரியங்களை யெல்லாம் உங்கள் தந்தை ஆதரிக்கவில்லை போலிருக்கிறதே'' என்று யாரோ கேட்ட போது. ''அவர் ஒரு கோழை'' என்று பதிலளித்தாளாம்.

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் மூன்று

## சிந்தூர மோகினி

ஜெகசிற்பியன்

"வெற்றிச் செல்வரே, வருக! வருக! பகை வென்ற பல்லவக் காவலரே, வருக! வருக!"

திகைப்புற்று எழுந்து நின்ற பரமேசுவர வர்மனின் செவிகளில் தேன் வந்து பாய்ந்தாற் போல் இந்த இனிய சொற்கள் இறங்கவே, தன்னை மீறிய ஒரு குதூகலத் திணறலிட்டுத் திரும்பினான்.

அங்கே, அந்தச் சிற்றூற்றங் கரையின் மணற் சரிவில் வளர்ந்தோங்கி யிருந்த சவுக்கை மரத்தின் நீண்ட நிழற் கோட்டில், பிரம்ம சிருஷ்டியின் கரைகடந்த எழில் வடிவத்தினளாய் நின்று கொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி!

தேவ தரிசனம் கண்ட பாமர பக்தனைப் போல் பரவசத் திளைப்படைந்து பின்னால் நகர்ந்த பரமேசுவரவர்மனின் மனத்தில் பீதி மயமானதோர் எண்ணம் பீறிட்டது. 'யார் இந்தப் பெண்? ஆந்திர இளவரசி உத்தமசீலியா இவள்? அவள்தான் அதோ இடிந்து தகர்ந்து கிடக்கும் அந்த இல்லத்தின் அடியிலே உயிரோடு சமாதி வைக்கப்பட்டு விட்டாளே! ஒருகால் இது அவளுடைய ஆவியின் பொய்ப் பிரசன்னமாயிருக்குமோ? அல்லது அவளைப் பற்றிய ஏக்கத்தில் குழம்பிக் கலங்கியிருக்கும் என் மனத்தின் பிரமைக் காட்சியாக இருக்



கூமோ?' — வியப்பும் பரபரப்புமாகக் கண்ணிமைகளைத் தட்டிக் கொட்டிக்கொண்டு அவளை உற்றுப் பார்த்தான் அவன்.

மகர யாழின் இருபத்தொரு தந்திகளையும் ஒருசேரச் கண்டி உணர்ந்தாற்போன்ற ஒலி; ஆந்திர இளவரசி உத்தமசீலி தான் அப்படிச் சிரித்தான்.

தான கதியில் இணைந்த ஓர் இனிய பண் போல் ஒலித்த அந்தச் சிரிப்பொலியைக் கேட்டுப் பரவசக் கிறக்கமடைந்தான், பரமேசுவரவர்மன்.



மாலைச் சூரியனின் செவ்வொளியிலே நனைந்து, சிந்தூர வண்ண மோகினி போல் நின்றுகொண்டிருந்த உத்தமசீலி அவனுடைய திகைப்பு நிலையைக் கண்டு குலுங்கிக் குலுங்கி நகைத்தாள்.

பரமேசுவரவர்மனின் உடல் சிலிர்த்தது. தன்னை மறந்த ஓர் ஆவலினால் உந்தப்பட்டவனாய் அவளெதிரே ஓடிப் போய் நின்று அரக்கப் பரக்கக் கண்களை மலர்த்தி அவளைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கினான்.

சரவணப் பொய்கையில் முகிழ்த்தெழுந்த செந்தாமரை மலர் போல் நின்றுகொண்டிருந்த உத்தமசீலியும், தன் கவிதைக் கண்களை அகலத் திறந்து அவனை ஆர்வத் துடிப்போடு ஏறிட்டுப் பார்த்தாள். எல்லையற்ற மகிழ்ச்சியால் அவளது இளந் தெங்கு நெஞ்சகங்கள் விம்மிதப் பாங்குடன் நிமிர்ந்து கூம்பின. அவனையே ஒரு கணம் பார்த்துக்கொண்டிருந்த அவள் சடாரென்று திரும்பிக் கலகலவென்று சிரித்துக்கொண்டே சிற்றாற்றங்கரையை நோக்கி ஓடலானாள்.

ஆச்சரியப் பிரமிப்புடன் வேரூன்றி நின்ற பரமேசுவரவர்மனின் மனத்தில் மீண்டும் அந்தச் சந்தேகம் வலுத்தது. 'நிஜமாகவே இவள் ஆந்திர இளவரசிதானா? அல்லது அவளின் ஆவிதான் வந்து என்னை இவ்வாறெல்லாம் அலைக்கழித்து ஏமாற்றுகிறதா?'

ஆடற் கலை பயின்ற புள்ளிமான் பொற்சிலம்பு அணிந்து ஓடுவதுபோல் கலீர் கலீரெனச் சிரித்துக்கொண்டே, துள்ளித் துள்ளி ஓடிய உத்தமசீலி, ஆற்று நீர் விளிம்பைத் தொட்டுப் புதைந்திருந்த ஒரு சிறு பாறைமேல் ஏறி நின்று கொண்டு அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

பரமேசுவரவர்மனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அப்படியும் இப்படியுமாக ஆடி அசைந்து நின்றுகொண்டிருந்த அவன், இடுமென ஏதோ ஒரு காந்த சக்தியால் கவரப்பட்டவன் போல் அவள் இருந்த இடம் நோக்கிப் பாய்ந்தோடினான்.

அடுத்த சில விநாடிகளில் அங்கு ஓர் ஆச்சரியம் நிகழ்ந்து விட்டது. ஆமாம்; அவன் அருகில் வரும் வரையில் அந்தப் பாறைமீது பதுமைபோல் நின்றுகொண்டிருந்த அவள் சட்டென்று ஆற்றில் தாவிக் குதித்தாள். அலைத்துக் கிளர்ந்தெழுந்த ஆற்றுநீர் நாலா பக்கமும் சிதறித் தெறித்தது.

''உத்தமசீலி! உத்தமசீலி!''

கண்டம் வெடிப்பதுபோல் கதறிக் கூவிக்கொண்டே ஓடிவந்த பரமேசுவரவர்மன் அந்தப் பாறைமேல் தட்டுத் தடுமாறி ஏறி நின்று அந்த ஆற்றின் நீர்ப் பரப்பை அவசரத் திகிலுடன் வெறித்து நோக்கினான். அவள் குதித்த இடத்தில் ஒரு பெருஞ் சுழிப்பு ஏற்பட்டு நுரை பொங்குவது மட்டுமே தெரிந்தது. பிறகு அந்த நீர்ச் சுழி நுரையும் தீர்த்துப் பளிங்குப் பாயாக விரிந்து விட்டது.

'சந்தேகமில்லை; அது அவளுடைய ஆவிதான்! என் அன்புக் கோமகள் உத்தமசீலியின் ஆவியேதான் அது!'— உள்ளார்ந்த நடுக்கத்துடன் தலையைத் தாங்கிப் பிடித்தவாறு அப்படியே தொய்ந்து துவண்டு உட்காரப் போன பரமேசுவரவர்மன், மீண்டும் சிலம்பு முரல்வது போன்ற அதே சிரிப்பொலி கேட்டுத் துணுக்குற்றவனாய்த் தலை நிமிர்ந்தான்.

என்ன ஆச்சரியம்! அதோ, ஆற்றின் மறு கரையில் நனைந்த ஆடையுடன் ஜல தேவதைபோல் நின்றுகொண்டிருக்கும் அந்தப் பெண் யார்? ஆந்திர இளவரசி உத்தமசீலி அல்லவா அவள்? ஆமாம்; அவளேதான்!

தடாலென ஆற்றில் தாவிப் பாய்ந்த பரமேசுவரவர்மன் மறு கரையை நோக்கி வேகமாக நீந்தலானான். அவன் நீந்திக் கரையேறும்வரை அவனையே பார்த்துக் குதூகலமாகச் சிரித்துக் கொண்டிருந்த அவள், விருட்டென்று திரும்பி ஆற்றங்கரையோரக் கொடிப் பாதையொன்றின் வழியே ஓடத் தொடங்கினாள். மூச்சு முட்டக் கரையேறிய அவனும் அவளை விடாமல் பின்தொடர்ந்து ஓடினான்.

தென்றல் காற்றில் மிதவையிட்டுப் பறந்து செல்லும் பட்டுத் துகில்போல் நெளிந்து வளைந்து முன்னால் ஓடிய அவள் ஓரிடத்தில் நின்று அவனைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு அந்தச் சிற்றாற்றின் மருங்கே அடர்ந்து வளர்ந்திருந்த புதர் ஒன்றில் புகுந்து மறைந்து விட்டாள்!

திகைத்து நின்றான் பரமேசுவரவர்மன். தெப்பமாக நனைந்த அவன் உடல் நிலைகொள்ளாமல் வெடவெடத்தது. உள்ளமோ ஓரேயடியாகக் குழம்பிக் கலங்கியது.

'என்ன இது மாயம்! அவள் எங்கே போனாள்? உண்மையில் நான் அவளைத்தான் பார்த்தேனா? அல்லது அவளை இழந்த ஏக்கத்தில் என் புத்தி பேதலித்து இப்படியெல்லாம் நிலை தடுமாறி அலைந்து கொண்டிருக்கிறேனா?'

நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்த அவன் அந்தப் புதர் அருகில் போய் நின்று தன் பார்வையை மேலுயர்த்தி

ஆகஸ்டு

# 30

முதல்

சென்னை பாரகன் · பாரத்
மகாலட்சுமி · சீனிவாசா
மற்றும் தென்னுடெங்கும்



G. N. வேலுமணி
அளிக்கும்
சரவண பிக்சர்ஸ்



# இது சத்தியம்



டைரக்ஷன் · K. சங்கர்

கதை ராகி ரங்கராஜன் · திரைக்கதை, வசனம் மா. லக்ஷ்மணன் · பாடல்கள் கவிஞர் கண்ணதாசன் · சங்கீதம் விஸ்வநாதன்-ராமமூர்த்தி · தம்பு · ராஜு · ஸாரதி · நெப்டியூன்

ELEGANT

ளுன். அங்கே இன்னொரு வியப்பு அவனுக்காகக் காத்திருந்தது.

ஆமாம்; சற்றுமுன் உத்தமசீலி ஓடி வந்து மறைந்த அந்தப் புதர் வெறும் புதராக இல்லை. அது ஒரு சிறிய ஆசிரமக் குடிலாகக் காட்சியளித்தது! சுற்றிலும் செடி கொடிகள் சுவர்போல் அடர்த்தியாக வளர்ந்து கவிந்திருக்க, அப்புதரின் மேற்பரப்பையே கூரையாக்கி அதன் உட்புறக் குடையில் மூங்கிற் பத்தைகளை வேய்ந்து ஓர் அழகிய குடிலாக அது அமைக்கப் பெற்றிருந்தது. அந்தக் குடிலின் முகப்பு வாயில் ஆற்றின் நீர்க் கரையை நோக்கி இருக்க, அதன் உள்ளும் புறமும் அலங்கார வைப்பு முறையில் காட்டுச் செடிகொடிகளின் வர்ண வாரியான பூக்களும், வகை வகையான கனிகளும் இயற்கையாகப் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன.

இப்படி வனதேவதையின் சிருங்கார கிருகம் போல் விளங்கிய அந்தப் பச்சைப் புதர்க் குடிலையே வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் இனம் புரியாத ஒரு நடுக்கத்துடனும், தன்னை மீறிய ஒரு துணிவுடனும் தயங்கித் தயங்கி நடந்து போய்ச் சாத்தியிருந்த மூங்கில் கதவை மெல்லத் தள்ளித் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தான்.

அங்கே, சிறுபொழுதுக்குமுன் பார்த்த கோலத்துக்கு முற்றிலும் புதிதான ஆடை அணிகள் புனைந்து, கையிலொரு ஆதொண்டை மலர் மாலையுடன் அப்ராக்ருத சௌந்தர்யவதியாய் நின்று கொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி!

வியப்பின் எல்லை கடந்து, அதற்கு அப்பாலும் அப்பாலும் போய்விட்ட பரமேசுவரவர்மன் இமைக்கும் சக்தியை இழந்தவனாய், அவளையே பார்த்துக் கொண்டு சிலையாகச் சமைந்து நின்ளுன்:

''வீரமாப் பல்லவப் பேரரசர் அவர்களுக்கு என் இதய அஞ்சலிகளைச் சமர்ப்பித்து வெற்றி வாழ்த்துக் கூறி வரவேற்கிறேன்! வாருங்கள் அரசே!''—தேனின் சுவை செறிந்த தீங்குரலில் இவ்வாறு மொழிந்து கொண்டே கன்னல் ரசப் புன்முறுவல் பூத்தவளாய், ஒண் பொற் சிலையென ஒல்கி ஒசிந்து நடந்து வந்த உத்தமசீலி, தன் எதிரே நீலவண்ணமாலவன் போல் ஓங்கி உயர்ந்து நின்ற தொண்டையர்க்கோன் பரமேசுவரவர்மனின் திண்ணிய கழுத்தில் நறுமணம் பிலிற்றும் ஆதொண்டை மலர் மாலையைச் சூட்டினுள்.

அடுத்த கணம், அவளது புஷ்பக் கொடியுடல் அவனுடைய பரந்த மார்பிலே துவண்டு சாய்ந்து இணைந்து கரைந்தது!

### அத்தியாயம் நான்கு

## ஜீவ பிரசாதம்

''இளவரசி! நான் காண்பது, கேட்பது, உணர்வது எல்லாம் கனவல்லவே?'' என்று உறக்கத்தில் உளறுபவனைப்போல் கேட்டுக் கொண்டே மெல்லப் பின்னுல் நகர்ந்தான் பரமேசுவரவர்மன்.

அவனது அணைப்பிலிருந்து நழுவிச் சற்றுத் தள்ளிப் போய்த் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்த உத்தமசீலி, அழகுப் புன்னகை பூத்தவளாய் அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்தாள்.

''ஆம், இளவரசி! நீ ஜீவதசையில் தான் இருக்கிறுய் என்று இன்னமும் என்னுல் நம்பவே முடியவில்லை!''—இறக்கச் சோர்வுடன் கரகரத்தான் பரமேசுவரவர்மன்.

மகிழ்ச்சியொளி படர்ந்திருந்த உத்தமசீலியின் வதனம் சட்டென்று வாடி வெளிறியது. துயரம் கப்பிய குரலில் சொன்னுள் அவள்: ''மன்னரவர்களின் மனத்தில் பதிந்த ஐயம் சரியானதே! சேதியக் கலேஞரின் இல்லத்தில் சிறைப்பட்ட நான் அந்தச் சளுக்கியச் சண்டாளர்களால் அங்கேயே சமாதியாக்கப்பட்டுத்தான் இருப்பேன். ஆனுல், விதி என்னை எப்படியோ காப்பாற்றிவிட்டது.''

அவளது அழகிய குவளை மலர்க் கண்கள் நீர்ப் போர்வையிட்டுப் பனித்தன. உள்ளார்ந்த விம்மலுடன் ஒரு கணம் மௌனமாயிருந்து விட்டு மேலும் கூறினுள்: ''உண்மைதான் பிரபு! அன்றைய தினம், தங்களை ஆந்திர நாட்டுக்கு அனுப்பி என் தந்தையாரிடம் படையுதவி பெற்றுத் தருவதற்காக ஏற்கனவே நான் எழுதி வைத்திருந்த ஓலையைச் சேதியக் கலேஞரின் இல்லத்திலிருந்து எடுத்து வர ஓடிய போதே எனது வாழ்நாள் முடியப் போகிற தென்பது எனக்கு நன்ருகத் தெரிந்து விட்டது. ஆயினும் என் இலட்சிய சித்திக்கான அந்த ஓலையைத் தங்களிடம் எப்படியும் கொடுத்து அனுப்பிவிட வேண்டும் என்ற ஒரே ஆவேசத்துடன், முன் வைத்த காலைப்



''மேலே ஏதோ சத்தம் கேட்கிறது. 'இந்த அர்த்தராத்திரியிலே நீ இறங்கி வரவேண்டாம்னு' என்னைச் சொல்லி விட்டு நீங்க வந்தீங்களே! இந்தப் பட்சணங்களையெல்லாம் "ஸ்வாஹா" செய்யத்தானா?''

பின் வாங்காமல் — தங்களது அன்புக் கட்டளையையும் மீறி — அந்த இல்லத்துக்கு ஓடினேன். அதிர்ஷ்டவசமாக அங்கு என் சிவிகைதூக்கி நாகோதரன் வந்திருந்ததால் அவனிடம் அவ்வோலையைக் கொடுத்துத் தங்கள் வசம் அளிக்கும்படி கட்டளையிட்டேன். பிறகுதான் என்னைச் சூழ்ந்து வந்திருக்கும் ஆபத்தை என்னால் உணர முடிந்தது. எந்த வகையிலும் நான் தப்பிச் செல்ல முடியாதவாறு நாலாபுறமும் விரைந்து வந்த சளுக்கிய வீரர்கள் அந்த இல்லத்தை வளைத்துக் கொண்டார்கள். அவர்களிடம் சிறைப்பட்டு, என் பெரிய தந்தையான விக்கிரமாதித்தரின் முன்னே குற்றவாளியாகப் போய் நிற்பதைவிடத் தற்கொலை செய்து கொண்டு சாவதே மேல் என்ற முடிவுக்கு வந்தேன். அத்துடன், என்னையறியாமலே என் மனத்தில் ஓர் அற்ப ஆசை தோன்றியது. அதாவது, அந்த இல்லத்தில் தங்களை நான் முதன் முதலாகச் சந்தித்த பூசை அறைக்குப் போய்த் தங்களால் வணங்கப் பெற்ற சிவலிங்கத்துக்கு என் அன்புக் காணிக்கையாக ஒரு மலரை அர்ப்பணித்து விட்டுப் பிறகு அதே அறையில் என் உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசைதான் அது. அவ்வாறே அந்த அறைக்குள் ஓடிக் கதவைச் சாத்திக் கொண்டு, அங்கு வதங்கிச் சருகாகிக் கிடந்த ஒரு கடுக்கை மலர்க் கொத்தை எடுத்துத் தங்களது தெய்வத் திருச் சந்நிதி முன் சாற்றி விட்டுக் கதறி அழுதேன். இதற்குள் சளுக்கிய வீரர்கள் திமுதிமுவென உட்புகுந்து ஓடி வரும் ஓசை கேட்டது. மரண பயம் கொண்டவளாய் அங்குமிங்குமாக ஓடிய நான், அவ்வறையின் ஒரு மூலையில் நிறுத்தி வைக்கப் பெற்றிருந்த பாவை விளக்குப் பதுமை ஒன்றின் மேல் போய்ப் பலமாக மோதிக் கொண்டேன். அதனால் அந்தச் சிலை மேலே சாய, அங்கு ஓர் இரகசிய வாயில் இருக்கக் கண்டு வியப்புற்றேன். சிந்திக்கும் திறனை இழந்து நின்ற நான், என்னையறியாமலே அந்த இரகசிய வாயிலின் படிகளில் இறங்கி நடக்கலானேன். சிறிது தூரம் சென்ற பிறகுதான் அது ஒரு நிலவறை என்பது எனக்குப் புலனாகியது. காரிருள் கப்பிக் கிடந்த அந்த நிலவறையின் ஏதோ ஒரு பகுதிக்குச் சென்று திரும்பிப் பார்த்தபோது, நான் இறங்கி வந்த வாயிற்படி எங்கிருக்கிறதென்றே என்னால் அறிய முடியாமற் போய் விட்டது. எங்கும் ஒரே இருள் மயம். கால் வைத்த இடமெல்லாம் ஏதேதோ பொருட்கள் தட்டுப்பட்டு அவற்றின் மீது முட்டி மோதிக் கொண்டேன். கையால் தடவிப் பார்த்த போது அவை யுத்தக் கருவிகள் என்பது புரிந்தது. ஆனால், அந்தக் கருவிகள் அங்கு ஏன் குவிக்கப் பெற்றிருக்கின்றன என்னும் விவரத்தை அப்போது என்னால் அநுமானிக்க முடியவில்லை. வெள்ளத்துக்குப் பயந்து ஓடி வந்து புயலில் சிக்கிக் கொண்டாற்போல் அந்த இருட் குகைபோன்ற நிலவறையில் அகப்பட்டுக் கொண்ட நான் அலறித் துடித்தேன்; கதறிப் புலம்பினேன். இறுதியில் என் மனத்தை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு மரணத்தை அமைதியாக எதிர் நோக்க ஆரம்பித்தேன். எத்தனை இரவு, எத்தனை பகல் கழிந்தன என்பதும் எனக்குத் தெரியாது. மரணம் என்னை அணுஅணுவாக நெருங்கிக் கொண்டிருந்தது. அதுவும் போதாதென்று அந்த நிலவறைக்கு மேலே ஏதோ பூகம்ப நிகழ்ச்சி நடைபெறுவது போன்ற பயங்கர ஒலிகள் கேட்கலாயின. என்னைச் சிறைப் பிடிக்க முடியாமல் ஏமாந்த சளுக்கிய வீரர்கள் அந்த இல்லத்தையே இடித்துத் தகர்க்கிறார்கள் என்பதைப் புரிந்துகொண்டேன். நிலவறையின் மேல் தளம் எந்த விநாடியும் என்மீது சரிந்து விழும் போல் தோன்றியது. அளவுக்கு மீறிய பயத்தால் எனது பிரக்ஞை சிறிது சிறிதாக மெலிந்து தேய ஆரம்பித்தது. ஏதோ ஒன்றின்மேல் துவண்டு சாய்ந்தேன். மறுகணம், பூமியை விட்டு எங்கோ நழுவி, எதன் மீதோ படுத்துப் பறந்து செல்வது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. வெகு நேரத்துக்

குப் பின் கண் திறந்து பார்த்தேன். என்னையே என்னால் நம்ப முடியவில்லை. ஏனென்றால், இந்தப் புதரின் அருகே நான் படுத்துக் கிடக்க, என் எதிரில் கண் கலங்கி அமர்ந்திருந்தார் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர். அவர்தான் அந்த நிலவறையிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொண்டு வந்தார் என்ற விவரத்தைப் பிறகு தெரிந்து கொண்டேன். எனக்குச் சுய பிரக்ஞை ஏற்பட்டு எழுந்து உட்கார்ந்தபோது நான் கண்ட காட்சி, அது வரையில் அநுபவித்த அத்தனை பயங்கரத் துன்பங்களையும் துடைத்து எறிந்து விட்டது. ஆமாம், அரசே! தங்கள் தலைமையில் கடல் போல் திரண்டு வந்த ஆந்திரப் படைகளைப் பார்த்துத்தான் அப்படிப் பூரித்துப் போனேன். அன்றிலிருந்து இன்றுவரை நானும் எனது ஞானத் தந்தையாரான சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் இந்தப் புதர்க் குடிலில்தான் தங்கியிருந்து வருகிறோம்.''

இவ்வாறு அவள் சொன்ன விவரங்களைக் கேட்டு நெஞ்சம் குமுறித் துடித்த பரமேசுவரவர்மன், அன்பாவேசத்தோடு பாய்ந்து போய் அவளை அப்படியே அணைத்துச் சேர்த்துக்கொண்டு, ''என் பொருட்டு நீ எவ்வளவு துன்பங்களை அநுபவித்து விட்டாய், கண்ணே!'' என்று உணர்ச்சி விம்மலுடன் கூறிக் கண்ணீர் வடித்தான். அவனுடைய கண்ணீரில் நனைந்து நின்ற உத்தமசீலியோ சொர்க்க சுகானந்த அமுதக் கடலில் நீந்துபவள் போல் உள்ளம் பூரித்துக் குதூகலித்தாள்.

சிறு பொழுதுக்குப்பின் ஏதோ நினைவு வரப் பெற்றவனாய் நிமிர்ந்து, ''அது சரி, இளவரசி! நமது சேதியக் கலைஞர் எங்கே?'' என்று அவசரமாக வினவினான் பரமேசுவரவர்மன்.

''என்னைப் பற்றிய தகவலைத் தங்களிடம் தெரிவிப்பதற்காக இன்று காலை புறப்பட்டுச் சென்றார்; இன்னமும் திரும்பி வரவில்லை'' என்று இதமாகப் பதிலிறுத்தாள் உத்தமசீலி.

அனற் புயல் வீசிக் கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் மனம் ஆழ்ந்த அமைதி பெற்றுக் குளிர்ந்தது. நீண்ட காலத்துக்குப் பின் இன்றுதான் அவன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டு, சுந்தரக் கலை வழியப் புன்னகை பூத்தான்.

கோமேதக வண்ணத் தண்மதியாள் கோலப் பொற்றாழி வடிவாய்க் குணதிசை வானச் சாளரத்தைத் திறந்து கொண்டு வெளியே எட்டிப் பார்க்கத் தொடங்கிய மோகன இரவின் மூன்றும் சாம வேளை.



அன்று நிறைமதி நன்னாள். அந்த முழு நிலவின் தண்ணொளியிலே விரிந்து கிடந்த சிற்றாற்றங்கரையும், அதன் மருங்கே அமைந்த பச்சைப் புதர்க் குடிலும் பிரம்ம ஓவியன் வரைந்த வழிபாட்டுச் சித்திரங்கள்போல் காட்சியளித்துக் கொண்டிருந்தன.

சீதளக் காற்றின் சிலுசிலுப்பு; சிற்றாற்றின் கலகலப்பு; புள்ளினங்களின் காதல் முணுமுணுப்பு — இவை தவிர அந்தப் பிரதேசமெங்கும் ஆழ்ந்த அமைதியே பூத்துக் கிடந்தது.

இப்படி அமைதி கூடி வளர்ந்து சென்ற அந்த இரவின் மாசுபடா எழிலைத் தன் மெல்லிய புலன்களால் ஸ்பரிசித்து ரசித்தவாறு ஆற்றின் மணற் சரிவில் படுத்திருந்தான் பல்லவ மாமன்னன் பரமேசுவரவர்மன். தனக்குச் சொந்தமான மண்ணில் — அதன் சகல உரிமைகளோடும்—தன் உடலைச் சாய்த்

துப் படுத்துக்கிடப்பது அவனுக்கு எல்லையற்ற பேரானந்தமாக இருந்தது. அத்துடன், அவன் மனத்திலே வேறு பல எண்ணங்களும் சுழித்தெழுந்து நுரைத்துப் பொங்கிக் கொண்டிருந்தன. இன்னும் இரண்டொரு தினங்களில் அவன் காஞ்சி மாநகர் அரண்மனைக்குள் பிரவேசிக்கப் போவது, அங்கே அவனுக்கு வீராபிஷேக முடிசூட்டு விழா நடக்கப் போவது, அதன் பின் அவனது அன்னையுடையவும், தம்பியுடையவும், நண்பர்களுடையவும், நாட்டு மக்களுடையவும் அநுமதி பெற்று ஆந்திர இளவரசி உத்தமசீலியைத் தன் அன்பு மனையாளாகவும், பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டத்தரசியாகவும் ஆக்கிக் கொள்ளப் போவது — முதலான இனிய நிகழ்ச்சிகளை அவன் மனம் இப்போது கற்பனை செய்து பார்த்துக் களிப்பெய்தியது.

அவனுடைய இந்த இன்பக் கனவுகளின் மூலக்கருவான உத்தமசீலியெங்கே?

நீல வான் சரிவிலிருந்து விரைந்து மேலேறிக் கொண்டிருந்த வெள்ளி நிலவையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் வலப்புறமாக மெல்லப் புரளவே, 'ஹா' என்று குயில் அகவுவது போன்ற இனிய மென்குரல் கேட்டுத் திடுக்குற்று எழுந்து உட்கார்ந்து திரும்பினான். அங்கே, அவனது தலை மாட்டில் சந்தனப்பதுமை போல் அமர்ந்திருந்தாள் உத்தமசீலி.

''இளவரசி! இன்னமும் நீ உறங்கப் போக வில்லையா?''

''மன்னரவர்களை இங்கே தனியாக விட்டு விட்டு நான் மட்டும் எப்படி உறங்கப் போவேன்?''

''இளவரசி! உன் பவழ வாயிலிருந்து வெளி வரும் ஒவ்வொரு சொல்லும் எனது நெஞ்ச மலரிலே தேன் துளியாக இறங்கித் தித்திக்கிறதே, ஏன்?''

''தேன் என்ற சொல்லைத்தான் நான் கேள்விப்பட்டிருக்கிறேனே தவிர, அதைச் சுவைத்து அறியேன் பிரபு!'' என்றாள் உத்தமசீலி நாணத்துடன்.

''ஓ.....சமணர்கள் தேன் அருந்துவதில்லை என்பதை எனக்குச் சொல்லாமல் சொல்லிக் காட்டுகிறாயோ?.... சரி; உன்னுடைய ஒளி பொருந்திய நீலக் கண்களைச் சந்திக்கும் போதெல்லாம், அமுதக் கடலில் நீந்துவது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறதே ஏன்?''

''முழங்கால் அளவுக்கு அதிக ஆழமான எந்த நீர் நிலையிலும் நான் இறங்கி நீராடிப் பழக்கமில்லையாதலால், மன்னரவர்களின் இந்தக் கேள்விக்கும் என்னிடமிருந்து விடை வருவது சிரமமே!''

அவளுடைய இந்தத் தூய ஒழுக்க நெறிப் பேச்சைக் கேட்ட மாத்திரத்தில் ஏற்கனவே அவன் மனத்தில் பதிந்திருந்த அவளது எழில் வடிவம் வானுக்கும் பூமிக்குமாக வளர்ந்தோங்கி வேர் விட்டு விசாலித்து அவனையே அதனுள் ஐக்கியப்படுத்திக் கொண்டாற் போன்ற உணர்ச்சியால் திக்கித் திணறினான். பிறகு தழுதழுத்த குரலில், ''என் இதயப் பேரரசி! உனது தெய்வீக அன்பிலே திளைக்கக் கொடுத்து வைத்த நானே பாக்கியசாலி!'' என்றான்.

''என் ஜீவனின் ஜீவ ஊற்றாக விளங்கும் தங்களது இமயப் பேரன்புக்கு, எளியவளான நான் பாத்திரமானது என்னுடைய ஏழேழு கோடிப் பிறவிகளின் தவப் பயனே என்று எண்ணிப் பூரிக்கிறேன், பிரபு!'' என்று கூறிய உத்தமசீலி, தன்னை மறந்த ஒரு தளர்ச்சியால் துவண்டு வளைந்து அவனது மடியிலே போய்க் கொடியெனச் சாய்ந்தாள்.

விண்ணின் விதானத்துக்கு ஏறி வந்த வெண்ணிலா தன் பால் போன்ற ஒளியை அமிர்தவர்ஷமாகப் பொழிந்தது. சீதளப் பாங்குடன் சில்லென வீசிய இளங்காற்றில் புத்தம் புது மலர்களின் பரிமள கந்தம் செறிந்து கனத்தது. ரதி வர்ணச் சிற்றாறு சங்கீதச் சிரிப்புடன் விரைந்தோடியது.

பிரக்ஞை இழந்தவள் போல் தன் மடியில் சாய்ந்து கிடந்த உத்தமசீலியின் பனி மலர் வதனத்தையே வைத்த விழி வாங்காமல் வாஞ்சை பொங்க நோக்கினான் பரமேசுவரவர்மன். அவளது செவ்விய அதரங்களும், கூம்பிய விழிச் சிமிழ்களும் மிக மென்மையாகத் துடித்துக் கொண்டிருந்தன. ஆனந்த மிகுதியால் அவனுடைய கண்களிலிருந்து உருண்டு திரண்ட இரு சொட்டு நீர் அவளது கொவ்வைக் கனி வாயில் உதிர்ந்து தெறித்தன. அவளால் அவனுக்கு அணிவிக்கப் பெற்ற ஆதொண்டை மலர் மாலையைக் கழற்றி, அவளின் சங்கு நிறக் கழுத்தில் சூடிய அவன், அவளுடைய கனியதரங்களை நோக்கி மெல்லக் குனிந்தான். அவனது கண்ணிதழ்கள் அவளின் நயனங்களோடு ஒன்றின.

சில்லெனத் தவழ்ந்து கொண்டிருந்த காற்று திடுமெனப் புயலாகச் சீறிச் சுழன்று வீசி, தேன் சுமந்த கன்னிப் பூக்களையெல்லாம் மண்ணில் உதிர்த்து விட்டு மறைந்தது. தெள்ளிய வானக் கடலில் ஒளி வீசி நடந்துகொண்டிருந்த நிலவுப் பெண் ஏனோ கருமுகில் போர்வைக்குள் ஓடி மறைந்தாள்.

அவ்விருவரது வாழ்க்கையிலும் வந்து போன பல்லாயிர இரவுகளுக்குப் பின், அன்று வந்த இரவு, ஒரு மகா இரவாகிப் புனிதம் பெற்றது! (தொடரும்)

பாத்திரங்கள்:

கருணாகரன்: 'கருணாம்பிகா' கல்லூரியின் பிரின்ஸிபல்.

மருதாசலம்பிள்ளை: பள்ளி ஆசிரியர்.

சுந்தரம்: மருதாசலத்தின் புதல்வன்.

மனோகரி: கருணாகரத்தின் மகள்; சுந்தரத்தின் காதலி.

### காட்சி 1

[கடற்கரை மணலில் சுந்தரமும் மனோகரியும் அமர்ந்திருக்கின்றனர்.]

சுந்தரம்: கண்ணே! அதோ அந்தச் சந்திரனைப் பார், எத்தனை இன்பத்தோடு காட்சி யளிக்கிறான்!



# காதலுக்குப் பின்...!

எஸ். சீனிவாசன்

மனோகரி: ஊஹும்! வாரத்துக்கு ஏழு நாளும் இந்த வானத்தையே பேசிக்கிட்டே இருங்க.....!

சுந்தரம்: வேறு என்ன செய்யச் சொல்றாய், கண்ணே ?

மனோகரி: இதோ பாருங்களேன்! வாரத்துக்கு ஏழு நாளும் ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் காதல் காதல்னு இப்படியே காலத்தைத் தள்ளிக்கிட்டே போறோமே, காதலுக்கு அப்புறம் என்ன செய்யணும்னு கொஞ்சமாவது யோசிச்சிங்களா ?

கந்: காதலுக்கப்புறம் என்ன செய்யணும்?

மனோ: ஊஹும்... என்னையே கேட்கிறீங்களா? கடமை உணர்ச்சி கொண்ட ஒவ்வொருத்தனும் காதலுக்குப் பிறகு என்ன செய்வாங்க, தெரியுமா? கல்யாணத்தைப் பண்ணித் தொலைப்பாங்க!

கந்: மனோ, ஏன் கோவிச்சுக்கிறே? நான் கல்யாணத்தைப் பண்ணிக் கொள்ளத் தயார் தான். ஆனால் உங்கப்பா இருக்கிறாரே ?

மனோ: 'அப்பா அப்பா'ன்னு இப்படியே உட்கார்ந்துகிட்டு இருந்தால் காரியம் நடந்து விடுமா ?

கந்: பின்னே, என்ன செய்யணும்? நீதான் கொஞ்சம் சொல்லேன்!

மனோ: என்கிட்டேயே கேட்கிறீங்களா? ஊம், சரி, சொல்றேன், நல்லா கேட்டுக்குங்க. நேரே எங்கப்பாகிட்டே வந்து 'நான் உங்க பொண்ணைக் கல்யாணம் கட்டிக்கப் போறேன், என்ன சொல்றீங்க'ன்னு கேளுங்க?

கந்: சரிங்க !

மனோ: அப்புறம் அவர் சொல்ற முடிவைப் பொறுத்திருக்குது நம்முடைய கல்யாணம்.

கந்: அவர் சம்மதிக்கலேன்னு? ஊரை விட்டு ஓடிடலாமா?

மனோ: சே! சே! இந்த ஊரை விட்டு ஓடற புத்தி நமக்கு வேணும்.... அப்பாடி அப்பா நம்ம கலியாணத்துக்குச் சம்மதிக்கலேன்னு 'ரூனா'யிருக்கல்ல' ரூனா....

கந்: ரூனாயா, அது எங்கேயிருக்கு?

மனோ: இதுகூடவா தெரியலே.... நாலுந் தெரு மூலையில் இருக்குதே அந்தச் 'ரூனா' மூலையில் இருக்கிற பிள்ளையார் கோவிலில் நீங்க எனக்கு 'மாலை' போடுவீங்களாம்!

கந்: சரியான ஐடியா, மனோ! சரி, நேர மாவுது, அப்புறம் நாம் எப்ப சந்திக்கலாம்?

மனோ: நாளைக்கு 'சண்டே'... வேணும்?

கந்: ஏன் 'சண்டே' வேணுங்கிறே?

மனோ: பள்ளியெல்லாம் ஒரே கூட்டமாயிருக்குமே !

கந்: சரி, அப்படீன்னு, நம்முடைய காதல் பாடத்துக்கு நாளைக்கு 'லீவு'.... அப்படித் தானே ?

மனோ: ஆமாம்!

கந்: சரி, போவோமா?

மனோ: ஓ. எஸ்! (இருவரும் செல்கின்றனர் — காட்சி மாற்றம்)

### காட்சி 2

[தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு வெளியே செல்ல ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறான் சுந்தரம். அப்பொழுது அங்கு வருகிறார் சுந்தரத்தின் தந்தை மருதாசலம் பிள்ளை.]

மருதாசலம் பிள்ளை: டேய் எங்கேடா போறே?

சுந்தரம்: போச்சு, போங்க எல்லாமே போச்சு! போகும் போது கூப்பிடுறீங்களே?

மருதா: என்னடா என்னமோ? எங்கேயோ கல்யாண விஷயத்தைப் பத்திப் பேசப் போகிறப் போலல்ல நினைச்சுப் பதர்றே!

சுந்: அப்பா! நெஜமாகவே நான் கல்யாண விஷயத்தைப் பத்தித்தான் பேசப் போறேன்.

மருதா: அடி சக்கைகரிஷ்ணும்! அப்படி என்னடா அப்பனுக்குத் தெரியாம கல்யாண விசயம்...?



சுந்: நான் ஒரு பெண்ணைக் காதலிச்சேன்!

மருதா: நீயும் காதலிக்கிறியா?

சுந்: ஏம்பா, நான் காதலிக்கக் கூடாதா? எனக்கு எதில்லே? அழகில்லையா? அந்தஸ்து இல்லையா ?

மருதா: அதுக்கில்லேடா? நான் பெத்த பிள்ளையைக் காதலிக்கிறவங்களும் இந்த உலகத்தில் இருக்கிறாங்களான்னுதான் கேட்கிறேன்?.... ஆமாம், உன்னைக் காதலிச்ச அந்த அபாக்கியவதி யாருன்னு தெரிஞ்சுக்கலாமா?

சுந்: பேஷா!.... நம்ம 'கருணாம்பிகா' கல்லூரியின் பிரின்ஸிபாலோடு பெண் மனோகரியைத்தான் நான் காதலிச்சது !

மருதா: ஆ !

சுந்: என்னப்பா? இருபத்திரண்டு காரட்டு தங்கத்தை மீண்டும் அழகுக்கு எடுத்துக்கிட்டு வந்தா எப்படிப் பொறுத்துக்கொள்வீங்க அதிர்ச்சி அடைவாங்களோ அந்த மாதிரியில்லே இருக்கு உங்க அதிர்ச்சி.

மருதா: டேய்! ஏமாந்த சோணகிரி! நீ அவளைக் காதலிக்கிறதுக்கு நான் தடையாய் இருக்கப் போகிறதில்லே. ஆனால் நீ அவளைக் கல்யாணம் பண்ணிக்க முடியாதுடா!

சுந்: என்னப்பா சொல்றீங்க?

மருதா: ஆமான்டா, நீ அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதாயிருந்தால் முன்னாடியே 'அப்ளிகேஷன் பாரம்' போட்டிருக்க வேண்டும்!

சுந்: என்னப்பா, சொல்றீங்க! இது என்ன பள்ளிக்கூடமா, இல்லே கல்லூரியா, 'அப்ளிகேஷன் பாரம்' போடுவதற்கு ?

மருதா: டேய்! என்னையே நீ மடக்கிறியா? மூத்தா நான் வந்த பேப்பரைப் பார்! (மூலையில் கிடந்த பழைய பேப்பரை எடுத்து அவனிடம் நீட்டுகிறார். அதில் முதல் பக்கத்தில் ஒரு மூலையில் ஒரு சின்ன விளம்பரம் தென்படுகிறது. அதைச் சுந்தரம் படிக்கிறான்.)

''இருபது வயது பூர்த்தியாகியுள்ள எனது மகள் மனோகரியை மணக்க விரும்பும் படித்துப் பட்டம் பெற்ற ஆடவர்கள் எனது வீட்டில் இருக்கும் ஆபீஸிலிருந்து 'விண்ணப்பத் தாள்'களை ஐம்பது நயா பைசா கொடுத்துப் பெற்றுச் சென்று அதைப் பூர்த்தி செய்து 7—8—1963க்குள் எம்மிடம் வந்து சேருமாறு அனுப்பிவிட வேண்டும். தேர்ந்தெடுக்கும் நபர்களை 'இன்டர்வியூவுக்கு' அழைப்பு அனுப்பி அதில் தேர்ந்தெடுக்கும் ஒருவருக்கு எனது மகள் மாலையிடுவாள். விண்ணப்பத் தாள்களை அனுப்ப வேண்டிய முகவரி :

பிரின்ஸிபால், கருணாம்பிகா கல்லூரி
கணேசன் தெரு, சென்னை-6

மருதா: இதைப் பத்தி அந்தப் பொண்ணு உன்கிட்டே சொல்லலையா?

சுந்: இல்லையே!....அப்பா இன்னைக்கே அந்தப் பாரத்தை வாங்கி வந்து பூர்த்திசெய்து அனுப்பணும்.

மருதா: டேய், இன்னைக்குத் தேதி என்ன தெரியுமா? பத்துடா பத்து!

சுந்: அப்படின்னு முடிஞ்சு போச்சா?

மருதா: ஆமாடா, ஆமாம்!

சுந்: அப்ப வேறே வழியில்லையா?

மருதா: ஏன் இல்லே?.... அவரோட பியூன் பொன்னுப் பிள்ளையை எனக்கு நல்லாத் தெரியும். அவனைப் பிடிச்சா ஒரு வேளை காரியம் வெற்றி ஆனாலும் ஆகலாம் !

சுந்: எப்படியோ அப்பா, அப்ளிகேஷன் பாரம் வாங்கிக்கிட்டு வரவேண்டிய பொறுப்பு இனி மேல் உங்களுடையது!

மருதா: சரி! நான் இதோ இப்பவே புறப்படறேன். (புறப்படுகிறார்)

(காட்சி மாற்றம்)

## காட்சி 3

[பியூன் பொன்னுபிள்ளை சிகரெட் பிடித்துக் கொண்டிருக்கிறான். அப்போது அங்கு மருதாசலம் பிள்ளை வருவதைக் கண்டதும் அதை அணைத்துக் காதில் செருகி எழுந்து நிற்கிறான்.]

பொன்னுபிள்ளை: வாங்க வாத்தியாரே!

## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(ரிஜிஸ்டர்டு)

"விஜய விஹார்", 17-A, சயான் - மாதுங்கா எஸ்டேட்

(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

Post Bag No. 6759 பம்பாய் - 22 தந்தி: "GROWRICH"

போன் 471458

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1963 செப்டம்பர் மாத ஸீரீஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 7-9-1963 ... முதல் ஏலத் தேதி 8-9-1963

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | F | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | J | ரூ. 10/- | ரூ. 250/- |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 7-9-1963 ... முதல் ஏலத் தேதி 8-9-1963

60 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| C | ரூ. 200/- | ரூ. 10,000/- | ரூ. 1,000/- |
| A | ரூ. 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை. மாலை 4 முதல் 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ்: மதராஸ் - 5

இதர கிளைகள்:
1. 70, முதல் மாடி, 5வது மெயின் ரோடு, ஸ்ரீனிவாச பில்டிங், காந்தி நகர், பெங்களூர் - 9
2. "கான்ஸன் ஹவுஸ்", 1/24, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1
3. 4/73, ஒருன்னு மார்க்கெட் W. E. A., கரோல்பாக், புது டில்லி - 5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3
5. 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

மருதாசலம் பிள்ளை: ஆமாம், உங்க எசமான் இருக்காரா?

பொன்னு: உம்...அவர் காலேஜுக்குப் போய் இரண்டு மணி நேரம் ஆவுதே!

மருதா: சரி, அது இருக்கட்டும். எனக்கு ஒரு அப்ளிகேஷன் பாரம் வேணுமே?

பொன்னு: எதுக்குங்க? காலேஜில் படிக்கிறதுக்கா?

மருதா: இல்லேப்பா.... என்னமோ கல்யாண அப்ளிகேஷனுமே?

பொன்னு: ஓகோ! அதுங்களா? அது தான் எப்பவோ முடிஞ்சு போச்சுங்களே!

மருதா: எப்படியாவது கொஞ்சம்பாரேன்!

பொன்னு: உம்.... சரி, கையிலே ஏதாச்சும் துட்டு கிட்டு இருக்குதுங்களா?

மருதா: ஏம்பா?

பொன்னு: ஒண்ணுமில்லே... அப்ளிகேஷனுக்கு எட்டணா, எனக்கும் ஏதாச்சம்...

மருதா: ஓகோ! லஞ்சமா?

பொன்னு: ஐயய்யோ! லஞ்சம்னு சொல்லி விடாதீங்க. அப்புறம் நானும் என் சின்னப் பதவியை விட்டுட வேண்டி வரும். ஏதோ 'பரிசு'ன்னு கொடுங்களேன்.

மருதாசலம் (சிரித்துக் கொண்டே): சரி, சரி. முதல்லே பாரத்தை எடுத்துக்கிட்டு வந்து கொடு. (பியூன் உள்ளே சென்று, சிறிது நேரத்தில் பாரத்துடன் மருதாசலத்திடம் வந்து அதை அவரிடம் கொடுக்க, அவர் அவனுக்கு 'இனும்' என்ற முறையில் பணம் கொடுத்து விட்டு 'அப்ளிகேஷன்' பாரத்தை ஒரு முறை நோட்டம் விடுகிறார்:)

---

கலியாண 'அப்ளிகேஷன் பாரம்'

பெயர்.......................

விலாசம்.......................

வயது.......................

தந்தை பெயர்................

காதலில் பழக்கம் உண்டா?

(எத்தனை முறை) .......

காதலில் தோல்வியடைந்துள்ளீரா?

(எத்தனை முறை) ..........

கையொப்பம்

...............

---

## காட்சி 4

[சுந்தரமும் மருதாசலம் பிள்ளையும் வீட்டின் முன்புறத்துத் தாழ்வாரத்தில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருக்கின்றனர்.]

சுந்தரம்: என்னப்பா இது? பதினைந்தாம் தேதி போட்ட அப்ளிகேஷனைப் பத்தி ஒரு தகவலும் தெரியலியே?.... ஆமாம், நான் பூர்த்தி செய்து கொடுத்த 'பாரத்தை' அப்புறம் என்ன பண்ணினீங்க?

மருதா: அடேய், என்னை என்ன படிக்காத முட்டாளென்று நினைச்சுக்கிட்டே? அந்தப் பாரத்தை ரிஜிஸ்தர் பண்ணி அதோட ரசீதையும் வைச்சுக்கிட்டு இருக்கேன் பாரு!

[ரசீது ஒன்றை அவன் முன் எடுத்துப் போடுகிறார்.]

சுந்: பின் என்னதான் ஆச்சு?

[அப்பொழுது அங்கு வந்த தபால்காரர் ஒரு கடிதத்தைச் சுந்தரத்திடம் கொடுத்து விட்டுச் செல்கிறார்.]



மருதாசலம்: என்னடா அது?

சுந்தரம் (பிரித்துப் பார்த்து): 'இன்டர்வியூ'வுக்கு வரச் சொல்லி எழுதியிருக்காங்க:

மருதா: எப்ப வரச் சொல்லி எழுதியிருக்காங்க?

சுந்: பதினாறும் தேதி காலே பத்துமணிக்கு!

மருதா: அப்படியா?.... அப்போ நாளைக்குத்தானே பதினாறு.... மறந்திடாதே...; நல்லா 'டிரஸ்' பண்ணிக்கிட்டுப் போ!

சுந்: சரிப்பா!

(காட்சி மாற்றம்)

## காட்சி 5

[பதினாறும் தேதி காலே. ஒவ்வொருவராகக் கருணாகரத்தின் அறைக்குள் நுழைகின்றனர்.]

கருணு: அப்புறம், அடுத்த ஆசாமி....!

(ஒரு நெட்டையான ஆசாமி நுழைகிறார்)

கருணு: உங்க பேரென்ன?

ஆசாமி: சோமநாதன் என்று என்னை அழைப்பார்கள்.

கருணு: ஓகோ, நீர்தான் அந்த ஆசாமியா? ஆமாம். இதுக்கு முன்னடி யாரையாவது காதலிக்க இருக்கீங்களா?

சோம: ஒன்ரு, இரண்டா? ஏராளம்!

கருணு: ஐயய்யோ !

சோம: ஏன் நிகைக்கிறீர்?.... நான் காதலித்தது தமிழில் உள்ள பல்லாயிரக்கணக்கான தேன் போன்ற நூல்களை!

கருணு: நான் கேட்டது பெண்கள் யாரையாவது காதலித்திருக்கிறீரா என்றுதான்!

சோம: அந்த மாதிரியான கெட்ட குணங்கள் என்னிடம் சிறிதேனும் காணப்படாது. 'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்' என்று என் மனைவியொருத்தி வீட்டில் இருக்கிறாள்.

கருணு: பின் எதுக்காக வந்தீங்க இங்கே!

சோம: 'கலியாண விண்ணப்பம்' என்று புதுமையான விளம்பரம் ஒன்றைப் பத்திரிகை யொன்றில் கண்டேன். ஆவல் மேலிட அவ் விண்ணப்பத்தாளினைப் பூர்த்தி செய்து அனுப்பினேன். நீரும் வரச் சொன்னீர். நானும் வந்தேன். ஏதோ ஒரு விதத்தில் பொழுது போக வேண்டுமல்லவா?

கருணு: ஐயா! இது பொழுதுபோக்குக்காகக் கட்டப்பட்டுள்ள விடல்ல. தயவு செய்து போய் வருகிறீரா?

சோம: மிகவும் நன்றி.

[சொல்லிவிட்டுச் சென்று மறைகிருர்]

கருணு: அடுத்தது....!

[ஒரு வாட்ட சாட்டமான நபர் அவ் வறையினுள் நுழைகிருர்.]

கருணு: உங்க பேரு என்னங்க?

நபர்: பீமலிங்கம்:

கருணு: ஆமாம், காதலில் ஏதாவது உங்களுக்கு அநுபவம் உண்டா?

பீமலிங்கம்: என் முகத்தைப் பாருங்க!

கருணு (பார்த்து விட்டு): என்னப்பா இது. இவ்வளவு வெட்டுக் காயங்க?

பீம: எல்லாமே காதல் பரிசு சார்!

கருணு: என்னது காதல் பரிசா?

பீம: ஆமாம் சார், ஆமாம்! 'கண்ணே' யென்று ஒரு பெண்ணிடம் நெருங்கினேன். தன் கையில் இருந்த 'கரண்டி'யை என் முகத்தில் வீசியெறிந்தாள்..... 'மானே' யென்று இன்னொருத்தியிடம் சென்றேன். மயிரைப் பிடித்து உலுக்கி உயிரை எடுத்து விட்டாள்.... இவை போதாதா நான் காதலில் அனுபவம் உள்ளவன் என்று நிரூபிக்க!

கருணு: அடேயப்பா! இவ்வளவு அநுபவம் உள்ள ஆள் நமக்குத் தேவையில்லே. தயவுசெய்து போய் வருகிறீர்களா?

[பீமலிங்கம் அங்கிருந்து சோகத்துடன் வெளியேறுகிருன்.]

கருணு: அடுத்த ஆள் வரலாம்!

(சுந்தரம் அங்கு வருகிருன்)

கருணு: ஓகோ! நீர்தான் அந்தக் கடைசி ஆளோ?

சுந்: ஆமாங்க!

கருணு: உன்னுடைய பெயர்?

சுந்: சுந்தரம் பி. எஸ்ஸி.

கருணு: படிப்பு?

சுந்: அதான் சொன்னேனே, சுந்தரம் பி. எஸ்ஸி.யென்று !

கருணு: காதலில் அநுபவம் ஏதாவது....?

சுந்: அது உமது மகளுக்கே தெரியும்.

கருணு: என்னது, என் மகளுக்கா?

சுந்: ஆம், அவள்தான் என் காதலி!

கருணு: இதை அவள் என்னிடம் சொல்லவே யில்லையே ?

சுந்: குறும்புக்காரி.... சொன்னல் எங்கே பேராசிரியர் நீங்கள் அவளுக்குப் பிரம்படி கொடுத்து விடுவீர்களோ யென்று பயந்து...

கருணு: நல்லா பேசுறியே!

சுந்: தங்களுக்கு இப்போதுதான் என் பேச்சின் அருமையும் வலிமையும் புரிகின்றன போலும்!

கருணு: சரி, 'காதல் காதல்'னு என் மகளைக் காதலிச்சியே அந்தக் 'காதல்' என்ருல் என்ன?

சுந்: அது கற்பூர வாசனே. அதனுல்தான் உங்களுக்குப் புரிய வில்லே.

கருணு: என்னே மறைமுகமாகத் தாக்கறியா ?

சுந்: ' ஊஹூம்... நீங்கள் காதலித்து இருந்தால் உங்களுக்குக் காதல் என்னவென்று புரிந்திருக்கும். ஆனல் நீங்கள் காதலிக்க வில்லே என்று நம்புகிறேன்.

கருணு: எனக்கு வீண்பேச்சு தேவையில்லே. 'காதல்' என்ருல் என்ன? அவ்வளவுதான்.

சுந்: காதல் என்பது ஒரு பந்து. அதை விளையாடுபவர்கள்தான் காதலனும் காதலியும். பந்து வலேயில் விழுவதென்பது காதலின் வெற்றி.... அதே பந்து வலேயிலிருந்து தப்பி வேறு எங்காவது விழுவதென்பது காதலின் தோல்வியைக் குறிக்கிறது.

கருணு: பேஷ்! நீங்க என் மகளைக் காதலித்தேன் என்கிறீர்களே, அவளிடம் நீங்க கண்ட ஒரு குணத்தைச் சொல்ல முடியுமா ?

சுந்: அவளிடம் இருப்பதெல்லாம் ஒரே மனசு, அதுதான் குழந்தை மனசு!

கருணு: கரெக்ட்! அந்தக் குழந்தை மனசு வாத்தியாரிடத்திலும் பாசத்தைக் காண்பிக்கச் சொல்லும். அப்படித்தானே?

சுந்: ஆமாம்!

கருணு: அந்த மாதிரிதான் என் மேல் அவள் வைத்திருக்கும் பாசத்தைப் போல் உங்க மேலேயும் வைச்சிருக்கா. ஏன்னு, அது குழந்தை மனசு பாருங்க (கேலியாக).

சுந்: ஐயா! இங்கேதான் நீங்க பெரிய தப்புப் பண்ணிட்டீங்க! உங்கள் மீது அவள் வைத்த அன்பு பெற்ற பாசமாகிறது. அந்நியனை என்மீது வைத்த அன்பு காதலாகிறது... காதல் முற்றி விட்டதனுல்தான் நான் அவளைக் கலியாணம் செய்து கொள்கிறேன் என்று சொல்கிறேன்.

கருணு: மிஸ்டர், சுந்தரம்! நான் உங்களே எவ்வளவோ மடக்கப் பார்த்தேன். முடியலே! உங்களுடைய அறிவுத் திறமையிருக்கே அது ஒன்னுக்கே என் பெண்ணே உங்களுக்குக் கொடுத்திடலாம். ஆனல்....?

சுந்தரம் (திடுக்கிட்டு): என்னங்க ஆனல்?

கருணு: காதலே மறந்துடு.

சுந்: என்னங்க சொல்றீங்க?

கருணு: ஆமாம், சுந்தரம்! இனிமேல் 'காதல் கீதல்'னு அலேயாமல் கல்யாணத்தைக் கட்டிக்கிட்டுச் சுகமாயிருங்க.

சுந்: அதைச் சொல்றீங்களா?. அப்படியே செய்துடறேன் மாமா!

[அவர் கால்களில் சுந்தரம் விழக் காட்சி முடிவடைகிறது.]

# கண்ணீர் வற்றியது



மைதிலி மௌனமாக அமர்ந்திருந்தாள். தரையில் நறுக்குவதற்கென்று வைத்திருந்த கதம்பச் சரத்தை அவள் எடுக்கவுமில்லை, நறுக்கவுமில்லை. அப்படியே சித்திரப்பாவை போல் அமர்ந்துவிட்டாள். அவளுடைய கண்கள் வேதனையினால் நிரம்பி ஒளி மங்கிவிட்டன. அவள் உதடு இலேசாகத் துடித்தது.

அவள் கணவன் அவளைக் கண்டதாகத் தெரியவில்லை. அவள் உணர்ச்சி வசப்பாட்டை அறிந்ததாகவும் இல்லை. அவன், தான் சொல்வதையே சொல்லிக் கொண்டிருந்தான்.

அவள் தலை நிமிராமல், பதில் சொல்லாமல் இருப்பது அவனுக்குச் சினத்தை மூட்டியது. நாற்காலியில் அவன் நிமிர்ந்து முன்னுக்கு நகர்ந்து உட்கார்ந்து கொண்டான். ஆள்காட்டி விரலால் அவள் உச்சந்தலையில் ஒரு தட்டுத் தட்டினான். "என்ன மைதிலி! எப்பொழுது புறப்படுகிறாய்? சொல், டிக்கட் வாங்கி வரட்டுமா? எழுந்திரு" என்றான்.

மைதிலி சாவதானமாக நிமிர்ந்தாள். புதுமையாக அவளைப் பார்த்தான் அவள் கணவன். வணங்கி வணங்கி, அடங்கி அடங்கிப் போகும் மைதிலி இன்று என்ன முறைப்புடன் பார்க்கத் தலைப்பட்டு விட்டாள்!

"என்ன?" என்று அதட்டினான் ஸ்ரீனிவாசன்.

"நான் போகவில்லை. நீங்கள் இங்கேயே எங்கேயாவது கடன் வாங்கிக் கொள்ளுங்கள்" என்றாள் அவள்.

"என்ன சொன்னாய்? என்ன சொன்னாய்?" என்று அதிக ஆத்திரத்துடன் கையை ஓங்கிக் கொண்டு அவளை நெருங்கினான் கணவன்.

அவள் வெடவெடக்கும் உடலுடன் அவன் முன் நின்றாள். ஆனால் அவள் எதிர்பார்த்தபடி அவன் அவளை அடிக்கவில்லை. கடுமையான முகத்துடன், "சரி, சரி, கிளம்பு!" என்றான் முடிவாக.

"நான்தான் சொன்னேனே....... நான் எப்படிப் போய்க் கேட்பேன்? எத்தனை தடவை கேட்பேன்? இனி என்னால் முடியாது. தயவுசெய்து என்னை அங்கே அனுப்பாதீர்கள். இத்தனை நாட்களில் ஒரு துளி அன்புகூட என்மீது உங்களுக்குத் தோன்றவில்லையா?" என்று கண்களில் நீர் மல்க, அவள் அருகே



# அநுத்தமா

வந்து அவன் இரு கைகளையும் பற்றிக்கொண்டு கெஞ்சினாள் மைதிலி.

''அன்புக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? அன்பில்லாமலா இப்பொழுது நான் பணம் கேட்கிறேன்? ஆயிரம் கேட்டேனா, இரண்டாயிரம் கேட்டேனா? எழுநூற்றைம்பது ரூபாய். உன் மாமாவுக்கு ஒரு பிரமாதமில்லை. நீ நல்ல பெண்ணாயிற்றே, புத்திசாலியாயிற்றே? போ, மைதிலி. அடம் பிடிக்காதே: இவ்வளவு மலிவாக அந்த நிலம் கிடைக்காது. பிறகு இதே இடத்தை ஏழாயிரத்துக்கு விற்று விடலாம்; அருமையான சந்தர்ப்பத்தை அசட்டுப் பிசாட்டென்று பிடிவாதம் பிடித்துக் கெடுத்து விடாதே'' என்று ஸ்ரீநிவாசன் நயமாகப் பேசி அவள் முகவாயை நிமிர்த்திக் கன்னத்தைத் தடவிக் கொடுத்தான்.

கணவன் கையை அவள் அகற்றிவிட்டாள். முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

ஸ்ரீனிவாசனின் முகம் கறுத்தது. ''அன்பில்லை என்று குற்றம் சாட்டுகிறாய். கனிவோடு தொட்டால் விலகிக் கொள்கிறாய்!''

''இந்தக் கனிவின் விலை எழுநூற்றைம்பதாக இருக்கிறதே!'' என்றாள் அவள்.

''என்ன சொல்கிறாய்? இன்றைக்கு உன்னை எந்தப் பிசாசு பிடித்து விட்டது? திருப்பித் திருப்பி வாயாடுகிறாயா? பல்லை உடைத்துக் கொடுத்து விடுவேன், நினைவிருக்கட்டும்.''

''நீங்கள் பல்லையே உடையுங்கள். என் நாக்கையே பிடுங்கி விடுங்கள். என்னால் இனி பணம் கேட்டுக்கொண்டு மாமா வீடு போக முடியாது'' என்றாள், அவள் தீர்மானமாக.

''அப்போ உனக்கு இருக்க இங்கே இடமும் கிடையாது: நினைவிருக்கட்டும். எந்த மாமா வீடு போக மதிப்புப் பார்க்கிறாயோ, அங்கேயே கிடக்க வேண்டியதுதான்!''

''உங்கள் மனம் கல்லா? கல்கூடக் கரைந்து மிருதுவாகி விடுகிறது. உங்களுக்கு வாழ்வின் மேன்மைகளே தெரியாதோ? ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கும் ஒரு மனிதன் ஆறு மாதத்துக்கு ஒரு முறை இப்படிப் பணம் கேட்பது உங்கள் மதிப்புக்குக் குறைவில்லையா? யோசித்துப் பார்க்க மாட்டீர்களா? பணம் ஒன்றுதானா உலகில் பிரதானம்?''

''ஆமாம். அது ஒன்றுதான். நீ கிளம்புகிறாயா, இல்லையா?''

''கிளம்புகிறேன்'' என்றாள் உயிரற்ற குரலில்.

தொட்டிலில் குழந்தை விழித்துக் கொண்டு விட்டது. அவள் அதைக் கையில் எடுத்துக் கொண்டாள். அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது; குழந்தை அதை அறியாமல் தன் குஞ்சு அதரங்களைக் குவித்து அந்த உப்பு நீரைத் துடைத்தது.

ஸ்ரீனிவாசன் அவள் துக்கத்தைப் பார்த்துச் சிரித்தான். அவனுக்கு அது மிகவும் வேடிக்கையாக இருந்தது.

''உன்னிடம் அன்பில்லை என்கிறாய். இதோ பார், நம் அன்பின் சின்னம்'' என்று கூறிக்கொண்டே அவன் தன் பிள்ளையைக் கை நீட்டி வாங்கிக் கொண்டான். பிள்ளைச் சுபாவத்துடன் அம்மகவு அவனிடம் தாவியது.

''அன்பின் சின்னமா இவன் — என் அடிமைத்தனத்தின் அடையாளமல்லவா? உங்கள் அன்பு எனக்குத்தான் பாக்கியமில்லை. பெற்ற பிள்ளைக்காவது உண்டா? பால் வாங்க மறுத்தீர்கள். மாமா மாடு வாங்கி அனுப்பினார். குழந்தைக்கு வயிற்றுக்குக் கொஞ்சம் பற்றுக் குறைவுடன் கன்றுக் குட்டிக்குக்கூட விடாமல் பாலை விற்றுப் பணமாக்குகிறீர்கள். பிள்ளையாரைக் கிள்ளி, பிள்ளையாருக்கே நைவேத்தியம் காட்டி விட்டு, அதை அவர் பார்ப்பதற்குள் வாயில் போட்டுக் கொள்ளும் சாமர்த்தியம் உங்கள் ஒருவருக்குத்தான் உண்டு.''

''அதற்கும் சாமர்த்தியம் வேண்டும், மைதிலி! சரி, — சரி, நாழிகை ஆகிறது. கிளம்பு'' என்று கூறிவிட்டு அவன் வண்டி பேசி வர, வெளியே போய் விட்டான்.

தன் நிலையைக் கண்டு வெறுப்பும், நிராசையினால் எழும்பிய கைப்பும், கணவன் குணத்தைக் கண்டு ஏளனமும் மைதிலியைக் குமுறக் குமுற அழ வைத்தன. அவள் கேவிக்கொண்டே தன் துணிமணிகளை எடுத்து வைத்துக் கொண்டாள். கைக்கூடை ஒன்றில் குழந்தைக்கு வேண்டியவற்றை அடுக்கினாள்.

வண்டி கொண்டுவரப் போன ஸ்ரீனிவாசன் வந்துவிட்டான். அவளைத் துரிதப்படுத்தி வண்டி ஏற்றினான். தன் பையுடன் குழந்தையின் கூடையை எடுக்கப் போன மனைவியைத் தடுத்தான். ''வேண்டாம், குழந்தை இங்கேயே இருக்கட்டும்.''

''என்னை விட்டு இருக்க மாட்டானே?'' என்று பரிதாபமாகக் கேட்டாள் மைதிலி.

''எல்லாம் இருப்பான்.''

''குழந்தையைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்கிறீர்களா?''

''சரி, சரி.''

''படுக்கையைப் பார்த்து உதறிப் போடுங்கள்.''

''உம்.''

''விளக்கு ஒன்று எரியட்டும். இருட்டில் பயப்படுவான்.''

''சரி, இந்த உபதேசமெல்லாம் இருக்கட்டும். ஒன்று நினைவு வைத்துக்கொள். பணத்துடன் வரவேண்டும். இல்லையேல், வரவே வேண்டாம்.''

''அப்படியானால் என் குழந்தையைக் கொடுங்கள். அங்கேயே இருக்க நேரிட்டால்....'' தன்னை மீறி வார்த்தைகள் அவள் நெஞ்சத்தினின்று வெடித்தன.

''எல்லாம் யோசித்துத்தான் அவனை வைத்திருக்கிறேன். திரும்பி வராமல் போய் விட்டால் நான் யாரை விட்டுப் பணம் கேட்பது?'' அவன் சிரித்தான் சுவாரசியமாக.

வெறுப்பு அவள் குருதியை நஞ்சாக்கியது. அவள் அருவருப்புடன் வண்டியில் ஏறினாள்.

இரயில் ஏறி மாமாவின் ஊரை அடைந்த மைதிலி இயந்திரம் போல் இறங்கி நடந்தாள். வீடு போய்ச் சேர வண்டிச் சத்தம் கூடக் கொடுக்காமல் அனுப்பியிருந்தான் கணவன். வழி நெடுக அவள் இல்லாத பல யோசனைகள் செய்துகொண்டே மாமாவின் வீட்டை அடைந்தாள்.

''எப்படியம்மா அதற்குள் வந்தாய்? என் கடிதம் உனக்குச் சேர்ந்துகூட இராதே'' என்று மாமா வியப்புடன் கேட்பதைச் செவியுற்று நிமிர்ந்தாள் மைதிலி. ஒரு விநாடி பதில் சொல்ல முடியாமல் விழித்தாள்.

''என்ன மைதிலி? உடம்பு சரியில்லையா?'' என்று மாமி பரிவுடன் விசாரித்தாள்.

''பாட்டி உனக்காகக் கேட்டுக்கொண்டே இருக்கிறாளடி'' என்று மாமாவின் பெண் பிரேமா மைதிலியின் செவியில் கூறினாள்.

''எப்படி வந்தாய்? குழந்தை எங்கே?'' என்று கேட்டார் மாமா.

''என்னவோ கனவு கண்டேன். உங்களைப் பார்க்க வேண்டும் போல இருந்தது. கிளம்பி வந்து விட்டேன். இன்று மாலையே திரும்ப வேண்டும். அவர் வெளியூர் போக வேண்டுமாம். குழந்தைக்கு அலைச்சல் என்று எடுத்து வரவில்லை'' என்றாள் மைதிலி.

''ரத்த பாசம், ரத்த பாசம்!'' என்று எல்லோரும் அதிசயப்பட்டார்கள்.

மைதிலி தன் பாட்டியின் அருகில் போய் அமர்ந்தாள். அந்தச் சருகு போன்ற கரத்தைத் தன் கன்னத்தில் வைத்தாள். உடல் குலுங்கக் கதறிக் கதறி அழுதாள்.

மைதிலி தன்னைச் சமாளித்துக் கொண்டு, பிறகு எல்லோரிடமும் பேசினாள். பாட்டி படுக்கையில் விழுந்து ஒரு வாரமாயிற்றாம். நினைவு தப்பி ஒரு நாளாயிற்றாம். தன் சுய நினைவு இருக்கும் வரையில் பேத்தியை அழைத்தாளாம்.

மாலை நேரம் நெருங்கவும் மைதிலி தன் மாமாவைத் தேடிச் சென்றாள். ''மாமா! என்னை ரயில் ஏற்றி விட்டு விடுகிறீர்களா?'' என்று கேட்டாள் அவள்.

''ஆகட்டும், என்ன அவசரம்? நாளைக்குப் போயேன்!'' என்றார் அவர்.

''குழந்தையை எடுத்துக் கொண்டு வந்து விட்டிருந்தால் பரவாயில்லை....'' என்று இழுத்தாள்.

''சரி, உன் அகமுடையானிடம் சொல்லி விட்டுக் குழந்தையையும் எடுத்து வந்துவிடு. பாட்டி வெகு நாள் இருக்க மாட்டாள்.''

''மாமா....!'' தயங்கினாள் மைதிலி.

''என்ன மைதிலி?''

''திரும்பிப் போக ரயில் சார்ஜ் கொண்டு வருகிற வழக்கமே இல்லை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே?''

''நீ கொண்டு வந்திருந்தாலும் நான் வாங்கிக்கொள்வேனா? அசடு. உன் புருஷன் பணத்தில் கருத்தாக இருப்பதை நீ தவறாக நினைக்கக் கூடாது. அதுவும் நல்லதுதானே? உன் அப்பா ஊதாரியாக வாரி இறைத்தது போதும். உன் அம்மாவைக் , கொன்று விட்டது அது.''

''பணம் ஒன்றுதான் அவருக்கு மதம், கொள்கை, புரிபடுகிற விஷயம் — எல்லாம்!''

''கிடக்கட்டும். உனக்கு ஒன்றும் குறைவில்லை. பிரேமாவுக்கு வீடு கட்டித் தந்திருப்பது போல் உனக்கும் வைத்திருக்கிறோம். உன் கணவனை நீ ஒன்றும் கேட்க வேண்டாம். உன் தகப்பனின் குணத்தைப் பார்த்து மனம் உடைந்த உன் பாட்டியும் அம்மாவும் உனக்குச் சேர வேண்டிய தொகையைப் பாட்டி பேரிலேயே வைத்திருக்கிறார்கள். பாதிச் சொத்து உன் அம்மாவுக்கும் உண்டே?''

''மாமா! உங்கள் அன்பு என்றும் இருந்தால் போதும். பெற்றோர் என்ற சொல்லுக்கே நீங்கள்தாம். எனக்கு வேறு ஆதாரம் கிடையாது.''

''அசடு. நீ வேறு, பிரேமா வேறு எனக்கு?''

மைதிலி மீண்டும் கதறினாள். பிறகு கிளம்பி விட்டாள்.

உள்ளே கூடத்தைக் கடக்கும்போது மாமியும் பிரேமாவும் பேசுவது கேட்டது. தன்னைக் குறித்துப் பேச்சு இருக்கவும் சற்று நிதானித்தாள் மைதிலி.

''மைதிலி அப்பாவுடன் எத்தனை நேரம் பேசுவாள், அம்மா? என்னோடு ஒரு நிமிஷம் கூட இருக்கப் போவதில்லை. கிளம்பிவிடுவாள்'' என்று சிணுங்கினாள் பிரேமா.

''அவள் என்ன செய்வாள், பாவம். அவள் கணவன் பணம் கேட்கச் சொல்லி

அனுப்பி விருப்பாள். உன் அப்பாவின் கையாலேயே அப்படி. பணம் பிடுங்கி மாப் பிள்ளைகளாக வந்து சேருவார்கள். மைதிலி யின் அப்பா வந்தக் கறந்தாயிற்று. இப் போது இவன் ஏற்பட்டிருக்கிறான்.''

மைதிலி தன் நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டு நடந்தாள். அவளைக் கண்டதும் பிரேமா ''என்னை மறந்தேவிட்டாயே! ஆமாம், குழந்தையை ஏன் கொண்டு வர வில்லை?'' என்று கேட்டாள்.

''குழந்தையைக் கொண்டு வந்தால், இங்கேயே தங்கிவிடப் போகிறேனே என்று அவருக்குப் பயம்! அவ்வளவு அன்பு!''

''நீ போய்த்தான் ஆக வேண்டுமா?''

''குழந்தைக்காகப் போய்த்தானே ஆக வேண்டும்'' என்றாள் மைதிலி. அவள் வாழ்க் கையின் குறிக்கோளே அதில் அடங்கியிருப் பதைப் பிரேமா அறிந்து கொண்டாளோ என்னவோ ?

திரும்பிப் போக நேரம் வரும்வரை தவித் தாள் அவள். கையில் பணமில்லாமல் திரும் பிப் போனால் கணவன் எப்படி நடந்து வாரோ என்று பயம்தான். ஆயினும், அவள் பொறுமை எல்லையைத் தாண்டிவிட்டது. வந்தது வரட்டும் என்று நினைத்து அவள் வெறுங் கையுடன் கிளம்பினாள்.

கார் வாசலில் நின்றது. மாமா, மாமி, பிரேமா வழியனுப்பினார்கள். மாமா பிள்ளை ரகுதான் வண்டியோட்ட அமர்ந்திருந்தான். வண்டி நகர்ந்ததும் மைதிலி அவனை நன்றி யுடன் பார்த்து, ''ரகு! நீதான் ரயிலேற்ற வருகிறாயா, நல்ல காலம்!'' என்றாள்.

''வேறு என்ன பாக்கியம் நீ எனக்கு விட்டு வைத்திருக்கிறாய் மைதிலி?'' என்று நேர்முகமாகக் கேட்டுவிட்டான் ரகு.

மைதிலி குழப்பமடைந்து தலை குனிந்து மௌனம் சாதித்தாள். ரகுவை அவள் மணக்க மறுத்துவிட்டாள்.

''ரகு பிரேமாவுக்கு மட்டுமா அண்ணன்? எனக்கும்தான்'' என்று அன்று சாமர்த்திய மாகப் பதிலளித்தாள் அவள். மற்றவர்கள் அதை ஏற்று அவளுக்கு வெளியே வரன் தேடி மணம் முடித்து வைத்தார்கள். ரகு மட்டும் அவளை மன்னிக்கவே இல்லை போலும். இல்லையேல் இன்று ஏன் அவ்வாறு பேசப் போகிறான்? அவள் கண்களில் நீர் கரந்தது.

ரகு பேசாமல் வண்டியைச் செலுத்தினான். மைதிலி திடீரென்று வண்டியை நிறுத்தச் சொன்னாள். ''பஸ் கிளம்புகிறது, ரகு. என்னை அதில் ஏற்றிவிடு. ஒரு மணி நேரம் முன்னாடி ஊருக்குப் போய்ச் சேர்ந்து விடு வேன்'' என்றாள்.

ரகு அரை மனத்துடன் அவளை பஸ்ஸில் ஏற்றி விட்டு, ''பத்திரமாகப் போவாயா, மைதிலி? நானே கொண்டு வந்து விட் டுமா?'' என்று பலமுறை கேட்டான்.

''வேண்டாம். நீ வந்தால் எங்களுக்கு ஒரு பிடி அரிசி, ஒரு வாய் பால் எல்லாம் செல வாகிவிடும்'' என்று சொல்லிக் கசப்பாகச் சிரித்தாள் அவள்.

''சின்ன ரகு எப்படி இருக்கிறான்?'' என்று பேச்சை மாற்றினான் ரகு.

''மாமனைப் போலவே அர்டாக அடம் பிடிக்கிறான்'' என்றாள் மைதிலி.

''மாமனுக்கு மட்டும் சமயத்தில் அடம் பிடிக்கத் தெரிந்திருந்தால்...?'' என்று முணு முணுத்தான் ரகு மனசுக்குள்.

பஸ் கிளம்பியது. மைதிலி ஓர் உறையை அவனிடம் தந்தாள். ''ரகு, இந்தக் கடிதம் உனக்கு மட்டும்தான். நீ வீட்டுக்குப் போன பிறகு பிரித்துப் படி'' என்றாள்.

ரகு அதை வாங்கியவுடன் வண்டியும் நகர்ந்துவிட்டது.

மைதிலி சிந்தனையுடன் வண்டியில் அமர்ந் திருந்தாள். கணவனைக் காணும் சந்தர்ப்பம் எப்படி இருக்குமோ என்று அவள் உள்ளூற நடுங்கினாள். அவள் வேதனையைச் சோதனை செய்வது போல் பஸ் வழியில் பழுதாகி விட்டது. தான் ரயிலில் போகாமல் இருந்து விட்டோமே என்று தவித்தாள் அவள்.

மீண்டும் வண்டி கிளம்பி, அவள் வீடு போய்ச் சேரும்போது கணவன் தொட்டிலை ஆட்டிக்கொண்டு இருந்தான். அவளைக் கண் டதும், ''ரயில் வந்து வெகு நேரம் ஆகி விட்டதே? ஏன் இத்தனை நேரம்?'' என்றான்.

''சீக்கிரம் வரவேண்டும் என்று பஸ்ஸில் வந்தேன். அது வழியில் பழுதாகி விட்டது; அதனால் நேரமாகி விட்டது'' என்றாள் மைதிலி மெதுவாக.

''அது சரி, எவ்வளவு தந்தார்கள்? பணம் எங்கே? செக்கா, டிராப்டா, நோட்டா?''

"எதுவும் இல்லை. கேட்க முடியவில்லை. பாட்டி மிகவும் ஆபத்தான நிலையில் இருக்கிறாள்" என்றாள் மைதிலி, நிதானமாக.

"சரி, நீ இனி இங்கு இருக்கத் தேவையில்லை. உன் பாட்டி செத்த பிறகு கேட்டு, பணத்தை வாங்கி வந்தால் போதும்."

"பாட்டி இறந்தவுடன் தந்தி வரும். பிறகு போகிறேன்" என்று பதில் அளித்து விட்டு அவள் சமையலறைக்குள் புகுந்தாள்.

ஆவேசம் வந்துவிட்டது ஸ்ரீனிவாசனுக்கு. அவன் வேகமாக வந்து அவள் தலைப் பின்னலினால் அவளைத் தரதரவென்று இழுத்து வாசற்பக்கம் கொண்டு போனான்.

மைதிலி திமிறினாள். "முடியாது. நான் திரும்பிப் போக மாட்டேன். எனக்கு வண்டியும் கிடையாது" என்றாள் அவள்.

"வண்டி இல்லாவிட்டால் தெருவில் கிட!"

"என் குழந்தையை எடுத்துப் போகிறேன்; விடுங்கள்."

"குழந்தையைத் தொடவிட மாட்டேன்."

மைதிலி தொட்டிலின் பக்கமாகப் பாய்ந்தாள். அதற்குள் மிருக வேகத்துடன் ஸ்ரீனிவாசன் அவளைத் தடுத்து வெளியே தள்ளினான். கதவைப் படீரென்று சாத்திக் கொண்டான். அந்த ஓசையில் குழந்தை வீறிட்டது. மைதிலி அப்பால் போய் விழுந்தாள். உடனே சமாளித்து எழுந்து வந்து கதவைத் தட்டினாள். "கதவைத் திறவுங்கள். குழந்தை பயந்து விட்டாள்" என்று அலறினாள். ஒன்றும் பதில் வரவில்லை. குழந்தையின் அழுகை குறைந்துவிட்டது.

அவள் மடமடவென்று இறங்கித் தெருவோடு நடந்து சென்றாள். தான் வரும் வழி நெடுகிலும் யோசித்து வைத்திருந்தபடிதான் எதுவும் நடந்தது. இலேசான முறுவல் அவள் அதரத்தில் விளையாடியது. குழந்தையின் குரல் செவியினுள்ளே எதிரொலித்தபோது சற்று அவள் நின்றாள். பிறகு உறுதி அவளை முடுக்கியது.

அவள் நேராகச் சென்றாள். பக்கத்துக் கத்திரித் தோட்டத்தின் நடை கிணறு அவளை அழைத்தது. பொக்கென்று ஒரு சத்தம் அந்த இருளைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டது.

மறுநாள் விடியற்காலையிலேயே அவள் உடலைப் பார்த்து எடுத்துக் கொண்டு வந்து விட்டனர். ஸ்ரீனிவாசன் திகைத்து நின்றான். மைதிலி உயிரையே மாய்த்துக்கொள்ளத் துணிவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

"காலையிலே கவலையைப் போடும்போதே பார்த்துவிட்டேனுங்க. நம்ப முடியவில்லை. அம்மா எப்படி அங்கே வந்தாங்க?" என்று கத்திரித் தோட்டக்காரன் கேட்டான்.

ஸ்ரீனிவாசன் குனிந்தபடியே தலையை மெல்ல ஆட்டினான். பிறகு பெருமூச்சு விட்டுக் கொண்டே மெதுவாகப் பேசினான். "நேற்று மாமா வீடு போயிருந்தாள். எட்டரை மணி ரயிலில் வருவதாகச் சொல்லியிருந்தாள். வரும் வழியில் தவறிவிட்டாளா?" என்றான்.

"அடடா! ஒரு நாளுமில்லாமல் நான் நேற்றுத்தான் வீட்டோடு எல்லோரையும் அழைத்துக் கொண்டு சினிமாவுக்குப் போனேனுங்க. ஏழு மணிக்கே வீட்டை விட்டுப் போனோம். உறவு முறைங்களைப் பார்த்து விட்டு வரும்போது மணி பன்னிரண்டு அடித்து விட்டதுங்க."

ஸ்ரீனிவாசன் கடவுளுக்கு நன்றி செலுத்தினான். பிறகு மனைவியின் அருகே போய் அமர்ந்தான். பிரமை பிடித்த அவன் நிலையைக் கண்டு எல்லோரும் பரிதாபப்பட்டனர்.

ஸ்ரீனிவாசன் தந்தி எழுதி ஒருவனிடம் கொடுத்தான். மற்றவர்கள் தெருப் பக்கமாக ஆளுக்கு ஒரு வேலையாக ஆவனவற்றைக் கவனிக்கச் சென்றனர். யாரோ பெண் பிள்ளைகள் குழந்தையை உள்ளே பார்த்துக் கொண்டனர்.

ஸ்ரீனிவாசன் மூளை வேலை செய்ய ஆரம்பித்தது. அப்பொழுதுதான் அவன் கைக் கடிகாரம் அவனுக்கு நினைவு வந்தது. முன் நாள் சண்டையில் கடிகாரம் விழுந்து உடைந்து விட்டது. அவன் அதை எடுத்தான். மணியைச் சரியாக எட்டே முக்கால் என்று வைத்து, யாரும் பார்க்கும் முன் மைதிலியின் கையில் கட்டிவிட்டான். அவள் பையை மறைவாக எடுத்துப் போட்டான்.

மைதிலியின் ஊதிப் போன முகத்தைப் பார்க்க முடியாமல் கண்களை மூடிக் கொண்டான். 'எப்படியும் மைதிலி வீட்டுக்கு வந்ததோ பேசியதோ தெரியக் கூடாது' என்று அவன் மூளையில் ரீங்காரமிட்ட வண்ணம் இருந்தது. தன் பிற்காலம் இருண்டு அவனைப் பயமுறுத்தியது. அவன் நிமிருவதற்குச் சரியாக வீட்டில் கூட்டம் குழுமி விட்டது. போலீசார் வந்தனர்; கேள்விகள் கேட்டனர். ரகு எங்கிருந்தோ அந்தச் சமயத்தில் வந்து சேர்ந்தான்.

"மைதிலி!" என்ற அவன் குரலுக்குப் பதிலளிக்கப் பலபேர் இருப்பதைக் கண்டான் ரகு. கற்சிலையாய் நின்றான். போலீசைக் கண்டதும் ரகு தன் மேல் சட்டையின் பையிலிருந்த கடிதத்தை உள் பக்கமாகத் திணித்துக் கொண்டான்.

"யார் ராஜா?" என்று கர்ஜித்தது சிங்கம்.

"தாங்கள்தான் பிரபோ!" என்றது முயல்.

"தாங்களே!" என்றது மான்.

"மன்னவன் சிங்கம்தான்!" என்றது குரங்கு.



"சிங்க ராஜாவுக்கு ஜே!" என்றது நரி.

யானை துதிக்கையால் சிங்கத்தைச் சுற்றி வளைத்துத் தூக்கி வீசி எறிந்தது.

உருண்டு புரண்டு எழுந்த சிங்கம், "யார் ராஜா என்ற கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியலேன்னு எனக்குத் தெரியாதுன்னு சொல்லிட்டுப் போகிறதுதானே? அதற்கு இப்படி ஆத்திரப்படுவானேன்?" என்றது.

> ஆத்மா என்பது அனந்தமான ஒன்றே — அதாவது நீங்களும் நானும் சகோதரர்கள் மட்டுமல்ல; ஒருவரே — என்ற உணர்வுதான் நன்னெறிகளின் நிரந்தரமான காப்பு.
>
> — ஸ்வாமி விவேகாநந்தர்

நடக்க வேண்டியவை நடந்தன. ரகு தானே வண்டியேற்றியதாகச் சொன்னதன் பேரிலும், மைதிலியின் கைக் கடிகாரத்தின் நின்றுபோன மணியை ஒப்பிட்டுப் பார்த்ததும் வழி தவறி விழுந்து விட்டதாகத் தீர்ப்பு கூறப்பட்டது.

"ரகு, நீ எப்படி வந்தாய்?" என்று கேட்டான் ஸ்ரீநிவாசன்.

"எங்கள் பாட்டி இறந்து விட்டாள் நேற்று இரவு. மைதிலியை அழைத்துப் போக வந்தேன்" என்றான் ரகு.

ரகு மட்டுமே மைதிலியின் தகனக் கிரியைக்கு இருக்க முடிந்தது. குழந்தையை எடுத்துக் கொண்டு போவதாக வெளியிட்டான் அவன்.

"பின்னே? நான் எப்படி வளர்க்க முடியும்? மைதிலி இருந்தும் பயனில்லை; இறந்தும் தொல்லை" என்றான் ஸ்ரீநிவாசன்.

ரகு அவனைக் கொன்று விடுபவன் போல் நெருங்கினான். பிறகு மனம் ஒடிந்து திரும்பி விட்டான். "பால் வாங்குகிற காசு, குழந்தைப் பராமரிப்புச் செலவு எல்லாம் மிச்சப்படுத்தி மாளிகை கட்டி நன்றாக வாழ்....!"

வார்த்தைகளைத் துப்பி விட்டு அவன் வீடு திரும்பினான்.

"என் வீடு தேடி வந்து என்னை அவமானப் படுத்துகிறாயா?"

"டேய், மைதிலி இருந்தும் உன்னைக் காட்டிக் கொடுக்கவில்லை, இறந்தும் உன்னைக் காப்பாற்றி விட்டாள். நினைவு வைத்துக் கொள். என் வழியே விட்டிருந்தால் உன் கையில் விலங்கைப் பூட்டி உன் கழுத்தில் கயிற்றை மாட்டி விருப்பேன். நடந்தது முழுதும் எனக்குத் தெரியும்!"

ஸ்ரீநிவாசன் ரகுவை ஏறிட்டுப் பார்த்தான். அவன் கோபத்தைக் கிளப்பினால் என்ன விவரம் வெளிவந்து விடுமோ என்று பயந்து மௌனமாக அவனை வழி அனுப்பி விட்டான்.

**பா**ட்டியின் அந்திமக் கிரியைகள் எல்லாம் முடிந்த பிறகு ஸ்ரீநிவாசன் ஒரு நாள் வந்தான், துக்கம் விசாரிக்க.

"பாட்டிக்கு நிறையச் சொத்து இருந்ததாமே?" என்று கேட்டான் அவன்.

"ஆமாம். அத்தனையும் மைதிலிக்கு என்று வைத்திருந்தாள்" என்று கூறும் போது மாமாவின் குரல் நடுங்கியது.

"அப்போ, இப்பொழுது அந்தச் சொத்து யாரைச் சேரும்? என் குழந்தையைத்தானே?"

"பாட்டிக்குப் பிறகு மைதிலி இறந்திருந்தால் அவள் வாரிசுக்குத்தான் சேரும். இப்பொழுது பாட்டியின் சொத்து என்னைத்தான் சேரும். இரண்டு மணி நேர வித்தியாசம்; பாட்டி பத்து மணிக்கு இறந்தாள். மைதிலி எட்டே முக்காலுக்கே இறந்து விட்டாளே?" என்று விளக்கினார் மாமா.

ஸ்ரீநிவாசனின் முகத்தைக் கண்டதும் ரகு காட்டமாகச் சிரித்தான். "ஆக்கப் பொறுத்தவனுக்கு ஆறப் பொறுக்கவில்லை அல்லவா? பொன் வாத்தை மயிரிழையில் இழந்து விட்டாய், பாவம்!" என்றான் ரகு.

"ரகு, பேசாமல் இருடா. நம் வீட்டைத் தேடி வந்தவர்களை அவ்வாறு பேசுவது பண்பல்ல. மேலும், நம் பொக்கிஷத்தை இழந்து நாம் நொந்திருக்கையில் இதென்ன பேச்சு?" என்றார் மாமா.

ஸ்ரீநிவாசன் உடனே எழுந்து வெளியே போய் விட்டான். பேயறைந்த முகத்துடன், "மயிரிழை, மயிரிழை" என்று பிதற்றிக் கொண்டே அவன் சென்றதாக ஊரில் கூறிக் கொண்டார்கள்.

"ரகு, உன்னை உடன் பிறந்த அண்ணனாக நேசித்த குழந்தை மறைந்து விட்டாள். ஒரு துளி கண்ணீர் உன்னிடமிருந்து வரவில்லை. கோபத்துக்கும் தாபத்துக்கும் உனக்கு மனமும் சமயமும் இருக்கின்றன!" என்று விசனத்தோடு கூறினார் ரகுவின் தகப்பனார்.

"என் கண்ணீர் வற்றி விட்டது, அப்பா!" என்று சுருக்கமாகக் கூறி விட்டு ரகு தனிமையை நாடிச் சென்று விட்டான். அங்கு மைதிலி தனக்கு எழுதின ஒரே கடிதத்தை மீண்டும் ஒருமுறை பிரித்துப் படித்தான்.

"ரகு,

நீ இதைப் படிப்பதற்குள் நான் என் வீடு சேர்ந்து விடுவேன். அங்கு நான் எதிர்பார்க்கும்படி நடக்குமேயானால், நீ வரும் போது என் பிரேதத்தைத்தான் காண்பாய். என் குழந்தையைக் காப்பாற்றும் பொறுப்பை உன்னிடம் ஒப்படைக்கிறேன். மனிதத் தன்மையே யில்லாத ரத்தம் ஓடுகிறது என் வாழ்க்கைத் துணைவரிடம். இனி எனக்கு அவரிடம் பிடிப்பு இராது. குழந்தையை அவர் கொன்று விடாமல் பார்த்துக் கொள். அவர் சுகமாக வாழட்டும். அவரை ஜெயிலுக்கு அனுப்பாதே, ரகு. 'பதி பக்தியா?' என்று கேட்பாய். உன்னதமான உணர்வெல்லாம் என்னிடம் இறந்து விட்டது. ஆயினும் அவரைக் காட்டிக் கொடுக்க எனக்கு மனமில்லை. காரணம், தன் தகப்பன் கொலைகாரனாக ஜெயிலுக்குப் போனதாக என் மகன் அவமானப் படக்கூடாது என்ற பிள்ளைப் பாசமாகத் தான் இருக்க வேண்டும்.

கடவுள் குறுக்கிட்டு என் இட்டம் சரிவர நிறைவேறா விட்டாலும் பழைய மைதிலி இறந்து விட்டிருப்பாள் என்பதில் ஐயமில்லை.

மைதிலி"

ரகு அதைப் படித்து முடிப்பதற்குள் கலங்கி விட்டான். மடை திறந்தாற் போல் கண்ணீர் பெருக்கெடுத்தது.

"என்னடா ரகு?"

"உலகத்தில் நீசமான பாம்புகள் இருக்கின்றன என்பது தெரியாமல் இல்லை. நேரே அவை புழுக்களை விழுங்கப் பார்க்கும்போது உடல் நடுங்குகிறது அப்பா" என்றான் ரகு, தன் கைக் கடிதத்தைத் தகப்பனாரின் கண்களிலிருந்து மறைத்துக் கொண்டே.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# நம்பிக்கைக்குப் பாத்திரமான 'டெட்டால்'

## கோடைக் கட்டிகளைத் தடுக்க உதவும்

வியர்வையே மென்மையான சருமத்தின் பரம விரோதி. அது வேர்க்குருவை உண்டாக்கி, அரிப்பையும் எரிச்சலையும் கொடுக்கும். சொறிவதன் மூலம் நன்மை இல்லை, தீமையே விளையும். ஆதலால், உலகிலேயே மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான கிருமி நாசினி 'டெட்டால்' கலந்த நீர் கொண்டு அதனைக் கழுவி, அரிப்பையும் எரிச்சலையும் தணியுங்கள். நீங்கள் குளிக்கும் நீரில் 'டெட்டால்' கலந்திருந்தால் வேர்க்குருவை ஆற்றுவதுடன் அது பரவுவதையோ அல்லது கோடைக் கட்டிகளாக மாறுவதையோ தடுக்க உதவும். உங்கள் சருமத்தில் வேர்க்குரு கண்டிருந்தால் அதனைக் குணப்படுத்தத் தவறாத கிருமிநாசினி 'டெட்டாலே'.




'டெட்டாலை' குளிக்கும் நீருடன் கலந்து உபயோகித்தால் நறுமணத்துடன் உற்சாகத்தையும் கொடுக்கும். தொண்டைப் புண்களைத் தடுப்பதற்கு 'டெட்டால்' கலந்த நீர் கொப்பளிக்க உதவும். தரைகளைக் கழுவும் போதோ அல்லது துடைக்கையிலோ நீரில் 'டெட்டாலை' கலந்து, உபயோகியுங்கள்.

JWTAEL 5163A

DL 11 அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon